# உங்கள் கேசத்திற்கு உரிய

# பராமரிப்பை அளிக்கிறீர்களா?

இராஸ்மிக் பர்ப்யூம்ட் கோகனட் ஹேர் ஆயில் உபயோகித்து அன்ருடம் பராமரித்துவந்தால் உங்கள் கேசம் அடர்த்தியாகவும், பளபளப்புடனும் மிளிரும். சுத்தமான தேங்காயெண்ணெயான இராஸ்மிக், கேசத்திற்கு போஷாக்களித்து சம்ரட்சிக்கும். உங்களுக்குப் பிடித்தமான—ரோஜா அல்லது மல்லிகை—நறு மணத்துடன் கிடைக்கும் சீசா ஒன்றை இன்றே வாங்கி உபயோகித்துப் பாருங்கள்.

Erasmic
PERFUMED
COCONUT
HAIR OIL
ROSE

## இராஸ்மிக்

பர்ப்யூம்ட்

கோகனட் ஹேர் ஆயில்

பரிசுத்
தத்திற்கு
உத்தரவாதம்

புதுமை
மாருமல்
நீடித்திருக்கும்

ECH. 3-50 TM

# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



# இந்த மகிழ்ச்சி நிறைந்த நன்னாட்களில் மர்பி ரேடியோ உங்கள் இல்லங்களில் குதூகலத்தை அளிக்கட்டும்!

மகிழ்ச்சி நிறைந்த மங்கள நன்னாட்களில் மலர்களும் திட களும் புனிதமான பண்டிகை தினங்களை வரவேற்கும். அத்தகைய நாட்களில், மர்பி லட்சோப லட்சம் மக்களுக் மகிழ்வூட்டுகிறது. உங்கள் இல்லங்களில் என்றும் இன்ப நிறைந்திருக்கவும், இனிய நாத களின் இன்னிசை எப்போதும் பொழியவும், எழில் பொங்க ஒரு **மர்பி ரேடியோ** வாங்குங்கள்

**இலவசம்!** உங்களுடைய புது மர்பி ரேடியோவுடன், உங்கள் கடைக்காரர் $12\frac{1}{2}'' \times 14\frac{1}{2}''$ அளவில் உங்களுக்குப் பிடித்த மானதும், உலகத்திலேயே மிக அழகான குழந்தைகளில் ஒன்றான ஒரு மர்பி குழந்தையின் வண்ணப் படத்தையும் கொடுப்பார்.

**பலரும் விரும்புவது!**

12 சிறந்த மாடல்கள்
ஏஸி, ஏஸி/டிஸி, டிரை பாட்ட
ரூ. 215லிருந்து ரூ. 575 வரை
வரிகள் தனி.

**murphy radio**

MU/48

மர்பி ரேடியோ



| | | |
|---|---|---|
| மலர் 18<br>இதழ் 13 | தமிழ்த்திரு நாடு தன்னைப்—பெற்ற<br>தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | விளம்பி௵<br>ஐப்பசி 10உ |

# பாகிஸ்தான் கற்பிக்கும் பாடம்-2

"பாகிஸ்தான் கற்பிக்கும் பாடம்" என்ற தலைப்பில் நாம் சென்ற வாரம் தலையங்கம் எழுதியிருந்தோம். அந்தப் பாடம் அந்துடன் முடிந்து போகாததால், நாம் இந்த வாரமும் தொடர்ந்து எழுத வேண்டியிருக்கிறது.

ஒரு நாட்டில் ராணுவத்தைச் சேர்ந்தவர்கள் ஆட்சிப் பொறுப்புக்கு வருகிறார்கள் என்றால், அவர்கள் தனிபெரும் செல்வாக்கு பெற்றவர்களாக இருப்பார்கள். ஆனால் பாகிஸ்தான் விஷயத்தில் அப்படிச் சொல்வதற்கில்லை.

பாகிஸ்தான் ஜனாதிபதியாக இருந்த மிர்ஸாவும், ஐயுப்கானும் அப்படியொன்றும் ஸ்டாலின் போன்றோ, ஹிட்லர் போன்றோ, முஸோலினி போன்றோ திறமை வாய்ந்த வீரர்கள் அல்ல. சாதாரண மக்கள். இவர்கள் இப்படித் திடீரென்று ஆட்சிப் பொறுப்பை எப்படி ஏற்றுக்கொள்ள முடிந்தது? மக்கள் எப்படி அங்கீகரித்திருக்கிறார்கள் என்பதைச் சற்று ஆராய்ந்தால் நாம் புரிந்துகொள்ள வேண்டிய விஷயங்கள் சில புலப்படும்.

இதற்கு நாம் நம் சுதந்திரப் போராட்ட காலத்துக்கே போக வேண்டும். இந்தியாவில் காங்கிரஸ் பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்துப் போராடி வந்தது. அதனால் இந்தியா பெற்ற சுதந்திரம், ஒரு அன்னிய ஆட்சியை எதிர்த்துப் போராடிப் பெற்ற சுதந்திரம். ஆனால் பாகிஸ்தானோ, ஒரு அன்னியனுடனும் சுதந்திரத்தைக் கோரிப் போராடவில்லை. காங்கிரஸுடன் ஓயாமல் சண்டை போட்டே ஒரு பிரிவினை ராஜ்யம் பெற்றார்கள். பாகிஸ்தான் பெறுவதில் தீவிர உணர்ச்சிகொண்டு போராடிய முஸ்லிம் லீக் பெருந் தலைவர்களாகிய ஜின்னாவும், லியாகத் அலிகானும் இருந்தவரை மக்கள் மதிப்பளித்து வாழ்ந்தார்கள். அவர்களுக்குப் பின் பாகிஸ்தானில் பதவிக்கு வந்தவர்கள் யாரும் தீவிர அரசியல் வீரர்கள் அல்ல. முஸ்லிம் லீகின் பாகிஸ்தான் கொள்கைக்கு எதிரியாக இருந்தவர்கள் கூடப் பிரதம மந்திரிகளாக இருந்திருக்கிறார்கள். இவர்களுக்குச் சொந்த முறையில் பெரிய கௌரவம் இல்லை; நல்லபடியாக ஆட்சி நடத்தும் திறமையுமில்லை. அதனால் ஊழல் மலிந்த ஆட்சியிலிருந்து சலிப்படைந்துபோன மக்கள் ராணுவ ஆட்சியை எதிர்க்கவில்லை. அரசியல் நடத்தியவர்கள் சிறைப்படுத்தப் பட்டார்கள் என்று கேள்விப்பட்டவுடன் ஒருவித ஆறுதலே அடைந்திருக்கிறார்கள்.

நல்லவேளையாக நம் நாட்டில் சுதந்திரப் போராட்ட காலத்தில் முன்னணியில் நின்ற பெருந் தலைவர்களே இன்றும் ஆட்சிப் பீடத்தில் இருக்கிறார்கள். அவர்களிடம் மக்களுக்கு அளவு கடந்த பக்தியிருக்கிறது. அந்த பக்தி, ஆட்சியில் காணும் குறைகளை மறைத்து விடுகிறது. அதனால் இந்தப் பெரும் தலைவர்கள் ஆட்சியிலிருக்கும்வரை நிர்வாகக் குறைகளைப் பொருட்படுத்தாமல் மக்கள் சகித்துக்கொண்டு போவார்கள்.

ஆனால் இவர்களுக்குப் பின் என்ன நிலைமை என்பது கேள்வி. ஆட்சிப் பொறுப்பை ஏற்கக் கூடியவர்கள் இரண்டாந்தர மூன்றாந்தர தலைவர்களாக இருப்பார்கள். ஆட்சியில் ஊழல் மலிந்தால் மக்கள் அதிருப்தி அடைவார்கள். அரசாங்கம் மாறவேண்டும் என்று விரும்புவார்கள்.

ஜனநாயகத்தில் பதவியிலிருக்கும் கட்சி, தவறு இழைத்தால் எச்சரிக்கை செய்து, சந்தர்ப்பம் வந்தால் ஆட்சியை ஏற்கும் அளவுக்கு பலம் பொருந்திய கட்சியாக ஒரு எதிர்க்கட்சி இருக்க வேண்டும். நம் நாட்டில் இன்று அந்தக் காப்பு நிலை

இல்லை; உள்ள எதிர்க் கட்சிகள் பிரிந்து போய் பலமற்றிருக்கின்றன. ஒன்றுபட்ட எதிர்ப்பு அளிக்கும் திறமையில்லை.

ஆகவே, இன்று காங்கிரஸ் கட்சியிலுள்ள பெருந் தலைவர்களுக்குப் பின், பாகிஸ்தானில் நடந்ததுபோல் ராணுவம் பதவிக்கு வரக் காரணமும் வாய்ப்பும் உண்டு.

பாகிஸ்தானில், ஜனாதிபதி மிர்ஸாவைப் பார்த்துச் சேனாதிபதி ஐயுப்கான் "நீங்கள் இப்பொழுது நடவடிக்கை எடுக்கப் போகிறீர்களா, இல்லையா? நீங்கள் நடவடிக்கை எடுக்கவில்லையென்றால், நாங்கள் ராணுவத்தினர் — நடவடிக்கை எடுத்து நிர்வாகத்தில் பெரு மாற்றங்கள் செய்யப் போகிறோம்!" என்று கூறினாராம். அதற்குமேல் தான் மிர்ஸா நடவடிக்கை எடுத்தாராம்.

ஆகையினால் பாகிஸ்தானில் நடந்தது ராணுவப் புரட்சியே. ராணுவத்தில் இந்த அபாயம் இருக்கிறபடியினால் ராணுவத்தை ஒழித்துவிட்டு ஆட்சி நடத்தலாமே என்று நினைக்கலாம். ராணுவம் இல்லாத ஆட்சி நடக்கும்படியான அமைதி உலகத்தில் ஏற்பட்டபின் ராணுவம் வேண்டியதில்லைதான். அதுவரையில் உள்நாட்டுத் தற்காப்புக்கு ஒரு பலமான ராணுவம் அவசியம்தான். ஆனபடியால் ஆட்சிக்கு ராணுவ அபாயம் இருந்துகொண்டேயிருக்கும்.

அரசியல் கட்சிகளிடையே கோஷ்டிச் சண்டைகளும் பூசல்களும் மலிந்து, நிர்வாகம் குட்டிச்சுவராகப் போனால்தான் கட்டுப்பாட்டுக்கு அடங்கி ஒன்றுபட்டு நிற்கும் ராணுவத்துக்குத் துணிச்சல் வரும்.

ராணுவத்துக்கு அரசியல் பழக்கம் கிடையாது. ஜனங்களுடைய உணர்ச்சிகளுக்கு மதிப்பளிக்கத் தெரியாது. முற்போக்கான திட்டங்கள் வகுத்துச் செழிப்பை வளர்க்க முடியாது. ஆகவே, ராணுவத் தலைவர்களின் ஆட்சியில் சொல்ல முடியாத இன்னல்களுக்கு விரைவில் மக்கள் ஆளாவார்கள். எல்லாச் சுதந்திரங்களும் பறிக்கப்படும்.

எங்கெல்லாம் ராணுவ ஆட்சி ஏற்பட்டிருக்கிறதோ அங்கெல்லாம் மேற்கூறிய நிலையில் தான் மக்கள் இருந்து வருகிறார்கள். முன்னிருந்த ஊழல் ஆட்சியைவிட, ராணுவ ஆட்சியில் ஓரளவு வாழ்க்கை வசதிகள் கிடைக்கின்றனவே என்று மக்கள் ஆரம்பத்தில் நினைக்கலாம். ஆனால் நாளடைவில் அவர்கள் பலப்பல உரிமைகளை இழந்து அடிமைகளாக வாழ வேண்டி நேரிடும்.

கம்யூனிஸ்ட் நாடுகளிலும் நேரடியான ராணுவ ஆட்சி இல்லாவிட்டாலும் மறைமுகமான கடும் ராணுவ ஆட்சிதான் நடைபெறுகிறது. ஆனால் அங்கு மக்கள் அமைதியாக இல்லையா என்று கேட்கலாம்.

---

## "இறங்கி வாருங்கள்!"




ஜெயப்பிரகாஷ் நாராயண் தேசத் தலைவர்களைச் சிறிது காலமாகிலும் பதவியை விட்டு விலகி வந்து மக்களிடையே சேவை செய்து அவர்கள் பிரச்னைகளைத் தெரிந்துகொள்ளச் சொல்கிறார்.




**ஒரிஸ்ஸா சர்க்கார் பதினான்கு இந்திய மொழிகளையும் அங்கீகரித்திருக்கிறது.**

---

மக்களிடையே நிலவும் அமைதி, ஆட்சியினிடம் அவர்களுக்குள்ள கிலியினால் ஏற்பட்டது. ஆட்சிக்கு மாறுபட்ட கருத்தைத் தெரிவித்தவர்கள் கடுமையான தண்டனைகளுக்கு உள்ளாக்கப்படுவதைப் பார்த்துப் பீதியடைந்து வாயில்லாப் பூச்சிகளாக இருக்கிறார்கள்.

ஜனங்கள் அடங்கி ஒடுங்கி இப்படியெல்லாம் கஷ்டப்பட்டால் எதிர்காலத்தில் உலகில் எங்கும் இல்லாத சுவர்க்க பூமியை இங்கு காணலாம் என்று கம்யூனிஸ்ட் அரசாங்கங்கள் —மக்கள் அடங்கி ஒடுங்கியிருப்பதற்காகப் பிரசாரம் வேறு நடத்துகிறார்கள்.

பலமான எதிர்க் கட்சி இல்லாததால் ராணுவ ஆட்சி வந்தால், அந்த ராணுவ ஆட்சியும் பயங்கர உருவம் எடுத்தால் என்ன செய்வது என்ற கேள்வி வருகிறது!

இதற்கு ஒரே ஒரு வழி காந்தி மகான் காட்டிய வழிதான். ஒத்துழையாமைதான். ராணுவத்தின் துப்பாக்கிக்கும், குண்டுக்கும் பயப்படாமல் அஞ்சாநெஞ்சுடன் மக்கள் ஒருமுகமாகத் திண்ணென்று நின்றால், ராணுவத்தின் கை ஓங்க முடியாது!

இந்த ஒத்துழையாமைக்கு, அளவு கடந்த மன உறுதி வேண்டும். சத்தியத்தில் நம்பிக்கை வேண்டும். நேர்மையில் நிலைக்கும் நெஞ்சுரம் வேண்டும். இப்படிப்பட்ட மக்கள் உள்ள சமுதாயத்தில் 'ஒரு கட்சி எதேச்சாதிகாரம்' கூட ஊழல்பட்டுப் போகாது.

முடியரசு இருந்த காலத்தில் மன்னவன் எப்படியோ, மன்னுயிர் அப்படி என்றிருந்தது.

குடியரசு காலத்தில் குடிகள் எப்படியோ, அப்படியே ஜனநாயகத்தின் நிர்வாகம் இருக்கும். தைரியமும், நியாயமும், சத்தியமும் மக்கள் துறந்து விட்டால் ஆட்சியில் ஊழல் மலியும். ஆகவே ராணுவ ஆட்சி வராமலிருக்கவேண்டுமானால் குடிகள் அனைவரும் நேர்மைசீலர்களாக இருந்தாக வேண்டும்.

நேர்மையும் சீலமும் கல்லூரியில் படித்தோ ஆராய்ச்சி செய்தோ பெறுவதல்ல!

இதைச் சமுதாயத்துக்குத் தெய்வ வழிபாடு ஒன்றுதான் அளிக்கும்.

மதப் பூசல்களைக் கண்டு பயந்து நமது அரசியல் முறை மதச்சார்பற்ற முறையாகி விட்டது. அக்காரணத்தினால் மனித மனத்தைப் பண்படுத்தும் வாய்ப்பு அரசியல் முறையில் இல்லாமற் போய்விட்டது.

நமது நாட்டில் இந்துக்கள், முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள் எல்லாரும் இருக்கிறார்கள். ஒரு மதத்திலும் பிறக்காதவன் என்ற நிலை இந்த நாட்டில் கிடையாது. ஆகவே, அவரவர்கள் தங்கள் தங்கள் மதக் கோட்பாடுகளைக் கடைப்பிடித்து வருவதற்கு அரசாங்கம் நல்ல வசதி செய்து தரவேண்டும். அப்படிச் செய்து வந்தால், பாபத்துக்கு அஞ்சுவதும், அக்கிரமம் செய்வோரைக் கண்டு எதிர்ப்பதும் அதற்கு வேண்டிய துணிச்சலும் பிறக்கும்.

அக்கிரமத்தைக் கண்டு எதிர்க்கும் துணிச்சல் நம் நாட்டில் பத்து வருஷங்களுக்கு முன் இருந்ததைவிடக் குறைந்து போய்விட்டது.

எவ்வளவு பெரிய அரசியல் பிரச்னையைத் தீர்க்க வேண்டியிருந்தாலும், காந்தி மகான் காலையும் மாலையும் தெய்வத்தை மறந்ததில்லை. தெய்வ பக்தியோடு கலந்த அரசியலையே அவர் புகட்டி வந்தார். அதை இழந்ததே நம் பிரச்னைகளுக்குக் காரணமாக இருக்கிறது!

# காங்கிரஸும் நிலப்பிரச்னையும்

**ஹை**தராபாத்தில் கூட விருக்கும் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி, மீண்டும் பழைய பல்லவியே பாடப் போகிறது என்று கேள்விப்படுகிறோம். அதைப் பாடி என்ன பயன் விளையப் போகிறது என்பதுதான் நமக்குத் தெரியவில்லை.

நிலச் சீர்திருத்தங்கள், ராஜ்ய சர்க்கார்கள் அமுல் நடத்தவில்லை என்பதற்காக தேபர், பந்த், மொரார்ஜி என்ற மூன்று பெரும் தலைவர்கள் கொண்ட கமிட்டி சில நாட்களுக்குமுன் நியமிக்கப்பட்டதல்லவா? இந்தப் பெரிய கமிட்டி புதிதாக ஏதோ செய்துவிடப் போகிறது என்று நாம் எதிர்பார்க்கவில்லை. இருந்தாலும், பெரிய தலைவர்கள் இந்தப் பிரச்னையைச் சற்றுச் சிரத்தையோடு கவனிக்க மாட்டார்களா என்று எண்ணி வந்தோம். ஆனால், 'பழைய சீர்திருத்தங்களே சிறந்தது. அதை அப்படியே அமுல் நடத்திவிட வேண்டியதுதான்' என்ற முடிவுக்கு அவர்கள் வந்திருக்கிறார்கள். இதையே அ. இ. கா. க. கூட்டத்தில் பாடப் போகிறார்களாம்.

நிலமுடையவனுக்கு நிலம் சொந்தமாக இருக்க வேண்டும். அதைப் பறிக்கும் எந்த நிலச் சீர்திருத்தமும் பயனளிக்காது. சொந்தக்காரர்களும், விவசாயிகளும் செய்துகொள்ளும் ஒப்பந்தங்களுக்கு மதிப்புத்தரவேண்டும். பரஸ்பர ஒப்பந்தங்கள் நீதிமன்றங்களில் காப்பாற்றப்பட வேண்டும். ஒப்பந்தங்களைப் புறக்கணித்துவிட்டுச் சட்டங்களைச் செய்து, சொந்தக்காரர்களுக்கும் விவசாயிகளுக்கும் பூசல் விளைவிக்கக்கூடாது. ஒப்பந்தங்கள் காப்பாற்றப்பட வேண்டும் என்று காங்கிரஸ் பெரும் தலைவர்கள் வற்புறுத்தினால் நில உரிமை பெற்றவர்களும் உழுது பாடுபடுவோர்களும் எல்லோரும் நிலத்தில் கவனம் செலுத்துவார்கள். இவை செய்தாலன்றி விளைவு பெருகுவதற்கு வழியில்லை. உரிமைகளைப் பறி முதல் செய்வதனாலும் நியாயமாகச் செய்து கொள்ளப்படும் ஒப்பந்தங்களை விட்டு விட்டுச் சட்ட முறையிலேயே பரஸ்பர உரிமைகளை வகுத்து விடலாம் என்று எண்ணிச் செய்வதனாலும் விளைவு பெருகாது.

# வீர வணக்கம்

**க**ட்டபொம்மன் தூக்கிலிடப்பட்ட நாளைத் தமிழரகக் கட்சியினரின் முயற்சியினால் பொதுமக்கள் திருநாளாக வெகு விமரிசையாகக் கொண்டாடினார்கள்.

பிரிட்டிஷார் வர்த்தகக் கம்பெனியாராக இந்த நாட்டில் புகுந்து பேதமும் பல சூழ்ச்சிகளும் செய்து, நாட்டைக் கைப்பற்றி வந்த காலத்தில் கட்டபொம்மன் தீரத்துடன் எதிர்த்தான். எதிர்த்து அதன் பயனாகவும் அவன் நம்பிய சிற்றரசர்களுடைய துரோகத்தினாலும் பாஞ்சாலங் குறிச்சி மாவீரன் கட்டபொம்மன் உயிர் இழந்தான். இரண்டு நூற்றாண்டுகளாகத் தென்பாண்டி மக்கள் நாட்டுப் பாடல்களில் அவன் வீரத்தையும் புகழையும் போற்றிப் பாடி வந்திருக்கிறார்கள். இன்றும் தென்பாண்டி நாட்டு மக்கள் பாஞ்சாலங் குறிச்சி கோட்டை மண்ணைப் பாலில் கரைத்துக் குழந்தைகளுக்கு ஊட்டினால் குழந்தைகள் வீரர்களாகத் திகழ்வார்கள் என்று கூட நம்பிச் செய்து வருகிறார்கள்.

பிரிட்டிஷாரும், சுதந்திர உணர்ச்சியை அடக்கி விடுவதற்குக் கட்டபொம்மன் பாடல்களைப் பறிமுதல் செய்தும் அழித்தும் இருக்கின்றனர்.

கட்டபொம்மன் பெருவீரன் என்பதில் ஐயமில்லை. சுதந்திரத்துக்காக உயிர் இழந்த வீரர்களை வணங்குவது தேச பக்தியையும் ஒற்றுமையையும் காக்கும். புகழுக்குரிய முன்னோர்களை வணங்குவது தெய்வவழிபாடாகும்.

# கிருஷ்ண (மேன)ன் தூது

**அ**மெரிக்காவுக்குப் பெரிய அளவில் கடன்பட்டு நின்றபோதிலும், வி. கே. கிருஷ்ணமேனன் அவர்கள் அணுகுண்டு விஷயத்தில், அமெரிக்கக் கொள்கைகளை எதிர்த்து, தீவிர வாதம் செய்து கொண்டு வருகிறார். முயற்சியுடையார் இகழ்ச்சி அடையார். கொள்கைகளை நெகிழ விடாமல், அக்கிரமங்களை விளக்கிக் காட்ட ஆண்டவன் துணைபுரிவானாக. தாட்சிண்யத்துக்கு உட்பட்டுப்போனால் பல சிக்கல்கள் நேரும். அவற்றினின்று தப்புவதற்கு ஆண்டவன் துணை வேண்டும். மற்ற ராணுவப் பொது பரிகரணப் பிரச்னைகளையும் சோதனை வெடிகள் பிரச்னையையும் பிணைத்துக் குழப்பாமல் இந்திய அரசாங்கத்தின் கொள்கையைப் பின்பற்றிச் சோதனை வெடிகள் பிரச்னையில் வெற்றி பெறவேண்டும்.

# அருள் வாக்கு

சென்ற 2500 ஆண்டுகளில் நம் நாட்டில் பல்வேறு சமயங்கள் தோன்றியிருக்கின்றன. புத்த மதம், கிறிஸ்தவ மதம், இஸ்லாமிய மதம் இப்படிப் பல வகை உள்ளன. இவைகளுக்கெல்லாம் இறுதி லட்சியம் ஒன்றே. அந்தந்த சமயத்தைப் பின்பற்றுகிறவர்களுக்கு அந்தந்த மத சம்பிரதாயத்துக்கேற்ப, சாசுவதமான இன்ப நிலையை எய்த வழிகாட்டுவது. இந்த மதங்களை ஸ்தாபித்த சமய குரவர்கள் எல்லாருமே இம்மாதிரி ஒரே லட்சியத்துடன்தான் அந்தந்த மதங்களை ஆரம்பித்து வைத்து நிலைக்கச் செய்தனர். இம்மாதிரி ஒரே மதத்தைப் பின்பற்றுபவர்கள் பல நாடுகளில் இருக்கலாம். ஒரே நாட்டிலுள்ளவர்கள் பல்வேறு மதங்களைப் பின்பற்றுபவர்களாகவும் இருக்கலாம். பாரத நாடு உலகத்திலுள்ள எல்லா மதங்களுக்கும் புகலிடமாக இருந்து வருகிறது. அதுதான் நமது நாட்டின் சிறப்பு. கடவுள் என்பதே இல்லை: மதம், சமயம் என்பதெல்லாம் புரட்டு என்று சொல்லுபவர்களுக்கும் நமது நாடு இடமளிக்கிறது.

இப்படித் தோன்றிய மதங்களெல்லாம் 2500 ஆண்டுகளுக்குட்பட்டே தோன்றியவை. இந்தக் காலத்துக்கு முன் எத்தனை மதங்கள் வழக்கத்தில் இருந்தன? ஒரே மதம் இருந்ததா? அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட மதங்கள் இருந்தனவா?

நமது சாஸ்திரங்கள் பிரகாரம் நம் நாட்டில் ஒன்றுக்கொன்று மாறுபட்ட ஐந்து தத்துவ மார்க்கங்கள் இருந்தன என்று தெரிகிறது. இவ்வைந்தும் வேதங்களையே மூலமாகக் கொண்டிருந்தன. இவைமுறையே சாங்க்யம், யோகம், பாஞ்சராத்ரம், வேதம், பாசுபதம் என்று மகாபாரதத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. இவற்றைக் குறிப்பிடும் சுலோகம் ஒன்று அதில் காணப்படுகிறது. இந்த சுலோகத்தின் விசேஷ அம்சம் என்னவென்றால் இந்த ஐந்து மார்க்கங்களும் உலக க்ஷேமத்தின் பொருட்டு ஏற்பட்டிருப்பதால், இவற்றில் ஒன்றைக்கூட நசித்துப் போகும்படி விடக் கூடாது. அது நசித்துப் போவதற்கான எந்தக் காரியமும் செய்யக் கூடாது என்று சொல்லியிருப்பதுதான். ஏன் அவ்வாறு சொல்லியிருக்கிறது? இவை ஒவ்வொன்றும் "ஸத்யம்" என்ற உண்மைப் பொருளை உணர்த்துவதுதான் இதற்குக் காரணம். மேலும் இவ்வைந்து மார்க்கங்களும் 'ஸத்ய'ப் பொருளைக் கூறினாலும் வேதத்தைமட்டும் "ஸத்யதரமா"க அதாவது மற்றதைக் காட்டிலும் உயர்ந்த ஸத்யப் பொருளை உணர்த்துவதாகக் கருதப்படுகிறது.

இப்படி வெவ்வேறான ஐந்து சமய மார்க்கங்களுமே வேதத்தை ஆதியாகக் கொண்டு அதிலிருந்தே கிளைத்ததென்றால் வேதங்களே போதாதா? ஐந்து வெவ்வேறு மார்க்கங்கள் எதற்காக என்ற கேள்வி எழுகிறது! இதற்கு விடை புஷ்பதந்தர் என்ற கவி இயற்றிய சிவ மஹிம்ன ஸ்தோத்ரம் என்ற துதிப்பாடல்களில் கூறப்பட்டிருக்கிறது. அதில் முக்கியமான ஒரு சுலோகத்தின் கருத்தை மட்டும் இங்கே சொன்னால் போதும்.

மானிடர்களின் ருசிகள் பல்வேறு வகையாக இருப்பதால், கடவுளை அடைய வேண்டிய மார்க்கங்களும் வெவ்வேறாக இருந்தால்தான் ஒவ்வொருவனும் தனக்கு இஷ்டப்பட்ட மார்க்கத்தைப் பின்பற்றி நற்கதியை அடைய முடியும் என்று ஒரு சுலோகத்தில் சொல்லியிருக்கிறது. சாங்கியம், யோகம், வேதம் முதலியவை கூறும் வழிகள் கடினமானவை என்று ஒருவனுக்குத் தோன்றினால் அவன் பாஞ்சராத்ரம் அல்லது பாசுபதம் என்ற இரண்டு மார்க்கங்களில் கூறப்பட்டுள்ள பக்தியை மேற்கொண்டு பலனடையலாம். வெவ்வேறு நதிகள் பல திசைகளில் ஓடிச் சென்றாலும் முடிவில் ஒரே இடமாகிய சமுத்திரத்தைத்தான் அடைகின்றன. சமுத்திரமும் எத்தனை நதிகள் வந்து தன்னை அடைந்தாலும் அவற்றையெல்லாம் வரவேற்கத் தயாராக இருக்கிறது. அதே போல் பரம்பொருளையடையும் வழிகள் வெவ்வேறு பாதையில் செல்லுவது போல் தோன்றினாலும் ஒவ்வொரு பாதையின் முடிவிலும் ஆண்டவன் அந்த வழியை சிரத்தையுடன் பின்பற்றி வரும் ஒவ்வொருவனையும் ஆட்கொண்டு தன்னுள் ஐக்கியப்படுத்திக் கொள்ளத் தயாராகக் காட்சியளிக்கிறான். அதனால்தான் மகாபாரதத்தில் இந்த ஐந்து மார்க்கங்களில் ஒன்றைக் கூட நசித்துப் போகும்படி செய்யக் கூடாது என்று சொல்லியிருக்கிறது.

ஸ்ரீ சங்கராச்சாரியார் ◇ காஞ்சி காமகோடி பீடம்

# போராட்டம் வலுக்கிறது!

கொழும்பு, அக்டோபர், 18உ.

அரசாங்கத்தின் அநீதியான சட்டத்தை எதிர்த்துப் போராட்டம் நடத்திய இரு தமிழரசுக் கட்சிப் பிரமுகர்கள் இவ்வாரம் தங்களுக்கு விதிக்கப்பட்ட அபராதத் தொகையைச் செலுத்த மறுத்துச் சிறை புகுந்தார்கள்.

சென்ற ஏப்ரல், மே மாதங்களில் தமிழரசுக் கட்சியினர் வடக்கு, கிழக்கு மாகாணங்களில் சிங்கள ஸ்ரீ எதிர்ப்புப் போராட்டம் நடத்தியதும் அரசாங்க பஸ்களின் இலக்கத் தகடுகளிலிருந்த சிங்கள ஸ்ரீ—எழுத்துக்களைத் தார்பூசி அழித்து விட்டு, அந்த இடங்களில் தமிழ் ஸ்ரீ எழுத்துக்களை எழுதியதையும் இதைப் பின்பற்றிச் சிங்களப் பகுதிகளில் தமிழ் அழிப்பு இயக்கமும் தமிழ்க் கடைகளைத் தாக்கிச் சூறையாடும் இயக்கமும் நடைபெற்று வகுப்புத் துவேஷம் கட்டவிழ்த்து விடப்பட்டதும் வாசக நேயர்களுக்கு நினைவிருக்கலாம். சிங்கள எழுத்துக்களை அழித்த தமிழ்த் தலைவர்கள் மீது அரசாங்க பஸ்களுக்குச் சேதமிழைத்ததாக அப்போது வழக்குகள் தாக்கல் செய்யப்பட்டிருந்தன. கலக நிலைமை காரணமாக அந்த வழக்குகள் ஒத்தி வைக்கப்பட்டிருந்தன. அவை இப்போது ஒவ்வொன்றாக விசாரிக்கப்பட்டுப் பட்டுவாடாச் செய்யப்படுகின்றன.

தமிழரசுக் கட்சி வாலிப முன்னணித் தலைவரான திரு அமிர்தலிங்கம், செனட்டர் ஜி. நெல்லையா ஆகியவர்கள்மீது தாக்கல் செய்யப்பட்ட வழக்குகள் இவ்வாரம் விசாரணைக்கு எடுக்கப்பட்டபோது தாங்கள் குற்றவாளிகள் அல்லவென்றும் தமிழ் பேசும் மக்களின் அடிப்படை மொழி உரிமையை நிலைநிறுத்துவதற்காகவே சிங்களஎழுத்துக்களை அழித்துத் தமிழ் எழுத்துக்களை எழுதியதாகவும் அவர்கள் கோர்ட்டில் தெரிவித்துக் கொண்டார்கள். அவர்களுடைய இலட்சியம் அரசாங்க பஸ்களுக்குச் சேதம் விளைவிப்பதல்ல என்பதையும் ஒரு உன்னதமான இலட்சியத்துடனேயே சிங்கள எழுத்துக்களை அழிக்கும் இயக்கத்தில் இறங்கினார்களென்பதையும் நீதிபதி ஒப்புக்கொண்டார். அதே சமயம் சட்டத்தின் முன்னிலையில் அவர்கள் குற்றவாளிகளே என்றும் சட்டம் நியாயமானதா இல்லையா என்பதைத் தீர்மானிக்கும் உரிமை அந்தக் கோர்ட்டுக்கு இல்லையென்றும் பார்லிமெண்ட் சபை நிறைவேற்றியசட்டத்தை அமுல் நடத்துவதே கோர்ட்டாரின் வேலையென்றும் நீதிபதி குறிப்பிட்டார். எதிரிகள் இருவருக்கும் ரூ. 25 அபராதமும் அபராதத் தொகையைச் செலுத்தத் தவறினால் இரண்டு வாரச் சிறைத் தண்டனையும் நீதிபதி விதித்தார். தமிழ் மக்கள் சுதந்திரமாக வாழ முடியாத நாட்டில் வெளியிலே இருப்பதை விடச் சிறையில் இருப்பதே மேலானதென்று சொல்லித் தமிழ்த் தலைவர்கள் அபராதம் செலுத்த மறுத்துச் சிறை புகுந்தார்கள். அவர்களைச் சிறைக்கு அழைத்துச் செல்லப்படுகையில் ஒரு உருக்கமான சம்பவம் நடைபெற்றது. திரு அமிர்தலிங்கத்தின் இளம் மனைவியாரிடம் அவரது சிறு குழந்தை 'அப்பா எங்கே போகிறார்? ஏன் போகிறார்' என்று கேள்விகளை அடுக்கியது. 'உன் அப்பா சிறையில் கல் உடைக்கப் போகிறார்' என்று திருமதி அமிர்தலிங்கம் அந்தப் பால்மணம் மாறாத பச்சிளங் குழந்தைக்குப் பதிலளித்துத் தேற்றியது கல் மனத்தையும் கரைப்பதாயிருந்தது.

இதேபோன்ற சிங்கள ஸ்ரீ எதிர்ப்புப் போராட்ட வழக்குகளின் கீழ் பல இடங்களிலும் தமிழர்கள் அபராதம் செலுத்த மறுத்துச் சிறை புகுந்து வருகிறார்கள்.

நிதி மந்திரியின் புதிய வரி விதிப்பு யோசனைகள் அமுல் நடத்தப்பட்டால் நாட்டில்மிகப் பெரிய பொருளாதார நெருக்கடி உருவாகி, ரூபாயின் மதிப்பைச் சரிபாதியாகக் குறைக்க நேரிடலாமென்று தேசிய சேவா மந்திரி ஒரு கடுமையான எச்சரிக்கையை விடுத்திருக்கிறார். முன்யோசனையற்ற இந்த வரிவிதிப்பு ஏற்பாடுகளை உடனே வாபஸ் வாங்க வேண்டுமென்றும் அவர் கோரியிருக்கிறார். இது சம்பந்தமாக நடக்கும் சர்ச்சையில் ஒரு மந்திரி மற்றொரு மந்திரியைப் பகிரங்கமாகவும் தாறுமாறாகவும் பொது மேடைகளில் தாக்கி வருகின்றனர்; மந்திரிசபை கூட்டுப் பொறுப்பு ஆட்சியென்பது கேலிக் கூத்தாகி வருவதுடன் மந்திரி சபையிலுள்ள பிளவும் அம்பலப்பட்டு வருகிறது. இம்மாதிரி ஒருவர் குடுமியை மற்றொருவர் பிடித்து ஆட்டும் மந்திரி சபை எவ்வளவு காலத்துக்குப் பதவியில் நீடித்திருக்க முடியுமென்பது தெரியவில்லை. வெகு விரைவில் அரசாங்கம் வீழ்ந்து விடுமென்றும், பொதுத் தேர்தல் எந்த நிமிடமும் நடைபெறலாமென்றும் நினைத்து எதிர்க் கட்சிகள் தேர்தல் பிரசாரங்களில் ஏற்கனவே தீவிரமாக ஈடுபட ஆரம்பித்து விட்டன. மந்திரிகள் தங்களுக்குள் அடித்துக் கொண்டு பதவிகளிலிருந்து விலகாவிட்டால் கூட நாட்டின் பொருளாதார நிலைமை குட்டிச்சுவராகி வருவதால் அதுவே அரசாங்கத்தைப் பதவியிலிருந்து விரட்டி விடுமென்று ராஜீய வட்டாரங்கள் எதிர்பார்க்கின்றன.

—ரஜனி

## கலைமகள் வணக்கம்

நவராத்திரி விழாவைத் தமிழ் மக்கள் வெகு விமரிசையாகக் கொண்டாடியிருப்பார்கள். வீடுதோறும் படிக்கட்டுப் பொம்மைகளை அடுக்கிக் கொலு வைத்திருப்பார்கள். குழந்தைகள் பாடு ஒரே குதூகலமாக இருந்திருக்கும். பத்து நாட்களும் போனதே தெரியாமல் வீடு வீடாகச் சென்று கொலுவைப் பார்ப்பதும் கொலுவுக்கு அழைப்பதும், தங்கள் சங்கீதத் திறமையைப் பிரபலப்படுத்துவதுமாக இருந்திருப்பார்கள். அந்தக் குதூகலமும் சிரிப்பும் மகிழ்ச்சியும் அவர்களுடைய வாழ்க்கையில் தொடர்ந்திருக்கவேண்டும் என்று வாழ்த்துகிறோம்.

கலைகளுக்கு அதிதேவதையான சரஸ்வதியின் அருள் கல்கி வாசக நேயர்களுடைய குடும்பங்களுக்குப் பரிபூரணமாக இருக்கப் பிரார்த்திக்கிறோம். கலைதேவி நடனமாடி மகிழும் காட்சியை, இவ்வார அட்டைச் சித்திரமாக அளிக்கிறார் ஓவியக் கலைஞர் ராஜம்.

# வள்ளுவர் வாசகம்

ராஜாஜி

53

இம்மையில் சுகத்துக்குப் பொருள் வேண்டும் அல்லவா? அதுவே போல் பேரின்ப உலகமாகிய மேலுலகம் வேண்டுமாயின் அருள் வேண்டும். பொருள் இன்றி இவ்வுலகம் இல்லை; அருள் இன்றி அவ்வுலகம் இல்லை என்கிறார் முனிவர். அருளை மறுமைக்குச் செல்வம்.

**அருள்இல்லார்க்கு அவ்வுலகம்**
**இல்லை பொருள்இல்லார்க்கு**
**இவ்வுலகம் இல்லாகி**
**யாங்கு.**

அருளுக்கும் பொருளுக்கும் உள்ள ஏதுகையைக் கையாள்கிறார். அடுத்த குறளிலும்:

**பொருள்அற்றார் பூப்பர்**
**ஒருகால்: அருள்அற்றார்**
**அற்றார்: மற்று ஆதல் அரிது.**

பூப்பர்-பொலிவு பெறுவார். மறுபடியும் மழை பெய்து, வெயில் காய்ந்து செடி மலர் விடுவது போல் பொருளை இழந்தவர் மறுபடியும் நல்ல காலம் வந்து பொருள் சம்பாதித்துச் சுகம் பெறும் சந்தர்ப்பம் உண்டு. ஆனால் அருள் அற்றார்—ஈர நெஞ்சு இல்லாதவர்—அற்றார்—அழிந்தார்! 'அற்றார்' என்பதிலே முற்றும் அழிந்தார் என்கிற வேகம் இருக்கிறது. முன் சொன்ன குறளில் பொருளைப் போல் அருள் என்று சொன்னதை வைத்து இங்கே சொல்லுகிறார்: பொருளுக்கும் அருளுக்கும் பேதம் இது. பொருள் இழந்தாலும் பிறகு பெறக் கூடும். அருள் இல்லாவிடில் நிராசை; முற்றழிவு நேரும் என்கிறார்.

• • •

நூலறிவு அடைவதற்குத் தெளிந்த மதி வேண்டும். தருமம் வேண்டுமாயின் உள்ளத்தில் ஈரம், அருள் வேண்டும். தெளிந்த மதி இல்லாவிடில் எவ்வளவு ஓதினாலும் பயன் இல்லை. நன்னெறிக்கு அருள் அடிப்படை. அது இல்லாவிடில் மற்றத் தருமங்கள் எவ்வளவு பயின்றாலும் பயன் உண்டாகாது.

உள்ளத்தில் ஈரம் இல்லாதவன் பிற அம்சங்களில் எவ்வளவு சுத்தமானவனாயினும் பிரயோசனம் இல்லை. எவ்வளவு தவமும் விரதமும் இருந்தாலும் வீடு பெற மாட்டான்.

**தெருளாதான் மெய்ப்பொருள்**
**கண்டற்றால் தேரின்**
**அருளாதான் செய்யும் அறம்.**

[தேரின் - ஆராய்ந்தால்]

அவன் செய்யும் வேறு அறங்களில் சாரம் இராது. ஈர நெஞ்சு இல்லாதவன் செய்யும் பிற அறங்கள் தெளிந்த மதியில்லாதவன் ஞானம் அடையச் செய்யும் முயற்சிகளைப் போல் பயனின்றி முடியும். ஞானத்துக்குத் தெளிந்த மதி எவ்வளவு அவசியமோ, அவ்வளவு அவசியம் தர்மத்துக்கு அருள், கருணை நிறைந்த உள்ளம்.

ஈர நெஞ்சு இல்லாதவனுக்குச் சொல்லுகிறார்:

**வலியார்முன் தன்னை**
**நினைக்கதான் தன்னின்**
**மெலியார்மேல் செல்லும் இடத்து.**

தம்மைவிட மெலிந்தவர்கள் மேல் கோபித்துக் கொள்ளும்போது தம்மை விட வலியார் முன் தாம் நிற்கும் நிலையை நினைவுக்குத் தந்து கொள்க என்கிறார்.

நீ சிலரைக் கண்டு, அவர்களுடைய செல்வத்தையும் செல்வாக்கையும் பலத்தையும் அஞ்சுகிறாய் அல்லவா? அவர்கள்முன் அடங்கி ஒடுங்கி நிற்கிறாய் அல்லவா? அதை எண்ணி, உன்னைக் கண்டு பயப்படுகிறவர்களிடம் கருணையோடு நடந்து கொள் என்கிறார்.

இதைவிட விஷயத்தைத் தெளிவுபடுத்துவது எப்படி? குழந்தைக்கும் விளங்கும்படி சொல்லுகிறார்.

கொடுமை செய்யும் உள்ளத்தை எப்படித் திருப்புவது என்று ஆராய்ந்து, "அடே, உன்னை யாரேனும் கருணையற்று நடத்துவார்களே, அப்போது உன் நெஞ்சம் எப்படித் துடிக்கிறது. அதை எண்ணிப் பார். உன்னைக் கண்டு ஒருவன் நடுங்கும்படி ஏன் செய்கிறாய்?" என்கிறார். தான் பட்ட கஷ்டத்தை நினைவூட்டினால், பிறரைக் கஷ்டப்படுத்துவதினின்று விலகுவான் என்கிற முறையில் உபதேசிக்கிறார். ஒவ்வொருவனுக்கும் தான் கஷ்டப்பட்ட காலம் இருக்கும். அதைக் கொண்டு சொல்லுகிறார்.

# செங்கோலும் ஜனநாயகமும்

க. சந்தானம்

## 15. சட்டம்

ஜனநாயகத்தின் கருவிகளைக் கவனித்தோம். இப்பொழுது, அதன் முறைகளை ஆராய்வோம். அவற்றுள் சட்டம் முதன்மையானது. ஜனநாயகத்தில் பிரஜைகளும், பிரதிநிதிகளும், மந்திரிகளும், அதிகார வர்க்கமும் சட்டத்துக்குட்பட்டவை. எவரும் சட்டத்தை மீறி இஷ்டப்படி செய்ய முடியாது.

சட்டங்களை மூன்று பெரிய பாகங்களாக வகுக்கலாம் ; (1) பிரஜைகளின் பரஸ்பர உரிமைகளையும் கடமைகளையும் நிர்ணயிக்கும் சட்டங்கள் ; (2) பொது நலத்தைக் காக்கும் சட்டங்கள் ; (3) சர்க்காருக்குப் பிரஜைகள் மீதுள்ள அதிகாரத்தை வரையறுக்கும் சட்டங்கள்.

சொத்துரிமை, வாரிசு பாத்தியங்கள், விவாக நிபந்தனைகள், ஒப்பந்தம், லேவாதேவி முதலியவற்றைப் பற்றிய சட்டங்கள் முதல் வகுப்பைச் சேர்ந்தவை. இவைகளில் பல, வெகு நாட்களாகப் பரம்பரையாக வந்த சம்பிரதாயங்களே சட்டமாக அமுல் செய்யப்பட்டு வருகின்றன. முன் காலங்களில் மேல் ஜாதிகள், அதிகார வர்க்கங்கள் முதலிய செல்வாக்கு மிகுந்த கூட்டங்கள் தங்கள் நலத்தையே சமூக நலமாகக் கருதி இந்தச் சம்பிரதாயங்களை ஏற்படுத்தின. ஆகலால் பொது மக்களின் பிரதிநிதிகள் அரசு புரியும் ஜனநாயகத்தில் இவைகளிலுள்ள விசேஷ உரிமைகள் குறைக்கப்பட்டு, சமத்துவ நெறியில் சட்டங்களை மாற்றி அமைக்க முயற்சி செய்யப்படும். இது நியாயமே. ஆயினும் பழைமையாக வந்த சம்பிரதாயங்களைத் திடீரென்று மாற்றுவதால் கஷ்டங்களும், அநியாயங்களும் உண்டாகும். முக்கியமாக, சொத்துரிமைகளைப் பற்றியே பெரும்பாலரின் வாழ்க்கை அமைக்கப்பட்டிருக்கிறது. வட்டி குத்தகைகளைக் கொண்டு எவ்வித சமூக சேவையும் செய்யாமல் பிழைப்பது தவறு என்று வாதிப்பதில் பிசகு இல்லை. அப்படி ஜீவிப்பவர்களுக்குத் தகுந்த வேலையும், கூலி வழும் கொடுத்து வட்டிகளையும், குத்தகைகளையும் படிப்படியாகக் குறைப்பது நியாயமே. ஆனால் வேலை கொடுக்காமல், பிழைக்க வேறு வழியில்லாமல் செய்துவிட்டு, பரம்பரை வருவாய்களை நிறுத்துவது நீதியல்ல.

சமூக சம்பிரதாயங்களிலும் ஆண்களுக்கு ஒரு நியாயமும் பெண்களுக்கு மற்றொரு நியாயமுமாக இருந்து வந்திருக்கின்றன. பெண் ஒரே புருஷனை மணக்கலாம். ஆணோ பல மனைவிகளை ஒரே சமயத்தில் வைத்துக் கொள்ளலாம் என்று சமீபகாலம் வரையில் இந்து சமூகச்சட்டமாக இருந்தது. இப்பொழுதும் முஸ்லிம் புருஷன் நான்கு மனைவிகளை விவாகம் செய்து கொள்ளலாம். பெண்களின் சொத்துரிமைகளும் குறைவாகவே இருந்தன. இவற்றை யெல்லாம் சீர்திருத்துவது ஜனநாயகத்தின் கடமையாகும். ஆனால் நிதானமாகவும், பழைய வழக்கங்களில் வேரூன்றியவர்கள் மீது அதிக நிர்ப்பந்தமில்லாமலும் செய்வது நலம்.

கொலை, திருட்டு, பலாத்காரம், மோசடி முதலிய குற்றங்களைத் தடுத்து, குற்றவாளிகளைத் தண்டிக்கும் சட்டங்கள் இரண்டாவது பாகத்தில் அடங்கும். இந்தப் பாகம் இக்காலத்தில் மிகவும் விரிவடைந்து வருகிறது. ரயில், மோட்டார், மின்சாரம், இயந்திரங்கள் முதலியவற்றை உபயோகிப்பதில் மிகவும் ஜாக்கிரதையாக இருந்தாலொழிய அபாயங்கள் உண்டு. அவைகளைத் தடுக்கக் கடுமையான சட்டங்கள் செய்வது அவசியமாகும்.

சமூகத்தில் நீண்ட காலமாக நிலவி வரும் தீய பழக்க வழக்கங்களை எவ்வளவு தூரம் சட்டத்தால் தடுக்கலாம் என்பது இக் காலத்தில் சிக்கலான பிரச்னையாக இருந்து வருகிறது. இதற்கு இரண்டு உதாரணங்களைக் கவனிப்போம்.

புராண காலங்களிலிருந்து மது அருந்துவது வழக்கமாக இருந்து வந்திருக்கிறது. அது தீமையென்று மத குருக்களும், ஞானிகளும் கண்டித்து அதை விலக்கும்படி மக்களுக்குப் போதித்து வந்திருக்கின்றனர். முப்பது வருஷங்களுக்கு முன் அமெரிக்க ஐக்கிய நாட்டில் மது விலக்குப் பிரசாரம் வலுத்து மது விலக்குச் சட்டம் செய்யப்பட்டது. ஆனால் அதை மீறி மக்கள் பெருவாரியாகக் குடிக்கலானார்கள். அதைக் கண்டு அந்தச் சட்டத்தை ரத்து செய்தனர்.

பாரதத்தில் 1937ல் காங்கிரஸ் அரசாங்கம் ஏற்பட்டபொழுது சென்னையில் சில ஜில்லாக்களில் சட்டமூலம் மதுவிலக்கு அமுல் செய்யப்பட்டது. வேறு சில மாகாணங்களிலும் அப்படியே செய்தனர். தற்சமயம் சென்னை, பம்பாய் இரண்டு ராஜ்யங்களும் பூர்ண மது விலக்குச் சட்டத்துக் குட்பட்டிருக்கின்றன. வேறு சில ராஜ்யங்களில் அரை குறையாக அமுல் செய்யப்படுகிறது. சில ராஜ்யங்களில் மதுவிலக்குச் சட்டம் செய்யப்படவில்லை.

இப் பிரச்னையில் மூன்றுவித வாதங்கள் செய்யப்படுகின்றன. உலகெங்கும் மதுபானம் வழக்கத்திலிருந்து வருகிறது. மிதமாக அதை உபயோகிக்கும் வரையில் அதனால் தீங்கில்லை. அதனால் வாழ்க்கை சுகம் பெருகும் என்று கூறி வருகிறார்கள்.

அது தீங்கென்பதில் சந்தேகமில்லை. ஆனால் சட்ட மூலம் இவ்வித பழக்கங்களைத் தடுக்க

முடியாது. சட்டம்தான் தோற்றுவிடும் என்று மற்றோர் சாரார் வாதிக்கின்றனர். தற்சமயம் மதுவிலக்குச் சட்டத்துக்குட்பட்ட சென்னை, பம்பாய் ராஜ்யங்களில் அச் சட்டத்தை மீறித் திருட்டுக் கள் இறக்குவோரும், சாராயம் செய்வோரும், அவற்றை அருந்துவோரும், ஆயிரக் கணக்காக இருக்கிறார்கள். சர்க்காருக்கு வருமானம் நஷ்டமே ஒழிய, தீமை நீங்கவில்லை என்கிறார்கள் இந்தக் கோஷ்டியார்.

மதுவிலக்குச் சட்டத்தால் பெரும்பாலான ஏழை மக்கள் நல்ல பலனடைந்திருக்கிறார்கள். சட்டத்துக்கு விரோதமாகத் திருடர்களும், கொலையாளிகளும் குற்றம் செய்வதால் அவைகளைத் தடுக்கும் சட்டத்தையே ரத்து செய்துவிட முடியாது. அதேபோல் மதுவிலக்குச் சட்டத்தையும் அமுல் செய்தே தீர வேண்டும் என்கிறார்கள் மதுவிலக்கில் பற்றுள்ளவர்கள்.

பாரதத்தில் தீண்டாமையும், ஜாதி வித்தியாசங்களும் சமூகத்தின் ஒற்றுமையைக் குலைத்து, ஏற்றத் தாழ்வுகளை அதிகரித்து, அன்னிய ஆட்சிக்கு மூலகாரணமாக இருந்தன என்பதை எவரும் மறுக்க முடியாது. ஆதலால் தீண்டாமையை அடியோடு ஒழிக்க வேண்டுமென்று நமது அரசியல் அமைப்பில் ஒரு விதி செய்யப்பட்டிருக்கிறது. அப்படியே பொது வாழ்வில் சாதி, வகுப்பு வேற்றுமைகளைக் கவனிக்கக் கூடாதென்ற விதிகளும் இருக்கின்றன.

இதுபோதாது. குடும்ப வாழ்க்கையில் சாதி உணர்ச்சி இருக்கும் வரையில் அது எப்படியாவது பொது வாழ்விலும் புகுந்து விடும். ஆகலால் அந்த உணர்ச்சியே அடியோடு மறைய வேண்டும் என்று பல தேசபக்தர்கள் தீவிரமாக விரும்புகின்றனர்.

இந்த விருப்பத்தால் பலனில்லை. சட்டத்தின் மூலம் பலாத்காரமாக இந்த உணர்ச்சியை அடக்க வேண்டும். அதற்கு ஒரே வழிதான். ஜாதி உணர்ச்சிக்கு விவாகமுறையே மூல வேராக இருப்பதால், எவரும் இது வரையில் சம்பந்தம் செய்து வந்த ஜாதி அல்லது வகுப்புக்கள் தமக்குள் விவாகம் செய்து கொள்ளலாகாது என்று சட்டம் செய்து, அமுல் செய்தால் ஒரு தலைமுறையில் பாரதத்திலிருந்து ஜாதிகள் மறைந்து விடுமென்று திரு எஸ். ராமநாதன் ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார்.

ஏதேச்சாதிகாரத்தில் தனது மனம் போனவாறு ஏதேச்சாதிகாரி சட்ட மூலம் எதையும் பலாத்காரமாகப் புகுத்த முயற்சி செய்யலாம். தம் மதத்தில் சேராதவர்களை ஆயிரக் கணக்கில் ஐரோப்பாவிலும், இதர இடங்களிலும் முன் காலங்களில் கொலை செய்திருக்கின்றனர். ஜனநாயகத்தில் ஒருவர் இருவரின் தீவிர உணர்ச்சியைக் கொண்டு சட்டம்செய்ய முடியாது. அப்படிச் செய்தாலும் மீறுவோரைச் சித்திரவதை செய்ய முடியாது. சமூகச் சீர்திருத்தச் சட்டங்களில் பிறர் மீது அக்கிரமம் செய்வதைத் தடுப்பது சுலபம். அக்கிரமத்துக்கு ஆளாக இருப்பவர்களின் குதூகலமான ஒத்துழைப்பை எதிர்பார்க்கலாம். ஆனால், பலரைப் புதிய வழியை நாடும்படி சட்ட மூலம் பலவந்தப்படுத்துவது சாத்தியமல்ல, நியாயமுமல்ல.

அரசாங்கத்துக்கும் பிரஜைகளுக்குமுள்ள கடமைகளையும் சம்பந்தங்களையும் விதிக்கும் சட்டங்கள் மூன்றாவது வகுப்பைச் சேர்ந்தவை. அவற்றுள் வரி, கடன் முதலிய பொருளாதார விஷயங்களைப் பற்றிப் பின்னர் ஆராய்வோம்.

பல நாடுகளில் யுத்த காலங்களில் பிரஜைகளைச் சைனியத்தில் சேர்க்கவும், அதற்குத் தகுதி யற்றவர்களை இதர யுத்த வேலைகளில் ஈடுபடுத்தவும் அரசாங்கத்துக்கு அதிகாரம் கொடுக்கப்படுகிறது.

மற்றோர் உலக யுத்தம் நேரிடுமாயின் எல்லா நாடுகளிலும் இது அவசியமாகிவிடும்.

அவ்வாறே வெள்ளம், உள் நாட்டுக் குழப்பம் முதலிய நெருக்கடிகளிலும் பிரஜைகளை அவசியமான பணி செய்யும்படி பலவந்தப் படுத்துவதற்கு அரசாங்கம் சட்டமூலம் அதிகாரம் எடுத்துக் கொள்ளுவது சகஜம்.

குற்றவாளிகளைப் பிடிப்பதற்கும், கோர்ட்டுகளில் சாக்ஷியம் சொல்லுவதற்கும், விசாரணைகளில் ஜூரிகளாகத் தொண்டு புரிவதற்கும் பிரஜைகளுக்குக் கடமையுண்டு.

பொதுக் காரியங்களுக்காகப் பிரஜைகளின் நிலங்களையும், வீடுகளையும் தாற்காலிகமாகவோ, நிரந்தரமாகவோ சர்க்கார் எடுத்துக் கொள்ளவும் சட்டம் செய்யப்படுகின்றது. அப்பொழுது நியாயமான ஈடு கொடுக்க வேண்டுமென்பதும் வழக்கமாகும்.

இவ்விதம் சட்டத்தின் ஆட்சி ஓயாமல் விரிவடைந்து வருகிறது. நாட்டில் நிலவிவரும் சட்டங்களில் ஒரு சிறு பாகத்தைக் கூட எந்தப் பிரஜையும் அறிய முடியாது. ஆயினும் அறியாமல் சட்டத்தை மீறிவிட்டேன் என்று எவனும் வாதாட முடியாது. இந்த முரண்பாட்டினால் அதிக அநியாயம் ஏற்படாமல் இருப்பதற்குக் காரணம் என்னவென்றால் எவனுக்கும் தன்னைப் பாதிக்கக்கூடிய சட்டம் தெரிந்தால் போதுமானதென்பதே. இயந்திரசாலை நடத்துபவர்களுக்கு அதைப்பற்றிய சட்டம் தெரிந்தால் போதும். மற்றவர்கள் அதை அறியாமலிருந்தால் பரவாயில்லை.

## 16. நியாயம்

முன் காலங்களில் தர்ம சாஸ்திர உபதேசங்களையும், பரம்பரையான சம்பிரதாயங்களையும் அமுல் செய்வதே நியாயமாகக் கருதப்பட்டது. கிராமப் பஞ்சாயத்துக்களும், சாதிப் பஞ்சாயத்துக்களுமே நியாயம் வழங்கும் கருவிகளாக இருந்தன. இக்காலத்தில் சட்டமே நியாயத்தின் மூலமாகக் கருதப்படுகிறது. சட்டத்தை அமுல் செய்ய கோர்ட்டுகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. எவ்வளவு தீர்க்காலோசனையுடன் சட்டம் செய்தாலும், அது எல்லாச் சந்தர்ப்பங்களுக்கும், சிக்கல்களுக்கும் தெளிவான முடிவு கூறப் போதுமானதாக இருக்காது. நீதிபதிகளே அந்தச் சட்டங்களின் போக்குக்களை அவ்வப்போது நிர்ணயித்துக் கொள்ள வேண்டுமென்றால், நீதிபதிகளுக்கு மிதமிஞ்சிய அதிகாரம் ஏற்பட்டு விடும். ஆதலால் ஒரு குற்றமோ, தகராறோ விசாரிக்கப்படும்பொழுது நீதிபதிகளுக்கு உதவி செய்ய வக்கீல்கள் அவசியமாகிறார்கள். சிவில் வழக்கு

களில் வாதி, பிரதிவாதி இரண்டு தரப்புகளிலும் வக்கீல்கள் தங்கள் கட்சிக்காரர்களுக்குச் சாதகமாகச் சட்டத்தின் போக்கை வியாக்கியானம் செய்ய முயலுகிறார்கள். இரண்டு வாதங்களையும் பரிசீலனை செய்து, எல்லா நுட்பங்களையும் நன்கு ஆலோசித்து நீதிபதி தீர்ப்புக் கூறவேண்டும். அந்தத் தீர்ப்பில் அதிருப்தியுள்ளவர் மேல் கோர்ட்டுக்கு அப்பீல் செய்துகொள்ள உரிமையுண்டு. சட்டத்தின் சூட்சமங்களைப் பற்றித் தீவிர வித்தியாசங்கள் இருந்தால் ராஜ்ய உயர்நீதி மன்றத்துக்கும், கடைசியாகப் பாரத உத்தம நீதிமன்றத்துக்கும் அப்பீல் செய்து கொள்ளலாம்.

குற்றவாளிகளைத் தண்டிப்பது அரசாங்கத்தின் கடமையாதலால் சர்க்கார் தரப்பில் ஒரு வக்கீல் வழக்கை நடத்துவதும், குற்றம் சாட்டப்பட்டவர் எதிர் வக்கீல் வைத்து வாதாடுவதும் வழக்கம். சிவில் வழக்குகளைப் போலவே மேல்கோர்ட்டுகளுக்கு அப்பீல் செய்து கொள்ளவும், சில வழக்குகளில் உத்தம நீதிமன்றம் வரையில் போய் வழக்காடவும் உரிமையுண்டு.

சாதாரணமாக, வக்கீல்களுக்கு ஊதியம் கொடுத்து, இதர கோர்ட்டுச் செலவுகள் செய்து வழக்காடி வெற்றிபெறுவது மலையைக் கெல்லி எலியைப் பிடிப்பது போலாகும். ஆனால் சட்டம் தெளிவாக இல்லாத போதே வழக்கு கோர்ட்டுக்குப் போகிறது. அவ்வித சந்தர்ப்பங்கள் நூற்றுக்கு 1, 2 தான் இருப்பதால் சட்டம் மீறி சந்தர்ப்பங்களில் தானாகவே அமுலாகி விடுகிறது. கோர்ட்டுகளுக்குப் போகும் பல வழக்குகளில்கூட நடுவில் இரு தரத்தாரும் செலவுக்குப் பயந்து ராஜி செய்து கொண்டு விடுகின்றனர்.

சில வழக்குகள் வருஷக்கணக்காக நீடிப்பதைக் கண்டு வருந்திச் சிலர் இம்முறையே தவறு என்று கண்டிக்கின்றனர். இதற்குப் பதிலாக எல்லா வழக்குகளும் விரைவில் பஞ்சாயத்துகள் மூலம் தீர்க்கப்படவேண்டும் என்கிறார்கள். இது சாத்தியமல்ல. சட்டத்திலுள்ள குறைகளும், சந்தேகங்களும் தீர வேண்டும். ஓயாமல் சட்டசபைகள் மூலம் திருத்தம் செய்வது சாத்தியமில்லை. கோர்ட்டுகள் மூலம் தீர்மானமாவதே சமூகத்தின் நலமாகும். சட்டங்கள் செய்வதில் தேர்ச்சி பெறுவதும், கோர்ட்டு விவகாரங்களைத் துரிதப்படுத்துவதும் அவசியமே. ஆனால் தீர்க்கமாக விசாரித்து முடிவு செய்யும் முறையைக் கைவிட்டு விட்டால் சட்டத்தின் ஆட்சி சீர்குலைந்து குழப்பமும், அநியாயமும் பெருகிவிடும். கோர்ட்டுகள் தோட்டங்களின் காவல்காரர்கள் போன்றவை. காவல்காரர்கள் இருப்பதாலேயே தோட்டத்துக்குள் ஜனங்கள் புக மாட்டார்கள். ஒருவர் இருவர் திருட்டுத்தனமாகவோ, பலவந்தமாகவோ புகுந்து சில வேளைகளில் கொள்ளை கொண்டு போகலாம். அதற்காகக் காவல்காரர்களையே எடுத்துவிட முடியாது.

நீதிபதிகள் நல்ல புத்திசாலிகளாகவும், நேர்மையுள்ளவர்களாகவும், அதிகார வர்க்கத்திடம் அஞ்சாதவர்களாகவும் இருப்பது மிகவும் அவசியமாகும். அவர்களை நியமிப்பதும், நீக்குவதும் சாதாரண நிர்வாகத்திடம் இருக்காமல் உயர்நீதி மன்றத்தின் வசம் இருக்க வேண்டும்.

அமெரிக்கா, பிரிட்டன் முதலிய தேசங்களின் உயர்தர நீதி மன்றங்களின் நீதிபதிகள் தங்கள் தைரியத்தாலும் தீர்க்கதரிசனமுள்ள புத்தி கூர்மையாலும் ஜனநாயகத்தை நன்கு பாதுகாத்து வருகின்றனர். பாரதத்திலும் நீதிபதிகளின் செல்வாக்கு உயர்ந்திருக்கிறது. நீதிபதிகளை நியமிப்பதில் சாதி, மத வித்தியாசங்களைக் கவனிப்பதும், அதற்காக ரகசியமாகக் கிளர்ச்சி செய்வதும் ஆங்காங்கு வழக்கமாகி வருகிறது. இதைத் தடுக்காவிட்டால் நியாயத்தின் நேர்மை குலைந்து ஜனநாயகத்தின் ஓர் முக்கிய ஆதாரம் தளர்ந்து விடும்.

பாரத உத்தம நீதி மன்றத்தின் நீதிபதிகளையும், ராஜ்ய உயர்தர மன்றத்தின் நீதிபதிகளையும் ராஷ்டிரபதி நியமிக்கலாமே ஒழிய அவர்களுக்குக் குறிப்பிட்டுள்ள 65, 60 வயதுகள் வரையில் வேலையை விட்டு விலக்க அதிகாரமில்லை. அவர்கள் ஏதாவது குற்றம் செய்தால், அல்லது தகாத காரியங்களைச் செய்தால் விசாரணை செய்து பார்லிமெண்டின் இரண்டு சபைகளும் தீர்மானம் செய்த பின்னரே விலக்கலாம். இந்த நீதிபதிகள் அரசாங்கத்துக்குச் சிறிதும் பயப்படாமல் சுதந்திரமாக நியாய பரிபாலனம் செய்ய வேண்டும் என்பதற்காகவே இவ்வித ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அமெரிக்க ஐக்கிய நாட்டில் வயது எல்லை கூட இல்லை. அதனால் தமது சக்திகளை இழந்தவர் கூட நீதிபதியாக இருக்க இடம் தருகிறது என்பதால் அந்த வரம்புகள் நமது அரசியல் அமைப்பில் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. (தொடரும்)

# ஹெர்குலிஸ் ஒரு சைக்கிள் மட்டுமல்ல...;

## வாழ்நாள் முழுதும் உழைக்கும் ஓர் நற்துணை

வீட்டில் இருப்பதோ ஒரே ஹெர்குலிஸ் சைக்கிள். அதில் அதை ஓட்டிச்செல்ல அனைவருக்கும் ஆர்வம். "அப்பாவுக்கு மார்க்கெட்டுக்கு போக முடியவில்லையா, சரி இதோ நான் போகிறேன்", "பாட்டிக்கு உடம்பு சரியில்லையா, டாக்டரிடம் நான்தான் போவேன்." ஹெர்குலிஸ் சைக்கிளுக்கு இவ்வளவு கடும் போட்டி! ஆம், உண்மையில் ஹெர்குலிஸ் போல வாழ்க்கையில் நீடித்து சேவை புரியும் சாதனங்கள் மிகக்குறைவு.

சுமார் 50 வருஷங்களாக உயர்தர சைக்கிள் தயாரிப்பில் அனுபவமிருந்தவர்களால், இப்பொழுது இந்த நுட்ப வேலைப் பாடமைந்த 'ஹெர்குலிஸ்' சைக்கிள் டி. ஐ. சைக்கிள்ஸாரின் நவீன தொழிற்சாலையில் தயாரிக்கப்படுகிறது. உயர்தர அமைப்பும், பிரயாசையின்றி சுலபமாக ஓடும் தன்மையும்கொண்ட ஹெர்குலிஸ் சைக்கிள்களில் மிகச் சிறந்தது என்பதில் சந்தேகமில்லை.

**உங்கள் சைக்கிள் ஒரு சிறந்த முதலீடு**

**ஹெர்குலிஸ்**

**உங்கள் பணத்திற்கு சிறந்த பெறுமானம்**



தயாரிப்போர்:
டி. ஐ. சைக்கிள்ஸ் ஆப் இந்தியா லிட். மதராஸ

TIC 311 Q



திரு எஸ். ரத்தினவடிவேல் அவர்களின் புதல்வர் திரு ஜோதி பிரமானந்தருக்கும், செள. சரோஜினி தேவிக்கும் திருமணம் வெகு விமரிசையாக நடந்தது.



பம்பாய் சீமென்ஸ் லிமிடெட் கம்பெனி ஜூனியர் இன்ஜினியர் திரு ராஜகோபால னுக்கும், செள. சகுந்தலாவுக்கும் கோய முத்தூரில் விவாகம் நடந்தேறியது.

# வாழ்க



கோயமுத்தூர் டாக்டர் திரு கே. என். கிருஷ்ணனின் புதல்வர் திரு சதாசிவத்துக் கும், செள. சாரதாவுக்கும் திருமணம் சிறப்பாக நடந்தது.



காரைக்குடி திரு வி. ஆர். கிருஷ்ணய்ய ரின் புதல்வி செள. ராதாவுக்கும், திரு கோபாலனுக்கும் வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது.



இந்தியா லெதர் 'கார்ப்பரேஷன் கம் பெனியின் சேர்மன் திரு நாராயணன் செட்டியார் புதல்வர் திரு ராமசாமிக்கும், செள. சரஸ்வதிக்கும் திருமணம் நடந்தது.



இந்தியன் எக்ஸ்பிரஸ் உதவி ஆசிரியர் திரு ஒ. ராமலிங்கம், செள. குப்பம்மா பி. எஸ்ஸி., பி. டி.யை மணம் புரிந்து கொண்டார்.



திரு கே. சாம்பமூர்த்தி அவர்களின் மருமான் திரு ராமமூர்த்திக்கும் சௌ. ஜயலக்ஷ்மிக்கும் சென்னையில் விமரிசையாக விவாகம் நடந்தேறியது.



பம்பாய் திரு வி. என். பரமேசுவர் அவர்களின் புதல்வி சௌ. சுசீலாவுக்கும், திரு கிருஷ்ணனுக்கும் மாதுங்காவில் விவாகம் விமரிசையாக நடந்தேறியது.

# மணமக்கள்



ஹாரிஸன்ஸ் அண்ட் க்ரோஸ்பீல்ட் கம்பெனியின் பிரதிநிதி திரு ஏ. ராமனுக்கும், சௌ. கல்யாணிக்கும் மயிலாப்பூரில் திருமணம் நடைபெற்றது.



சென்னை திரு பி. ராமச்சந்திரன் அவர்களின் புதல்வர் திரு ஆர். பஞ்சநாதனுக்கும், சௌ. மோகனாம்பாளுக்கும் சென்னையில் கல்யாணம் சிறப்பாக நடந்தது.



கௌரவ மாகாண மாஜிஸ்திரேட் திரு எஸ். கிருஷ்ணஸ்வாமி அவர்களின் புதல்வி சௌ. பரிமளாவுக்கும் திரு பாலசுப்பிரமணியனுக்கும் விவாகம் நடந்தது.



கரூர் திரு டி. ஆர். வைத்தியநாதய்யரின் புதல்வர் திரு முத்துகிருஷ்ணனுக்கும், சௌ. வசந்தாவுக்கும் உத்தமர் கோவிலில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

# டிக்ஸிலாந்து "ஜாஸ்" இன்னிசை

இப்போதெல்லாம், அதாவது சுதந்திரத்துக்குப் பின் உலக அரங்கத்தில் நமது ஸ்தானம் படிப்படியாக உயர்ந்து கொண்டு வரும் இந்த நாளில் வெளிநாடுகளுடன் தொடர்பு அதிகரிக்க, அதிகரிக்கப் பாரத கலாசார தூதுகோஷ்டிகள் அயல்நாடு செல்வதும், அயல்நாட்டுக் கலாசார கோஷ்டிகள் நம் நாட்டுக்கு வருவதும் அதிகரித்திருக்கின்றன.

சமீபத்தில் ரஷ்ய நடன கோஷ்டி சென்னைக்கு விஜயம் செய்தது. சீன கோஷ்டி ஒன்று வந்திருந்தது. யஹூதி மன்யூஹின் என்ற வயலின் மேதை மூன்று நாட்கள் பியானோவைப் பக்கவாத்தியமாக வைத்துக் கொண்டு மூன்று கச்சேரிகள் செய்து நம்மவர்களை ஆச்சரியத்தில் ஆழ்த்தினார். அமெரிக்காவில் கானக்குயில் என்று பிரக்யாதி பெற்ற நீக்ரோ பாடகி மேரி ஆண்டர்ஸன் சமீபத்தில் சென்னைக்கு விஜயம் செய்து மேல்நாட்டு இசை வழங்கினார். மேல்நாட்டு சங்கீதத்தை ஆதரித்து வளர்க்கும் சபைகளும் சென்னையில்



இருக்கின்றன. இப்போது அமெரிக்காவிலிருந்து டிக்ஸிலாந்து ஜாஸ் வாத்யகோஷ்டி ஒன்று சென்னைக்கு வந்திருக்கிறது. அக்டோபர் கடைசியில் சில கச்சேரிகள் செய்வார்கள்.

ஜாஸ் சங்கீதம் என்பது மேல்நாட்டின் ஜனரஞ்சகமான இசை வகையைச் சேர்ந்தது. நாடோடிப் பாடல்களுக்கும் நடனங்களுக்கும் ஏற்ற இசை வகைகள் ஜாஸ் சங்கீதத்தில் வெகுவாக இருக்கின்றன. இந்த வகையில் பார்த்தால் மேற்கத்திய சங்கீதத்திலேயே சாஸ்திரிய சங்கீதத்திலிருந்து மாறுபட்டது, ஜாஸ் இன்னிசை என்பது விளங்கும். இதனால் தானோ என்னமோ, இதை ஒரு மட்டரக சங்கீதமாகப் பலர் மேல்நாட்டிலேயே கருதுகின்றனர். இது ஏதோ கரடு முரடான நயமில்லாத ஒரே மாதிரியான வறட்டுக் கத்தல்; இதன் உண்மை ராக் அண்டு ரோல் இசைத் தட்டை அரை நிமிஷ நேரம் கேட்டால் தெரியும் என்பது சாதாரணமாக உலவும் கருத்து. ஆனால் உண்மையில் ஜாஸ் இசையைக் கேட்காதவர்கள் மட்டுமே இவ்வாறு எண்ணுகிறார்கள் என்று நினைக்கும் ஜாஸ் விசிறிகளும் உண்டு.

ஜாஸ் இசையில் மூன்று வகைகள் இருப்பதாக மேல்நாட்டவர்கள் கூறுவர். இனிமையான ஜாஸ் (Sweet Jazz) என்பது ஒருவகை. நாட்டுப் பாடலுக்கேற்ற சொல்லடுக்குகளையும் உணர்ச்சியைக் கிளறும் மத்திமகால வேகத்துடனும் எல்லோராலும் சுலபமாகப் பாடும்படியாக ரஞ்சகமானதும் இந்த வகையைச் சேர்ந்தது. இவை நமது சினிமாப் பாட்டைப் போல. ஒரு காலத்தில் ரஞ்சகமாக இருக்கும் பாட்டுக்கள் சீக்கிரமாக மறைந்து புதிய பாட்டுக்கள் ஜனரஞ்சகமானவைகளாக ஆகிவிடும். இதற்கு மாறுபட்டது விறுவிறுப்புடன் அமைந்த ஜாஸ் இசை வகை. இதில் வேகம் அதிகம். இசை அம்சமும் சற்றுச் சிக்கலானது. எளிதில் எல்லோராலும் பாட முடியாது. இதைவிடச் சற்று உயர்ந்தது என்று கருதப்படுவது சாஸ்திரீயம் (மேல்நாட்டு சாஸ்திரீயந்தான்) கலந்த "ஸிம்பொனி" என்னும் வகை.

சாதாரணமாக மூவர் கொண்ட குழு முதல் இருபது பேர்கள் கொண்ட பெரிய குழுக்கள் வரை இந்த ஜாஸ் சங்கீதத்தை வழங்குகின்றனர். ஆதிகாலத்தில் (ஜாஸ் இசைக்கு ஆதிகாலம் என்பது அமெரிக்காவில் ஐம்பது வருஷங்களுக்கு முன்னால்) நியூ ஆர்லியன்ஸ் நகரின் தெரு வாத்திய கோஷ்டிகள் இந்த மாதிரி பாட்டுக்களை வழங்கிக் கொண்டிருந்தனர். டாம்பட், ட்ராம்போன், கிளாரினெட், பியானோ, டிரம் எனப்படும் டமாரம் ஆகிய ஐந்து இசைக் கருவிகளும் இந்த இசையில் இடம் பெறுகின்றன. நியூஆர்லியன்ஸ் நகரத்திலிருந்து சிகாகோ நகரத்துக்கு இந்த இசை கொஞ்சம் கொஞ்சமாகப் பரவியது. சிகாகோ நகரத்துக்கு அமெரிக்கர்களின் பரிபாஷையில் டிக்ஸிலாந்து என்று பெயர். எனவே, சிகாகோவில் காணப்படும் ஜாஸ் இசைக்கு டிக்ஸிலாந்து ஜாஸ் என்று பெயர் வழங்கி வருகிறது. நீக்ரோ பாடகர்கள்தாம் இதில் அதிகமாக ஈடுபட்டு வருகின்றனர்.

இந்த டிக்ஸிலாந்து ஜாஸ் கோஷ்டியினர் அக்டோபர் மாத இறுதியில் சென்னைக்கு விஜயம் செய்கின்றனர்.

இந்தக் கோஷ்டிக்குத் தலைசிறந்த "ட்ராம்போன்" வாத்தியக்காரரின் மகார்டன் தலைமை வகிக்கிறார். இந்தக் கோஷ்டி அறுவரைக் கொண்டது. இசைக் கருவிகள், ட்ரம்பெட் (ஊதுகுழல்), ட்ராம்போன் (நமது பாண்டு வாத்தியகோஷ்டியில் காணப்படுவது) கிளாரினெட் (இது இப்போது முதல் வரிசைக்கு உயர்ந்துள்ள வாத்தியம்) பியானோ, (மேற்கத்திய சங்கீதத்தில் ராணி என மதிக்கப்படும் உன்னத கருவி), டமாரம், அத்துடன் 'பாஸ்' என்னும் ராக்ஷஸ வயலின் ஆகிய ஆறு. பார்ப்பதற்கு வெவ்வேறான இசைக் கருவிகளைக் கொண்டு உணர்ச்சியும் பாவப் பெருக்குமுள்ள ஒருமைப்பட்ட இன்னிசையை இக் கோஷ்டி வழங்குமாம். இந்த இசையில் பற்றுள்ளவர்கள் நேரில் கேட்டு இதன் உண்மையைத் தெரிந்து கொள்ளலாம்.

தேநீர் அருந்த
வேண்டிய வேளையில்...

பார்லேயின்

# மொனகோ

இந்தியாவிலே முதன்மையானதும் மிகச்சிறந்ததுமான

## ஸால்டட் ஸனேக்ஸ்




மொறமொறப்பானது, இலேசானது,
புத்தப் புதியது, இலேசாக உப்புக்
கரிக்கும் ருசியுடன் கூடிய
பிஸ்கெட்டுகள்.

பார்லே ப்ராடக்ட்ஸ் மானுபுபாக்சரிங்
கம்பெனி பிரைவேட் லிட்., பம்பாய்.

PH.58.1A TAM.　　EVEREST

# இருதயக் கோளாறு

★

கடிகாரம் 'டிக் - டிக்' என்று சதா ஒலிப்பதுபோல் இருதயமும் இடைவிடாமல் இரவு, பகல் எந்நேரமும் ஒலித்துக்கொண்டே இருக்கிறது.

கடிகாரம் நின்று போய்விட்டால், உடனே அதைப் பழுது பார்ப்பவரிடம் எடுத்துச் செல்லுகிறீர்கள்.

அதேபோல், இருதயத்தின் துடிப்பு மெதுவாக ஒலித்தாலும், ரொம்ப வேகமாக ஒலித்தாலும், அதன் ஒலி ஒழுங்காக இல்லாமற் போனாலும் அல்லது இருதயத் துடிப்பில் வலி கண்டாலும்—நீங்கள் உடனே டாக்டரைத் தேடி ஓடுகிறீர்கள்.

**உங்களுடைய இருதய அமைப்பிலும் அதன் இயக்கத்தில் ஏற்படும் எல்லாவித கோளாறுகளுக்கும்**

**புகழ்பெற்ற**
**இருதய வைத்திய நிபுணர்**
**கவிராஜ்**
**பண்டிட்**
**துர்க்கா தத் சர்மா**
**வைத்திய வாசஸ்பதி**



அவர்களிடம் நேரிடையாகவோ, தபால் மூலமாகவோ ஆலோசனை பெறலாம்

○●○

## NAVRATNA KALPA PHARMACY

JULLUNDUR CITY (India)




சிறுவர் முதல் பெரியோர் வரை
ஆண்கள், பெண்கள் அனைவரும்
கோடையிலும்
குளிர் காலத்திலும்
விரும்பி வாங்கி அணிந்து
திருப்தியடைவது எமது
உஷா பனியன்களே

தயாரிப்பாளர்

**உஷா நிட்டிங் கம்பெனி**
**திருப்பூர்**

அதிசயமும் அற்புதமுமான
சருமப் பாதுகாப்பு




மலபார்
**லிம்டா**
டாய்லெட் சோப்
தி வெஜிடபிள் சோப் ஒர்க்ஸ்
கோழிக்கோடு-1




தமிழ்ப் படங்களில் சோக மயமான படங்களும், அடுக்கடுக்கான சம்பவங்கள் நிறைந்த படங்களும், கத்திச் சண்டை, மல்யுத்தம் முதலியன நிறைந்த சண்டைப் படங்களும், மர்மங்களும் மாயங்களும் நிறைந்த படங்களும் சமீப காலத்தில் நிறைய வெளி வந்து விட்டன. ஆனால் அந்த அளவுக்கு ஹாஸ்யப் படங்கள் வரவில்லை. சில படங்களில் ஹாஸ்யக் காட்சிகள் வந்து எல்லோரையும் சிரிக்கப் பண்ணியிருக்கின்றன. முழுப் படமும் ஹாஸ்யமாகவே வரவில்லை. பல வருஷங்களுக்கு முன்பு வெளியான "சபாபதி" ஒரு சிறந்த ஹாஸ்யப் படம்.

இப்பொழுது அந்தக் குறையைத் தீர்க்கப் பத்மினி பிக்சர்ஸாரின் தயாரிப்பான "சபாஷ் மீனா" வந்திருக்கிறது.

ஒவ்வொரு காட்சியிலும் சிரிப்பை அடக்கவே முடியவில்லை. தியேட்டரில் கரகோஷமும் சிரிப்பும் ஜன நெருக்கத்தோடு போட்டி போடுகின்றன!

தமிழ்ப் படம் பார்ப்பதற்கே பயப்படும் நண்பர்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். அவர்களில் பலர் இந்தப் படத்தைப் பார்க்க என்னோடு வந்திருந்தனர். "ஸார்! நாங்கள் இந்தப் படத்தை இரண்டாவது தடவையாகப் பார்க்கிறோம். படம் முழுவதும் 'லைட் தீம்' (Light theme)! ரொம்பத் தமாஷாயிருக்கிறது" என்றார் என் நண்பர்.

புராணப் படங்களைப் பார்த்து அலுத்துப் போன ரஸிகர்கள், சமூகப்படங்களைப் பார்க்க விரும்புகின்றனர். சமூகப் படங்களைப் பார்த்து அலுத்துப் போன ரஸிகர்கள் புராணப் படங்களைப் பார்க்க விரும்புகின்றனர். இந்த அடிப்படைத் தத்துவத்தைப் படாதிபதிகள் தங்கள் மனத்தில் நன்கு பதிய வைத்துக் கொள்ள வேண்டும். ஒரு குறிப்பிட்ட படத்தின் வெற்றியைக் கண்டதும் கொஞ்சங்கூட முன்யோசனையில்லாமல் அதே மாதிரி கதைப்போக்கைக் கொண்ட இன்னொரு படத்தை வெளியிடுவது இமாலயத் தவறு. இனிப்புப் பலகாரத்தைச் சாப்பிட்ட பின்பு காரம்தானே சாப்பிடத் தோன்றும்? மீண்டும் இனிப்பையே எப்படிச் சாப்பிடுவது?

இம்மாதிரி ஒரே கருத்தை உட்பொருளாகக் கொண்ட படங்கள் பல அடுத்தடுத்து வெளி வந்து எல்லாம் 'பனால்' ஆகிப் போவதையும் பார்த்து வருகிறோம்.

இதிலிருந்து நாம் ஒன்றை கவனிக்க முடிகிறது. அதாவது, எதிலும் மக்களுக்கு ஒரு மாறுதல் தேவைப்படுகிறது.

அந்த முறையில்தான் "சபாஷ் மீனா"வுக்கு நல்ல வெற்றி கிடைத்திருக்கிறது. சமீபத்தில் ஹாஸ்யப் படமே வரவில்லையல்லவா?

இந்தப் படத்தில் இரண்டு கதாநாயகர்கள். ஒருவர் சிவாஜி கணேசன்; இன்னொருவர் சந்திரபாபு. கதாநாயகிகளும் இருவர். ஒருவர் சரோஜா தேவி; இன்னொருவர் புது முகம் மாலினி.

சிவாஜி கணேசன் பணக்காரர் சதாசிவம் பிள்ளையின் மகன் மோகனாக நடிக்கிறார். கண்ணீர் விட்டுக் கதறவும், கன வேகமாக வசனங்களைப் பேசவும் அவருக்குச் சந்தர்ப்பமே

இல்லை. ஆனால், வறுமையில் வாடவும், தனக்கு வர வேண்டிய அதிர்ஷ்டத்தை அநாதை சேகருக்கு விட்டுக் கொடுக்கவும், பல விதமான வேலைகளைச் செய்யவும் நேருகிறது. மோகன் ஒரு கோமாளிப் பாத்திரம். அதை அவர் ஏற்று மிகவும் அதிசயிக்கத் தக்க விதத்தில் நடித்து வெற்றி பெற்றிருக்கிறார்.

'நாடக' ஒத்திகை நடக்கும்போது தகப்பனாரைக் கண்டதும் உளறிக் கொட்டியது, தோட்டத்து மேடையில் படுத்திருந்த தகப்பனாரை டிரைவர் என்று நினைத்துக் காரை ஓட்டச் சொன்னது, நாடகத்தில் நடித்தது, உடைந்த கண்ணாடிக் கதவுகளை ரிப்பேர் செய்பவனாக வந்தது ஆகிய எல்லாக் கட்டங்களிலும் அவர் நடிப்பு சிறந்து விளங்குகிறது. எந்தப் பாத்திரமும் அவரது சொந்தப் பாத்திரமாகி விடுகிறது. சபாஷ் சிவாஜி!

தமிழ்ப்பட நடிகர்களில் ஹாஸ்ய நடிப்பில் சந்திரபாபு எவ்வளவு சிறந்து விளங்குகிறார் என்பது ''சபாஷ் மீனா''வில் தெளிவாகிறது.



அநாதை சேகராகவும், அவனைப் போலவே உருவ ஒற்றுமை கொண்ட ரிக்ஷாக்கார மூக்கனாகவும் நடிக்கிறார், சந்திரபாபு. சென்னை ரிக்ஷாக்காரர் பேசும் மொழியை மிகவும் வளமாகக் கையாளுவதிலிருந்து நாடகத்தில் நடிப்பது, பயந்து நடுங்குவது, சிறையில் வாடுவது, காதலிப்பது ஆகிய எல்லா இடங்களிலும் சந்திரபாபு 'சக்கைப் போடு' போடுகிறார்.

கதை இதுதான்: தந்தை தனக்காக அப்பாதுரைக்குக் கொடுத்த சிபாரிசுக் கடிதத்தை மோகன் சேகரிடம் கொடுத்து, அவனையே மோகனாக நடிக்கச் சொல்லுகிறான். அது சேகருக்குப் பல கஷ்டங்களையும் கொடுத்துக் கடைசியில் அப்பாதுரையின் மகள் மாலதியையும் மணம் செய்து வைக்கிறது. மோகன் பூக்காரப் பெண் மீனாவின் காதலை எளிய முறையில் பெற்று, விபரீதமாக அவன் மீது சுமத்தப்பட்ட கொலைக் குற்றத்திலிருந்து தப்புகிறான். சேகர் மோகனாக நடித்ததும், சேகரைப் போலவே ஒரு ரிக்ஷாக்காரன் இருந்ததும் இந்தப் படத்தின் ஹாஸ்ய ரஸத்துக்குக் காரணமாயிருக்கின்றன.

சினிமா பகற் காட்சி (மாட்டினி) நடந்து கொண்டிருக்கும்போது யாராவது தியேட்டர்க் கதவுகளைத் திறந்தால், படம் பார்க்க முடியாது. அதுபோல, இப்படியும் நடக்குமா, இது சரியா, இது மாதிரி கூட ஒருவன் ஏமாறுவானா என்றெல்லாம் கேள்விகள் கேட்க ஆரம்பித்தால் ''சபாஷ் மீனா'' இருக்கும் இடம் தெரியாமல் மறைந்து விடும். ஆகவே, இந்த எச்சரிக்கையை மனத்தில் வைத்துக் கொண்டு படம் பார்ப்பது நல்லது.

வெகு நாட்களாகப் பலர் எதிர்பார்த்த ஒரு முழு ஹாஸ்யப் படம் நல்ல முறையில் உருவாகியிருப்பதை நாம் பாராட்ட வேண்டியதுதான்.

''சபாஷ் மீனா''வின் கதையை வடநாட்டு எழுத்தாளர் தாதாமிராசி எழுதியிருக்கிறார். அந்தக் கதையைத் தமிழ்ப் பெருமக்கள் பார்த்து ரஸிக்கும்படி செய்திருப்பவர் ப. நீலகண்டன். கதாபாத்திரங்களுக்கேற்ற விதத்தில் வசனங்களை மிகவும் அழகாக எழுதியிருக்கிறார்.

மோகனின் ஏழை நண்பனாக நடிக்கும் வி. ஆர். ராஜகோபால் அற்புதமாக நடித்திருக்கிறார். மாலதியாக வரும் சரோஜா தேவிக்கு இந்தப் படத்தில், ஆணுடையில் நடனம் ஆடவும், ரிக்ஷாவில் ஒய்யாரமாகச் சவாரி செய்யவும், கடைசியில் கொஞ்சம் கண்ணீர் விடவும் கூட வாய்ப்புக் கிடைத்திருக்கின்றன. அப்பாதுரையின் பாகத்தை ஏற்றிருக்கும் எஸ். வி. ரங்காராவ் நன்றாய் நடித்திருக்கிறார். இந்தப் படத்தில் 'வில்லன்' இல்லையே என்று யாரும் குறை சொல்ல முடியாதபடி டி. ஆர். நடராஜன் 'வில்ல'னாக வருகிறார்; கடைசியில் சிறைக்கும் போகிறார். மோகனின் தந்தையாக வரும் டி. பாலசுப்பிரமணியம் வழக்கம்போல் நன்றாய் மிரட்டி உருட்டுகிறார்.

மீனாவாக நடிக்கும் மாலினி ஒரு புது முகம். கதாநாயகியாக நடிக்கும் அரிய வாய்ப்பு அவருக்குக் கிடைத்திருக்கிறது. முயற்சி செய்து முன்னுக்கு வரவேண்டியவர்.

''சபாஷ் மீனா''வின் தயாரிப்பாளரான பி. ஆர். பந்துலு படத்தின் டைரக்ஷன் பொறுப்பை ஏற்றுத் திறமையாக நிர்வகித்திருக்கிறார். அத்துடன் மீனாவின் வயோதிகத் தந்தையாகவும் வந்து இயல்பான போக்கில் நன்றாய் நடித்திருக்கிறார்.

ஒலிப்பதிவு, ஒளிப்பதிவு இரண்டும் மிகவும் பொருத்தமாயிருக்கின்றன. காட்சியமைப்புகளில் இந்தப் படம் குழப்பமில்லாமல் அமைந்திருப்பது பாராட்டுக்குரியது. படப்பிடிப்பும் நன்றாயிருக்கிறது. கொட்டும் மழையில் மோகன்—மீனா காதல் காட்சி நடக்கிறது. அது வழக்கமான சினிமா மழையாயில்லாமல் நிஜ மழையாகவே இருக்கிறது!

படத்தின் பாடல்களை இயற்றியவர் கு. மா. பாலசுப்பிரமணியம். பாடல்கள் நன்றாயிருக்கின்றன. ''சித்திரம் பேசுதடி'' என்ற பாட்டு இன்னும் செவியில் ஒலிக்கிறது. சிறிது நேரம் வாய் விட்டுச் சிரிக்க விரும்பினால் யாரும் ''சபாஷ் மீனா!''வைப் பார்க்கலாம்.

அவனுக்கு
ஜான்ஸன்ஸ்
பேபி பவுடரின்
சுகத்தை
அளியுங்கள்




இலவச புத்தகம் :

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன் ஆப்
இந்தியா பிரைவேட் லிமிடெட்
பி. ஓ. பாக்ஸ் 1976
டிபார்ட்மெண்ட் 54-L
பம்பாய்

## தீபாவளி பண்டிகைக்காக

சொந்தத் தறிகளில் நூதன வேலைப்பாடுடன் தயாரித்த

பட்டு & நூல் ஜவுளி ரினுசுகள்

ஏராளமாகவும் விலை சரசமாகவும் எங்களிடம் கிடைக்கும்

# P. B. லக்ஷ்மணஸா & பிரதர்ஸ்

பட்டு ஜவுளி வியாபாரம்

109, ஐயா முதலி தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2

போன்: 86966

எமது அசல் கோள்ளேகாலம் பட்டு சேலைகள் தனிச் சிறப்பு வாய்ந்தவை

●

பம்பாயிலும் சென்னை [விலைக்கே கிடைக்கும்] இடம்:

**P. B. லக்ஷ்மணஸா & பிரதர்ஸ்**

பட்டு ஜவுளி வியாபாரம்

C/o. மேஹதா க்ளாத் ஸ்டோர்ஸ், (உடுப்பி போர்டிங் ஹோட்டல் அடியில்)
307, லக்கம்ஸி நாப்பு ரோட், மாதுங்கா (C. Rly.) பம்பாய்-19

---

**வழக்கமாக 2-நிமிஷம் பிரஷால் தேய்த்தால்**

# கால்கேட் டூத் பவுடர்

**மூன்று நன்மைகளையும் அளிக்கிறது!**




**✓ வாயில் நறுமணம்!**

**✓ ஒளிவீசும் பற்கள்! ✓ சொத்தை குறையும்!**

வாய்க்குப் பாதுகாப்பும், சுத்தமான ஒளிப் பற்களும் பெற, பல் டாக்டர் அங்கீகரிக்கும் இந்த முறையில் தினசரி கால்கேட் டூத் பவுடரை உபயோகியுங்கள்:

- சாப்பிட்டவுடன் கால்கேட் டூத்பவுடரால் பற்களை 2 நிமிஷம் பிரஷ் கொண்டு தேய்க்கவும்.
- பல்லின் நுனி, முன்புறம், பின்புறம் எல்லாவற்றையும் தேய்க்கவும்.
- எப்போதும் சுற்றிலிருந்து பல்நுனி நோக்கித் தேய்க்கவும்.

**கைகண்ட முறையை இன்றே கையாளுங்கள்!**

**பல் டாக்டர் அங்கீகரித்த சிறந்த பலன்தரும் முறை!**

பாகவதமாகிய

# பக்தி வயல்

பௌராணிகர்

## 8. கபிலர் தாய்க்குச் செய்த உபதேசம்

பூமியை மறுபடியும் பெற்ற பிரமதேவன் தனது சிருஷ்டியை மும்முரமாகச் செய்ய ஆரம்பித்தான். பிரமனுடைய முதல் சிருஷ்டியில் பதின்மூன்று முனிவர்கள் பிறந்தார்கள். அவருள் கர்தமர் என்பவர் ஒருவர். அவர் சரஸ்வதி நதிக்கரையை அடைந்து பிந்து சரோவரம் என்ற புனிதமான இடத்தில் பதினாயிரம் ஆண்டுகள் தவம் புரிந்தார்.

தவத்தால் திருப்தி அடைந்த செந்தாமரைக் கண்ணன் முனிவர் முன் தோன்றினார். கர்தமர் திருமாலைத் துதித்தார். "யோகிகளும் காணுதற்கரிய மங்கள மூர்த்தியை நான் காண்கிறேன். பிறவி என்ற கடலைத் தாண்ட உன் தாமரைத் தாள்களே கப்பலாகும். அறம், பொருள், இன்பம் என்ற மூன்று நெறிகளுக்கும் உதவியாகி எனது குலத்தைப் பெருக்கும் பகவென ஓர் மங்கையை மணம் செய்து கொள்ள விரும்புகிறேன். படைப்பதற்காகவே அன்றோ மாயையை ஆட்கொண்டிருக்கிறீர்" என்றார்.

மகாவிஷ்ணுவும் மனம் குளிர்ந்து முனிவரிடம் "உமது ஆசையை நிறைவேற்றுவதற்கு முன்னமேயே நான் வழி செய்திருக்கிறேன். ஸ்வாயம்புவமனு என்னும் வல்லரசனை நீர் அறிவீர். அவர், தம் மனைவி சதரூபாவுடன், நாளை மறுநாள் இவ்விடம் வருவார். உமக்கேற்ற நற்குணம் வாய்ந்த தம் மகள் தேவஹூதி என்ற கருங்கண் அழகியை உமக்கு மணம் செய்து வைப்பார். ஒன்பது பெண்களைத் தேவஹூதி பெறுவாள். என்னுடைய 'அம்ச'மாக நானும் உங்கள் இருவருக்கும் மகனாகப் பிறந்து என் தாயாருக்கு ஸாங்கிய மதத்தை உபதேசம் செய்வேன்" என்று வாக்கருளினார்.

எதிர்பார்த்தது போலவே மனுவும் அங்கு வந்து சேர்ந்தார். தவத்தினால் திகழும் மேனி வாய்ந்த முனிவரை மன்னவர் கண்டார். முனிவரும் வந்த அரசரை முறைப்படி உபசரித்தார். "அரசனும் கதிரவனைப் போல் தேர் ஏறி நாடெங்கும் சுற்றினால்தான் நல்லவர் வாழ்ந்து தீயவர் அழிவார்கள். ஆயினும், அரசே, நீர் இவ்விடம் வந்ததற்கு என்ன காரணம்?" என்று முனிவர் கேட்டார். அதற்கு மனு, "மறையைக் காப்பாற்றுவதற்கென்றே மறைவடிவம் கொண்ட லோக புருஷன் உங்களைப் படைத்திருக்கிறார். மறை காக்கும் அந்தணரை நான் காக்க வேண்டியவன். இப்பொழுது நான் என் மகளைப் பற்றிச் சிறிது கவலை கொண்டிருக்கிறேன். நாரதர் வாயிலாக உங்கள் குணத்தையும், அழகையும், படிப்பையும் கேட்ட என் மகள் உங்களிடம் மனத்தை இழந்திருக்கிறாள். ஆகையால் அன்புடனும் ஆதரவுடனும் அவளை உங்களுக்கு அளிக்கிறேன். இன்பத்திலும் இன்னலிலும் உங்களோடு கூடி வாழ்வாள்" என்றார்.

மகிழ்ச்சி மிகுந்த முனிவர், "கந்தர்வரும் கண்டு மயங்கும் மாசில்லா அழகு வாய்ந்து, தரித்த பொன் நகையின் ஒளி குன்றத் துலங்கும் உங்கள் மகளை யார் விரும்ப மாட்டார்? நான் இவளை மணந்து கொள்கிறேன். ஆனால் பரம்பொருளுடைய ஒளியொன்று இவள் வயிற்றில் கருவாகும் வரையில்தான் நான் இல்லறம் நடத்துவேன். பிறகு உடலை அடக்கி மனத்தை வென்று தவம் செய்வேன்" என்று பதில் அளித்தார்.

மனுவும் தன் மகள் தேவஹூதியைக் கர்தமருக்கு மணம் செய்து கொடுத்தார். தாய் தந்தையர், தங்கள் தலைநகருக்குச் சென்ற பிறகு தேவஹூதி தன் கணவனுக்கு, இமயமலையில் உமை சிவனுக்குச் செய்தது போல், பணிவிடை செய்து வந்தாள். அவளுடைய தூய்மையான நடத்தையும், அன்பும், பணிவிடையில் ஊக்கமும், குன்றாத மரியாதையும், புலன்களை அடக்கிய வாழ்க்கையும் முனிவர் மனத்தைக் கவர்ந்தன.

நெடு நாள் சேவை செய்ததால் உடல் மெலிந்த மனைவியைப் பார்த்துக் கர்தமர், "மனுவின் மகளே! நான் உன்னுடைய பக்தியாலும் பணிவிடையினாலும் பரவசமானேன். அரசருக்கும் அகப்படாத போகங்களை இன்று முதல் நீ அடைவாய்" என்று அருளினார்.

தேவஹூதி, "யோகத்தில் சிறந்த உங்களுக்குள்ளெல்லாம் எளிது. இப்பொழுது நீங்கள் என் தந்தைக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்ற வேண்டும். பூசிக்கத் தகுந்த கணவனிடம் மக்கட்பேற்றை அடைவதே கற்புடைய மனைவியருக்குப் பெரிய வரம்" என்றாள்.

உடனே கர்தமர் தம்முடைய யோக சக்தியால் ஆகாயத்தில், மனம் போன போக்கில் போகக் கூடிய ஒரு விமானத்தைப் படைத்தார். கல்லிழைத்த தூண்களும், தொங்கும் தோரணங்களும், வண்டுசூழ் மலர்களும், பட்டாடைகளும், பண்டங்களும், கட்டிலும், மெத்தையும், ஓவியமும், சிற்பமும், பவழத்தால் செய்த படிக்கட்டும், மரகதப்பாதையும், தங்கக் கோபுரமும், கண்ணைப் போல் காட்சி தரும் கல் பதித்த சுவரும், எண்ணில்லா அறைகளும் எல்லாம் பொருந்திய விமானத்தைக் கண்டு கர்தமரே வியந்து போனார். தேவஹூதியினிடம், 'இந்தக் குளத்தில் நீராடி விட்டு மாளிகைக்கு வா' என்று கூறினார். மண் படிந்த மேனியும், சிக்கான சடையும், அழுக்கேறிய துணியும் வெகு நாட்களாகத் தாங்கியிருந்த தேவஹூதி, முனிவர் சொல்லுக்கு இணங்கி நீரில் இறங்கினாள். நீருக்குள் தாமரையின் மணம் வீசும் மங்கையர் நூறு பேர்கள் நின்று கொண்டிருந்தனர். அவர்கள் தேவஹூதியைக் கண்டதும் பரபரப்புடன் எழுந்து, அவளுக்கு எண்ணெய் தேய்த்து, நீராட வைத்துப் பரிமளகந்தம் பூசி, ஆடை ஆபரணங்களை அணிவித்தார்கள். முனிவர் மனைவி, தன்னுடைய கருங்குழலையும், அழகிய பல் வரிசையையும், தாமரை மொட்டைப் பழிக்கும் கண்களையும் கண்ணாடியில் கண்டாள். தன் கணவனை நினைத்தாள். மறுநிமிஷம் முனிவரிடம் போய்ச் சேர்ந்தாள். இருவரும் வானத்தில் மிதக்கும் மாளிகைக்குள் சென்றார்கள். அப்பொழுது ரோகிணியுடன் இருக்கும் சந்திரனைப் போல் முனிவர் விளங்கினார். பல்லாண்டுகள் இருவரும் பல உலகங்கள் சுற்றினார்கள். தம் மனைவியின் காமத்தை அறிந்த கர்தமர் தம்மை ஒன்பது ரூபமாகப் பிரித்துக் கொண்டு அவளிடம் சென்றார். இவ்வாறு ஒரு முகூர்த்தமென நூறு ஆண்டுகள் கழிந்தன. தேவஹூதியும் கருத்தரித்து ஒன்பது பெண்களைப் பெற்றாள். சிற்றின்பத்தை விட்டு வெளியேறத் துணிந்தார் முனிவர். அப்பொழுது தேவஹூதி தனக்கு ஆண் மகன் இல்லையே என்று கர்தமரைக் கேட்டாள். உடனே கர்தமருக்கு ஹரியின் அருள்வாக்கு நினைவுக்கு வந்தது. "உனக்கு விஷ்ணுவே மகனாகப் பிறப்பார்" என்று தம் மனைவிக்கு ஆறுதல் உரைத்தார்.

தேவஹூதி அனந்தனை வழிபட்டு வந்தாள். வெகுநாட்கள் கழித்து அவரே தேவஹூதிக்கு மகனாகப் பிறந்தார். அவருக்குக் கபிலர் என்று பெயரிட்டார்கள்.

பிரமதேவன் கட்டளையை அனுசரித்துக் கர்தமர் தமது ஒன்பது புதல்விகளைப் பிரமன் படைத்த முனிவர்களுக்கு மணம் செய்து வைத்தார். கலையை மரீசிக்கும், அனசூயாவை அத்ரிக்கும், சிரத்தாவை அங்கிரஸுக்கும், ஹவிர்பூவைப் புலஸ்தியருக்கும், கதியைப் புலஹருக்கும், கிரியாவைக் கிரதுவுக்கும், கியாதியை ப்ருகுவுக்கும் அருந்ததியை வசிஷ்டருக்கும், சாந்தியை அதர்வருக்கும் கொடுத்தார்.

இந்த நல்ல செயலைச் செய்து விட்டுக் கர்தமர் கானகம் சென்றார். தேவஹூதியும் கபிலரும் பிந்துசரோவரத்திலேயே தங்கியிருந்தனர். ஒரு நாள் தேவஹூதி தன்மகனிடம் பின்வருமாறு வினவினாள்:

"பிரபுவே! புலன்களின் சுகத்தை நாடி நொந்து போயிருக்கிறேன். ஓயாமல் சிற்றின்பங்களைப் பின்பற்றி அறியாமை என்ற ஆழியில் விழுந்திருக்கிறேன். இருளை அகற்றும் சூரியனைப்போல் நீங்கள் தோன்றியிருக்கிறீர்கள். என்னுடைய மோகத்தை அழிக்க வேண்டும். 'நான்' என்பதும், 'என்னுடையது' என்...



தும் உங்களால் ஏவப்பட்ட எண்ணங்கள் அன்றோ? பிரகிருதி, புருஷன் இவ்விரண்டின் உண்மை யாது? பிறவி என்ற மரத்தை வேருடன் வெட்டவல்ல நீங்கள்தான் எனக்குச் சரணாகதி'' என்று கூறினாள்.

களங்கமற்ற இந்த வினாவைக் கேட்ட பரமன் புன்சிரிப்புடன் தம் தாய்க்கு உபதேசம் செய்யலானார்.



## முன்னுரை

**பா**கவதத்தில் கபிலர் தேவஹூதிக்குச் செய்த உபதேசம் மிகவும் சிறந்தது. கடவுளை அடைவதற்குப் பல வழிகள் உண்டு. யோகம் என்பது ஒரு வழி. பக்தி என்பது ஒரு வழி. கபிலர் அனேக விஷயங்களை எடுத்துரைக்கிறார். ஆனால் யோகமும் பக்தியும் கலந்த புது வழிதான் அவர் செய்த உபதேசத்தின் சாரம். ஒவ்வொரு பகுதியிலும் யோகமும் பக்தியும் கலந்தே வரும். மனத்தை அடக்கி யோகம் செய்வதில் ''எதற்காக'' என்ற நோக்கம் போதாது. மனத்தை அடக்காமல் வெறும் பரவசமாகப் பரவும் பக்திக்கு நிச்சயம் இல்லை. யோகத்தால் தன் வசம் வந்த மனத்துடன் செய்யும் பக்திக்கு நோக்கமும் உண்டு; நிச்சயமும் உண்டு. இதுதான் கபிலர் காட்டிய வழி.

முடிவில் காப்பது இந்த இரு பகுதி வாய்ந்த பக்திதான். நாராயண பட்டத்திரி தாம் எழுதிய கபிலர் உபதேசத்தின் முடிவில் இதையே கூறுகிறார்.

''பேச்சை வளர்ப்பதில் பயன் என்ன? பரமனே! உனது தாள்களைத் தேடும் பக்தி தீமையை அகற்றி நன்மையை நல்கும்; இது திண்ணம் என்பது நீ கூறிய வாக்கன்றோ? ஆகவே, குருவாயூர் கண்ணா, எனது உடல் வலியை நீக்கி பக்தியை அருளுவாய்.''

## பக்தியின் தன்மை

''**து**க்கமும் சுகமும், இரண்டுமே ஆழித் தணிந்து, பரம்பொருளிடம் மாறாது நிற்கும் மனோ நிலைதான் முக்திக்கு வழியான யோகம். ஆன்மாவுக்குக் கைவிலங்கும் மனம்தான்; விடுதலையும் மனம்தான். புலன்களுடன் உறவாடி இன்பத்தில் ஈடுபடும் மனம் ஆன்மாவைக் கட்டுகிறது. அதே மனம் ஆண்டவனை அண்டி நின்று ஆன்மாவை விடுவிக்கிறது. ஆகவே, ஆசை என்பது முற்றிலும் தவறல்ல. கடவுளிடம் காண்பிக்கும் ஆசை முக்தியை அளிக்கும்.

''முற்றிலும் துறந்த முனிவர்கள், கருணையும் நட்புமே மிகுந்து, அமைதியிலே அமர்ந்து, விரோதத்தை விலக்கி, மனத்தை என்மீது செலுத்தி, என் கதையைப் பாடி மகிழ்கின்றனர். அவர்களோடு உறவாடுவது நலம்; ஆசையை அகற்றுவதற்கும் மனம் அலையாது என்னையே எண்ணுவதற்கும் அதுவே எளிதான வழி.

''புலனுக்குப் பொருளாகும் வழிகளை விலக்குவதே வைராக்கியம், அல்லது பற்றின்மை. பற்றில்லையேல் மெய்யறிவு வளரும். அப்பொழுது பக்தி என்ற யோகத்தால் மனத்தை என்னிடம் அடைக்கலம் வைத்தால், உடலுக்குள் இருக்கும் உயிருக்கு உயிரான என்னை







# ஆஷா




## கண் மை

டிஸ்ட்ரிபியூட்டர்கள் :

**மெஸர்ஸ் ஜே. எல். மாரிசன் சன் அண்டு ஜோன்ஸ் ( இந்தியா ) பிரைவேட் லிமிடெட்**

கண்ட்ராக்டர் பில்டிங்ஸ், நிக்கல் ரோடு

பல்லார்டு எஸ்டேட் - - பம்பாய்-1

தயாரிப்பாளர்கள் :

**ஐடியல் இன்ஸ்டிடியூட் பிரைவேட் லிமிடெட்**

பம்பாய் - 2

இப்பிறவியிலேயே அருள்நெறியை அனுபவிக்கலாம்.

"வரம் ஒன்றும் விரும்பாமல் ஒரே மனத்தோடு என்னிடம் செய்யும் பக்தியானது முக்திக்கும் மேலானது. என் தாள்களைத் தொழுவதில் ஈடுபட்ட பக்தர்கள், என்னோடு ஒன்றாகி ஒடுங்கவும் வேண்டாம், வேறாகவே யிருந்து எனக்குச் சேவைகளைச் செய்ய வேண்டும் என்றே விருப்பமுறுவார். அவர்கள் ஸத்ய லோகத்தை மதிப்பதில்லை. தானாகத் தேடிவரும் எட்டு சித்திகளைச் சிந்திப்பதில்லை. அவர்களுக்கு வைகுண்டமும் வேண்டாம்; எல்லாம் துறந்து என்னைச் சரண்புகுந்த அவர்களை நான் பிறப்புக்கும் இறப்புக்கும் அப்பால் அழைத்துச் செல்வேன்."

**பிரகிருதியும் புருஷனும்:**

இதன் பிறகு கபிலர் 'பிரகிருதி' 'புருஷன்' என்று இரண்டாய்க் கலந்த தத்துவத்தை எடுத்துரைத்தார். "சடமாகித் தோன்றுவதெல்லாம் பிரகிருதி அல்லது இயற்கை. புருஷன் என்பவன் உள்ளிருக்கும் ஆன்மா. ஆன்மா அறிவானது. இயற்கைக்கு அப்பால் இருப்பது. ஆனால் இயற்கையுடன் சேர்ந்து, இயற்கையின் தன்மையான முக்குணங்களின் செயல்களைத் தான் செய்வதாக எண்ணுகிறது. உண்மையில் ஆன்ம புருஷன் வெறும் சாக்ஷி; செயலற்றவன். இயற்கையுடன் சேர்ந்து, தனக்குப் புலன்கள் செய்யும் செயல்களுடன் தொடர்பிருப்பதாக எண்ணுகிறான். தான் வேறு, பிரகிருதியுடன் உறவற்றவன் என அறிந்ததுமே, புருஷன், சம்சாரக் கடலைத் தாண்டி நிற்பான்.



"ஆனால் இந்த அறிவும் விடுதலையும் வருவது எவ்விதம்? இதற்கு இரண்டு வழிகள் கூறப்பட்டுள்ளன. ஒன்று யோகம்; மற்றொன்று பக்தி.

"முதலில் ஹரியானவர் நம்மிடம் எவ்வாறு குடிகொண்டிருக்கிறார் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். சிருஷ்டியின் பிரிவினைகளைக் கூறுங்கால், பரம்பொருளானது தன் மாயையைக் கருவியாகக் கொண்டு 'மகத்' என்ற புத்தி தத்துவத்தைப் படைத்தது என்று சொல்லியிருக்கிறோம். இதுதான் நம்மிடம் 'சித்தம்' என்று 'ஸத்வ' குணமாய் இருக்கிறது. ஹரியின் நான்கு தோற்றங்களில் ஒன்றான வாசுதேவன் 'சித்தத்'தில் உருவானவன்.

"இரண்டாவதாக, 'மகத்'திலிருந்து 'நான்' என்ற 'அகங்காரம்' வந்தது என்றுரைத்தோம். இது முக்குணங்களும் வாய்ந்து செயல்களில் ஈடுபட்டது. புலன்களுக்கும் மனத்துக்கும் காரணமானது. இதை ஹரியின் தோற்றமான 'ஸங்கர்ஷணர்' என்பார்கள். அனந்தன் என்ற ஆதிசேஷனின் உருவென்றும் உரைப்பார்கள்.

"இந்த அகங்காரத்தில் மூன்று பிரிவுகள் உண்டல்லவா? அவைகளில் முதல் பிரிவான 'ஸத்வ' பாகத்திலிருந்து வந்தது மனசு. மனசு, ஆதிபுருஷனுடைய தோற்றங்களில் 'அனிருத்தன்' எனப்படும். கார்த்திகையில் மலரும் கருங்குவளைப் பூவின் மேனி வாய்ந்த இவ்வுருவை யோகிகள் துதிப்பர்.

"அகங்காரத்தின் 'ராஜஸ' பாகத்திலிருந்து வந்தது 'புத்தி'. புருஷன் இதில் 'பிரத்யும்ன' ரூபமாக இருக்கிறார். ஐயம், நினைவு, உறக்கம், தவறான அறிவு, சரியான அறிவு, இவை புத்தியின் வேலைகள்.

"அகங்காரத்தின் 'தாமஸ' பாகத்திலிருந்து பஞ்சபூதங்களின் சூக்ஷ்ம ரூபங்களும் அவைகளை அறியும் இந்திரியங்களும் வந்தன என்பதை முன் கூறியாய் விட்டது.

"சூரியனுடைய ரூபத்தை நாம் நீரில் காண்கிறோம். நீர் அசையும்பொழுது நீரில் தோன்றும் சூரியனும் அசைகிறது. ஆனால் ஆகாயத்தில் இருக்கும் உண்மை சூரியன் அசைகிறானா? இல்லை. அதுபோலவே, புருஷன் மேற்கூறியவாறு நம்முடைய தேகத்தில் இருக்கிறான். அவனுக்கு மாறுதல் கிடையாது. அவனுக்குக் காரணமும் இல்லை. காரியமும் இல்லை. சுகமும் இல்லை, துக்கமும் இல்லை. பிரகிருதியுடன் சேர்ந்ததால், தான் செய்வதாகவும், அனுபவிப்பதாகவும் எண்ணுகிறான்.

"வைராக்கியத்தினால் மனத்தை வெளியே திரியாமல் உள் இழுக்க வேண்டும். பக்தியினால் என்னிடம் ஈடுபட வேண்டும். அப்பொழுது புருஷனைப் பிடித்த பிரகிருதி, தீயை மூட்டுவதற்குக் கருவியாக இருந்த கட்டை, தீயிலே அழிந்து போவது போல், தானாகவே அற்றுப் போய் விடும்."

**யோகத்தின் வழி**

"மனத்தை அதன் வழி விடாமல் இருப்பதுவதே யோகம். தன் கடமையைச் செய்து, தவறு செய்யாமல் இடைப் பதைக் கொண்டு மகிழ்ச்சி அடைந்து, புண்ணியம் சேமிக்கும் காரியங்களை ஒழித்து, (அதாவது யாகங்கள் முதலியன) சிற்றின்பங்களைச் சிந்திக்காமல், முக்திக்கு வேண்டிய செயல்களை மட்டும் செய்து கொண்டு, நல்ல உணவைச் சிறிதளவு உண்டு, தனிமையைத் தேடி, அகிம்சையை அவலம்பித்து, உயிர் நீக்க வேண்டியதற்குத் தீராத பொருள்களை மட்டும் வைத்துக் கொண்டு, புணர்ச்சியின்றி, கடுந்தவம் புரிந்து, மறை ஓதி, பேச்சைவிட்டு, யோகத்தில் கூறிய உறுதியான நிலையில் உட்கார்ந்து கொண்டு, மெதுவாகச் சுவாசத்தை அடக்க முயற்சி செய்து, புலன்களை வெளியே திரியாமல் நெஞ்சினுள் திருப்பி, மனத்தையும் பிராணனையும் உடம்பில் இருக்கும் இரகசியமான சக்கரங்களில் (இவை ஆறு. இவைகளை யோக நூல்களில் படிக்கலாம்) நிலை நாட்டி, ஆண்டவனை எண்ணி மனத்தை அமைதிப்படுத்திப் பழகுவதே யோக வழியின் முதல் பாகம்.

"பிறகு, மூச்சை அடக்கும் வழியில் ஈடுபட வேண்டும். முடிந்த அளவு மூச்சை உள் இழுத்து, முடியும்வரையில் உள்ளே வைத்திருந்து, பின்னர் பூராவையும் வெளியே விடவேண்டும். இவ்வாறு பழகினால், உருக்கிய தங்கமென மனமானது சுத்தமாகும். உடனே, மூக்கின் நுனியை நோக்கிக் கொண்டே நாராயணனுடைய மேனியைத் தியானம் செய்ய வேண்டும்.

"புன்னகை தவழும் தாமரை முகம், தாமரையின் உட்பகுதியைப் போன்ற செங்கண், இந்திவர மலரென நீலமான மேனி, சங்கு, சக்கரம், கதை ஏந்திய கைகள், இடையில் தாமரைத் தண்டின் நூல்போல் மெல்லிய மஞ்சள் பட்டாடை, மார்பில் ஸ்ரீவத்ஸம் என்ற மறு, கழுத்தில் கௌஸ்துபம் என்ற மணியும் வனமாலையும் முத்து ஆரமும், கிரீடம், கை வளை, இடுப்பில் மேகலை- இந்த ரூபத்துடன் நாராயணன் தன் பக்தர் நெஞ்சாகிற தாமரையில் குடி இருக்கிறான்.

"மனம் அசையாமல் அமரும் வரை மேற்சொன்ன மேனியைத் தியானம் செய்ய வேண்டும். இதற்கு மேல் கால் முதல் தலை வரையில் ஹரியினுடைய ஒவ்வொரு அவயவத்திலும் மனத்தை வேறாக நிறுத்த வேண்டும்.

"இவ்வாறு தியானம் செய்யும் பக்தனுக்கு ஹரியினிடம் அடங்காத அன்பு உண்டாகிறது. அலைந்த கடலென மனமானது ஓய்ந்து விடும். அப்பொழுது பக்தன் எங்கும் கடவுளையே காண்பான். தனியாக இருக்கும் தான் வேறு, துக்கசுகங்களை அனுபவிக்கும் உடல் வேறு என்று அறிவான்."

**பக்தி யோகம்**

இது வரை கவனித்துக் கேட்டு வந்த தேவஹூதி, புத்தி என்ற மகத், ஜடம் என்ற பிரகிருதி, புருஷன் என்ற ஆத்மா என்ற தத்துவங்களைத் தெரிந்து கொண்டாள். இவைகளை அறிந்து கொண்டு யோக சித்தியினால் அடையும் பேரின்ப வழியையும் அறிந்தாள். ஆனால் 'பக்தி யோகம்' என்பது என்ன என்று அவளுக்கு நன்றாக விளங்கவில்லை. அதை விவரித்துச் சொல்ல வேண்டும் என்று கபிலரைக் கேட்டுக்கொண்டாள். அதற்குக் கபிலர் கீழ்வருமாறு பதில் கூறினார்:

"பக்தி யோகம் பலவிதமானது. சினத்துடன் சிந்திப்பவன் 'தாமஸ' பக்தன். பெருமையும் செல்வமும் வேண்டி என் உருவத்தைப் பூஜைசெய்பவன் 'ராஜஸ' பக்தன். கடமை என்று கருதிப் பாபங்கள் போவதற்கு என்னைத் துதிப்பவன் 'ஸாத்விக' பக்தன். இவர்கள் மூவரும் என்னைத் தங்களைவிட வேறாகவே எண்ணுகிறார்கள்.

"அனைவருக்கும் உள்ளிருக்கும் என்னிடம், கங்கை நீர் கடலை நோக்கி விரைந்தோடுவது போல், மனத்தை இடைவிடாது செலுத்தி அளவிலா அன்பு கொண்டிருப்பதே பக்தி யோகம். இதற்கு மாறாகவும் மேலாகவும் என்னுடைய பக்தர்கள் வேறு எதையும் விரும்புவதில்லை.

"என்னை அடைவதற்கு எட்டு அங்கமுள்ள (இந்த அங்கங்களை யோக நூல்களில் காணலாம்) யோகமும்,பக்திமார்க்கமும் இரண்டும் நல்வழிகளாம். வேதாந்திகள் கூறும் பிரம்மமும், யோகிகள் பின்பற்றும் பரம்பொருளும், ஸாங்கியர் சொல்லும் பிரகிருதியும் புருஷனும், கர்மத்துக்கு ஏற்றவாறு ஜீவன்களைப் படைத்துத் துடைக்கும் தெய்வமும், எல்லாம் என்னுடைய விலாசங்கள்."

மேற்கூறியவாறு தாய்க்கு உபதேசம் செய்து விட்டுக் கபிலர் மறைந்தார். கபிலர் சொன்ன யோகத்தை தேவஹூதி பழகி வந்தாள். ஆயினும் முனைவு சேனைப் பிரிந்த பசுவைப்போல் வருந்தினாள். சிறிது சிறிதாக மனத்தைக் கடவுளிடம் நிலைநாட்டி, முடிவில் அவனை அடைந்தாள். **(தொடரும்)**

## அத்தியாயம் 32

# புவனமோகினியின் பீதி

நள்ளிரவுவரை இடையாற்று மங்கலம் நம்பிக்கு ஒற்றறிந்து கூறியதற்காக ஆபத்துதவிகள் தலைவன் தன்னை எப்போது, எப்படித் துன்புறுத்துவானோ என்று அஞ்சி மஞ்சத்தில் உறக்கமின்றிப் புரண்டு கொண்டிருந்த புவனமோகினி அரண்மனை நாழிகை மன்றத்தில் முதல் யாம முடிவில் அடிக்கும் மணி அடித்து முடித்த சிறிது நேரத்துக்கெல்லாம் தன்னையறியாமலே துயில் வயப்பட்டாள். நன்றாக அயர்ந்து தூங்கிவிடவில்லையானாலும் உடல் சோர்வடைந்து தன்னுணர்வை இழந்திருந்தது. தூக்கத்தில் ஒரு முறை புரண்டு படுத்தாள்

புரண்டு படுத்த சிறிது நேரத்தில் கழுத்தின் பின்புறம் பிடரியில் ஏதோ வெப்பமான மூச்சுக் காற்று உரசிச் செல்வது போலிருந்தது. தலையில், பூச்சூடிக் கொண்டிருந்த இடத்தில் கொஞ்சம், கொஞ்சமாக அந்த வெப்பக் காற்றுப்பட்டு உறைப்பது போலிருந்தது

"உண்மைதானா? அல்லது தூக்கக் கலக்கத்தில் ஏதாவது சொப்பனம் காண்கிறோமா?" என்று சந்தேகப்பட்டு மெல்லக் கண்களைத் திறந்தாள் புவனமோகினி. தலையருகே யாரோ குனிந்து முகர்ந்து பார்ப்பதுபோல் ஒரு பிரமை; ஒரு குறுகுறுப்பு அவள் மனத்தில் உண்டாயிற்று. தலைப்பக்கம் விளக்கு மங்கலாக எரிந்து கொண்டிருந்தது. தலைமாட்டில் ஆள் நின்று கொண்டிருந்தால் திரும்பிப் பார்த்துத்தான் அதைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்பதில்லை. சுவரில் நிழல் நன்றாக விழும். புவனமோகினி எதிர்பார்த்தது வீண் போகவில்லை. எதிர்ச் சுவரில் ஓர் உருவத்தின் கரிய நிழல் பயங்கரமாகப் படிந்திருந்தது. கண்களைத் திறந்து அந்த நிழலைப் பார்த்ததும், பீதியினால் 'வீல்' என்று அலறி விட்டாள் அவள். அந்த அலறல் அவள் வாயிலிருந்து முழுமையாக வெளிப்பட்டு விடாமல் ஒரு முரட்டுக் கை தலைப் பக்கத்திலி






ருந்து அவள் வாயைப் பொத்தியது. அச்சத்தினால் மைதீட்டிய அவள் கண் இமைகளுக்குக் கீழே விழிகள் பிதுங்கின. முகம் வெளிறியது. படுத்திருந்தாலும் பயத்தினால் உடம்பு 'வெடவெட' வென்று நடுங்கியது. நெஞ்சகங்கள் திடீரென்று மலைகளாக மாறிக் கனத்து இறுகி அழுத்துவது போல் மூச்சு அடைத்தது. பயத்தோடு பயமாகத் தலையை ஒருக்களித்துத் திருப்பி மிரளும் விழிகளால் தலைப் பக்கம் பார்த்தாள். தூண்டாவிளக்கின் மங்கலான ஒளியில் ஆபத்துதவிகள் தலைவனின் முகத்தைக் கண்டாள் புவனமோகினி. அவள் நெஞ்சு 'படக் படக்' என்று வேகமாக அடித்துக் கொண்டது. வலிமை பொருந்திய அவனது இரும்புக் கை அவள் வாய்க்குக் கவசம் போட்டுப் பூட்டியது போல் அழுத்திப் பொத்திக் கொண்டிருந்தது. ஆபத்துதவிகள் தலைவனின் மற்றொரு கை அவள் கழுத்துக்கு நேர் உயரே பாம்பு நெளிவது போன்ற சிறு குத்துவாள் ஒன்றை ஓங்கிக் கொண்டிருந்தது. அந்த நிலையில் அந்தச் சமயத்தில் எதிர்ச் சுவரில் தெரிந்த அவன் நிழல் கூடப் பார்ப்பதற்குப் பயங்கரமாக இருந்தது. சிறிது நேரம் அப்படியே கழிந்தது. அவள் கழுத்துக்கு நேரே ஓங்கியிருந்த கத்தியாலேயே விளக்கின் திரியை நசுக்கி அணைத்தான் அவன். சுடர் நாற்றமும், திரி கருகிய புகையும் மூச்சில் கலந்து நெஞ்சைக் குமட்டின. விளக்கு அணைந்து இருள் பரவியவுடன் புவனமோகினியின் பயம் அதிகமாயிற்று. பலங்கொண்ட மட்டும் அவன் கையைப் பிடித்துத் தள்ளித் திமிறி எழுந்து மீண்டும் கூச்சலிட்டாள் அவள். இருட்டில் அவன் ஓடி விட்டான்.



அவள் போட்ட கூச்சலைக் கேட்டு விளக்குகளோடும், தீப் பந்தங்களோடும், அந்தப்புரத்துப் பெண்களும், காவல் வீரர்களும் அங்கு ஓடிவந்தபோது யாரும் வந்துபோன சுவடே தெரியவில்லை. அவ்வளவு விரைவில் ஆள் தப்பி விட்டான். புவனமோகினி கூறியதை அவர்களில் எவருமே நம்பத் தயாராயில்லை. "அடி, பைத்தியக்காரப் பெண்ணே! ஏதாவது கெட்ட சொப்பனம் கண்டாயா? உன் கூச்சலால் அந்தப் புரத்தையே அதிரச் செய்து விட்டாயே? என்னதான் பயங்கரமாகச் சொப்பனம் கண்டாலும் இப்படியா கூச்சல் போடுவார்கள்?" என்று வண்ண மகள் புவனமோகினியை விலாசினியும், பகவதியும் கேலி செய்யத் தொடங்கி விட்டார்கள். புவனமோகினி தன் அனுபவம் உண்மை என்பதைக் கடைசிவரை அவர்கள் நம்பும்படி செய்ய முடியவில்லை. அவள் கனவுதான் கண்டிருக்க வேண்டுமென்று பிடிவாதமாகச் சாதித்தார்கள் அவர்கள். அதன் பின் அன்றிரவு அவளைச் சுற்றிப் பன்னிரண்டு தோழிப் பெண்கள் பக்கத்துக்கு மூன்று பேர்கள் வீதம் துணைக்குக்காவலாகப் படுத்துக்கொண்ட பின்பே படுக்கையில் படுத்தாள். இங்கே இது நடந்த நேரத்தில்தான் இடையாற்று மங்கலத்து மாளிகையில் அந்தப் பயங்கரக் கொள்ளையும் நடந்திருந்தது. ஒரே இரவில் ஒரே நேரத்தில் இரண்டு குழப்பங்கள் நடந்து விட்டன.

மறுநாள் பொழுது புலர்ந்தபோது தென்பாண்டி நாட்டின் அரசியல் வாழ்வுக்கு அதிர்ச்சி தரும் உண்மைகளும் வந்து சேர்ந்தன. மகாமண்டலேசுவரர் கண் விழித்து எழுந்தவுடன் கரவந்தபுரத்திலிருந்து வந்திருந்த தூதனை அவருக்கு முன்னால் கொண்டு போய் நிறுத்தினான் தளபதி வல்லாளதேவன். அதற்கு முன்பு முதல் நாளிரவு புவனமோகினியின் பள்ளியறையில் நடந்த கலவரம் அவர் காதுக்கு எட்டியிருந்தது. கரவந்தபுரத்துத் தூதன், தான் கொண்டு வந்திருந்த முத்திரையிட்டு ஜாக்கிரதையாகப் பத்திரப்படுத்திய ஓலையை மகாமண்டலேசுவரரிடம் கொடுத்தான்.



அவசரம் அவசரமாக அதன் மேலிருந்த அரக்கு முத்திரைகளைக் கலைத்து உதிர்த்து விட்டு ஓலையைப் பிரித்துப் பார்த்தார்.

"தென்பாண்டி நாட்டு மகாமண்டலேசுவரர் திருச்சமுகத்துக்குக் கரவந்தபுரத்து உக்கிரன்கோட்டைக் குறுநிலவேள் பெரும் பெயர்ச்சாத்தன் பல வணக்கங்களுடன் அவசரமாய் எழுதும் திருமுகம் :—

"வடபாண்டி நாட்டு மதுரை மண்டலம் முழுதும் வென்று கைப்பற்றியதோடு ஆசை தணியாமல் கோப்பரகேசரி பராந்தக சோழன் தென்பாண்டி நாட்டின் மீதும் தக்கவர்களின் படைத்துணையோடு படையெடுக்கக் கருதியுள்ளான். இந்தப் படையெடுப்பு நாம் எதிர்பாராமலிருக்கும்போது மிக விரைவில் திடீரென்று நம்மேல் நிகழும் என்று தெரிகிறது. பல நாட்களாக இங்கே உக்கிரன்கோட்டையிலும், இதைச் சுற்றியுள்ள இடங்களிலும் சோழ மண்டலத்து ஒற்றர்களும், உளவறிவோரும் இரகசியமாக உலாவக்காண்கிறேன். மிக விரைவில் வடதிசை மன்னர் படையெடுப்பால் நாம் தாக்கப்படுவோம்என்பதற்குரிய வேறு சில சங்கேதமான நிகழ்ச்சிகளை நமது வட எல்லைப் பிரதேசங்களில் அடிக்கடி காண முடிகிறது. கீழைப் பழுவூர்ச் சிற்றரசன் பழுவேட்டரையன் கண்டன் அமுதனும், சோழ மண்டலத்துப் பாம்புணிக் கூற்றத்து அரகுருடையான் நீரன் சென்னிப் பேரரையனும் இப் படையெடுப்பில் பராந்தக

சோழனுக்கு உறுதுணையா யிருப்பார்களென்று தெரிகிறது. தென்பாண்டி மண்டலத்தின் வட எல்லைக் காவல் பொறுப்பு அடியேனிடம் ஒப்புவிக்கப்பட்டிருப்பதால் இந்தச் செய்தியை உடனே தங்களுக்கும், மகாராணி வானவன்மாதேவியாருக்கும் அறிவித்து விடவேண்டுமென்று இத்திருமுகம் எழுதலானேன்.

கட்டளைப்படி இத்திருமுகம் கொண்டு வருவான் மானகவசனென்னும் உத்தம தேவன்பால் மறுமொழியும் படையெடுப்பைச் சமாளிக்கும் ஏற்பாடு விவரங்களும் காலந் தாழ்த்தாது அறிவித்து அனுப்புக."

இங்ஙனம் தென்பாண்டி மண்டலப் பேரரசுக்கு அடங்கிய, குறுநிலவேள் பெரும் பெயர்ச்சாத்தனின் திருமுகத்தைப் படித்து முடித்ததும் இடையாற்று மங்கலம் நம்பி மிகப் பெரிய அதிர்ச்சிக்குள்ளானார். இவ்வளவு சீக்கிரமாக இந்தப் படையெடுப்பு நேருமென்று கனவிற் கூட எதிர்பார்க்கவில்லை அவர். உடனே தளபதியையும், சரவந்தபுரத்துத் தூதனையும் அழைத்துக்கொண்டு மகாராணியாரைச் சந்திப்பதற்காக அந்தப்புரத்துக்குச் சென்றார் அவர். செய்தியை மகாராணியாரிடம் படித்துக்காட்டியபோது அவரும் அதிர்ச்சிக்குள்ளானார். "மகாமண்டலேசுவரரே! ஒரே ஒரு வழிதான் எனக்குத் தோன்றுகிறது. அவசரமாக நாளைப் பொழுது விடிவதற்குள் நீங்கள் இராசசிம்மனைத் தேடிச் சேர்த்துக் கொண்டு வந்தால் அவனையே சேர நாட்டுக்குத் தூதனுப்பலாம். அவனே நேரில் போனால் மாமன்மாராகிய சேரர்கள் படை உதவி செய்ய நிச்சயம் ஒப்புக் கொள்வார்கள். சேரர் படை உதவி கிடைத்தால் நாம் எதற்கும் அஞ்ச வேண்டாம். இப்போது இதைத் தவிர வேறு ஒரு வழியும் எனக்குத் தோன்றவில்லை. நீங்கள் உடனே இராஜசிம்மனைத் தேடிக் கொண்டுவர ஏற்பாடு செய்யுங்கள்" என்று கூறினார் மகாராணியார்.

"மகாராணியார் என்னை மன்னிக்க வேண்டும். ஒரு இரகசியத்தை இந்தக் கணம்வரை உங்களிடம் சொல்லாமலே மறைத்து வந்திருக்கிறேன். குமார பாண்டியர் சில நாட்களாக என் விருந்தினராக இடையாற்றுமங்கலம் வசந்த மண்டபத்தில்தான் தங்கியிருக்கிறார். இப்போதே சென்று இங்கு அழைத்து வரச் செய்கிறேன்."

"உண்மையாகவா?" மகாராணியின் குரலில் அவநம்பிக்கையும், வியப்பும் போட்டியிட்டன. தளபதி வல்லாளதேவனின் முகத்தில் ஆச்சரியத்தின் உணர்வுச் சாயைகள் கோடிட்டன. தூதன் திகைத்துப் போய் நின்றான். "உண்மைதான்! சில நாட்களுக்கு முன்புதான் கடல்கடந்த நாட்டிலிருந்து இளவரசரை இரகசியமாக இங்கு வரவழைத்தேன். யாருக்கும் தெரிந்துவிடக் கூடாதென்பதற்காக அவரை மாறுவேடத்திலேயே விழிஞம் துறைமுகத்திலிருந்து இரவோடிரவாக அழைத்துச் சென்றேன். இடையாற்று மங்கலத்தில் இப்போதும் இளவரசர் துறவிபோல் மாறுவேடத்திலேயே தங்கியிருக்கிறார். ஒரு சில முக்கியமான அரசியல் காரணங்களுக்காக இளவரசர் வரவைத் தங்களுக்குக் கூடத் தெரிவிக்க முடியாமல் போய்விட்டது. ஆனால் நான் எவ்வளவு முன்னேற்பாடாகவும், பரம ரகசியமாகவும் இதை மறைத்தேனோ, அவ்வளவு எதிர்பாராத விதமாக, சிலருக்குக் குறிப்பாக இந்த இரகசியம் புரிந்து விட்டது" என்று கூறிக்கொண்டே சிரித்துவிட்டுத் தளபதியின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தார் அவர். ஏற்கெனவே அவர்மேல் சிறிது மனக் கடுப்போடு இருந்த தளபதி, "மற்றவர்களுக்கும் சாமர்த்தியம், அறிவு, சூழ்ச்சித்திறன் எல்லாம் இருக்க முடியும் என்பதைச் சில சமயங்களில் தாங்களும் தங்களுடைய அந்தரங்க ஒற்றனும் மறந்து விடுகிறீர்கள்" என்று குத்தலாக அவருக்குப் பதில் சொன்னான்.

"சேந்தன் அசட்டுத்தனமாக எதையாவது செய்திருப்பான். அதையெல்லாம் மனத்தில் வைத்துக் கொள்ளாதே, தளபதி!" என்று அவனைச் சமாதானப்படுத்தித் தழுவிக் கொள்கிறவர்போல் குழைந்து பேசினார் இடையாற்று மங்கலம் நம்பி.

"ஓகோ! அசட்டுத்தனத்தைக்கூடத் திட்டமிட்டுக் கொண்டு செய்வதுதான் தங்களுக்கும், தங்கள் ஒற்றனுக்கும் வழக்கம் போலிருக்கிறது. இன்றுதான் எனக்கு உங்களைச் சரியாகப் புரிகிறது" என்று கடக்கடப் பதில் கொடுத்தான் தளபதி. அதற்கு மேலும் அவரை வம்புக்கு இழுக்க வேண்டுமென்று அவன் ஆத்திரம் அவனைத் தூண்டியது. மகாராணியாரின் முன்னிலையில் அப்படிச் செய்வது மரியாதைக் குறைவாகப் போய் விடும் என்று அடக்கிக் கொண்டு பேசாமல் இருந்து விட்டான். தளபதியும், மண்டலேசுவரரும் பேசிக்கொண்ட விதத்தைக் கவனித்ததில் அவர்களுக்குள் 'ஏதோ பிணக்கு இருக்கிறது' என்ற குறிப்பு மட்டும் மகாராணியாருக்குப் புரிந்தது. 'அது என்ன பிணக்கு?' என்பதை அவர்களிடமே வற்புறுத்தித் தூண்டிக் கேட்க விருப்பமில்லை அவ

ருக்கு. "மகா மண்டலேசுவரரே! இன்னும் எதைச் சிந்தித்துக் கொண்டு நேரத்தைக் கழிக்கிறீர்கள்? தூதன் காத்துக் கொண்டிருக்கிறான். அவனுக்குப் பதில் ஓலை கொடுத்து அனுப்பி வையுங்கள். உடனே இடையாற்று மங்கலம் சென்று வடதிசை மன்னர் படையெடுப்பு விவரங்களைக் கூறிக் குமார பாண்டியனை இங்கே அழைத்து வாருங்கள். இன்று இரவிலேயே மறுபடியும் கூற்றத் தலைவர்களைக் கூட்டி இளவரசனையும் உடன் வைத்துக் கொண்டு கலந்து ஆலோசிப்போம். உடனே புறப்படுங்கள். தாமதத்துக்கு இது நேரமில்லை" என்று வானவன்மாதேவியார் அவரைத் துரிதப்படுத்தினார்.

"தளபதி! உனக்கும், எனக்கும், என்னுடைய ஒற்றனுக்கும், ஒருவரையொருவர் சரியாகப் புரிந்து கொள்ள முடியாத சந்தர்ப்பச் சூழ்நிலைகளின் காரணமாக எத்தனையோ உட்பகைகள் இருக்கலாம். அவற்றையெல்லாம் இந்தச் சமயத்தில் நாம் மறந்துவிட வேண்டும்" என்று அவனிடம் கெஞ்சுவதுபோல் கூறினார் இடையாற்றுமங்கலம் நம்பி.

இந்தச் சமயத்தில் ஒரு வீரன் அவர்கள் பேசிக் கொண்டிருந்த இடத்துக்கு வந்து, "மகாமண்டலேசுவரரைத் தேடிக் கொண்டு இடையாற்றுமங்கலத்திலிருந்து அவசரமாக ஒரு ஆள் வந்திருக்கிறான்" என்று தெரிவித்தான். "அவனை உடனே இங்கு அழைத்துக் கொண்டு வா" என்று உத்தரவிட்டார் மகா மண்டலேசுவரர்.

படகோட்டி அம்பலவன் வேளான் உள்ளே வந்து நின்றான். அவன் முகம் பேயறைபட்டது போல் வெளிறிப் போயிருந்தது.

"சுவாமீ! மாளிகையில் நடக்கக் கூடாத அநியாயம் நடந்து விட்டது. எந்தப் பொருள்களை உயிரினும் மேலானவையாகக் கருதிப் பாதுகாத்து வந்தோமோ, அந்தப் பொருள்கள் நேற்றிரவு கொள்ளை போய்விட்டன. பாண்டிய மரபின் சுந்தர முடியையும், வீரவாளையும், பொற் சிம்மாசனத்தையும் பறி கொடுத்து விட்டோம். இன்று காலையில் தான் கொள்ளை போனது எல்லோருக்கும் தெரியும். நேற்றிரவு கொள்ளை நடந்தபின் வசந்த மண்டபத்தில் வந்து தங்கியிருந்த அந்தச் சாமியாரையும், நேற்றுக் காலை அவரைத் தேடி வந்து அவரோடு தங்கியிருந்த ஆட்களையும் தீவின் எல்லையிலேயே காணவில்லை." படகோட்டி மூச்சு விடாமல் கூறிக் கொண்டே போனான். அங்கிருந்தவர்கள் அனைவரும் கல்லாய்ச் சிலையாய்ச் சமைந்து நின்றனர்......

## அத்தியாயம் 33

# செம்பவழத் தீவு

இடையாற்றுமங்கலம் மாளிகையில் பாண்டிய மரபின் மரியாதைக்குரிய மாபெரும் அரசுரிமைச் சின்னங்கள் கொள்ளை போன மறுநாள் காலையிலேயே தென்பாண்டி நாடு முழுவதும் பரவிவிட்டது அந்தச் செய்தி. வடபால் நாட்டுக் கரவந்தபுரத்திலிருந்து தென்கோடியாகிய குமரித்துறை வரையில் எங்கும் ஒருவகைப் பயமும் திகைப்பும் பரவி விட்டன. சாவு நிகழ்ந்த வீடு போல், மழையைக் கொட்டித் தீர்த்து விட்ட வானம் போல், ஒரு அமைதி. பறி கொடுக்கக் கூடாத பொருளைப் பறி கொடுத்து விட்டால் ஏற்படுமே, அந்த அமைதி; சோகம் கலந்து சூழ்ந்திருந்தது.

அமைதியும், துயரமும் கலந்த இந்தச் சூழ்நிலையிலிருந்து நேயர்களை அழகான கடல் பகுதிக்கு அழைத்துக் கொண்டு போகப் போகிறேன். தென்மேற்குக் கோடியில் அலை கொட்டி முழக்கும் மேலைக் கடலின் அழகுமயமாய்ச் சிறந்து விளங்கும் விழிஞம் துறைமுகத்தைப் பற்றி நம் நேயர்கள் முன்பே அறிந்து கொண்டிருப்பார்கள். அந்தத் துறைமுகத்தில் தானே நாராயணன் சேந்தன் என்ற அபூர்வமான மனிதனை அவர்களுக்கு முதன் முதலாக அறிமுகப் படுத்தி வைத்தேன்!

இடையாற்றுமங்கலத்தில் கொள்ளை போன மறுநாள் நண்பகல் உச்சி வேளைக்கு விழிஞம் துறைமுகத்துக்குத் தெற்கே ஐந்து காத தூரத்தில் ஒரு வனப்பு மிக்க தீவின் கரையோரமாகக் கடலில் மிதக்கும் வெண்தாமரை போல் அழகிய கப்பலொன்று விரைந்து செல்வதைக் காண்கிறோம். ஆ! அதென்ன? உச்சி வேளையின் ஒளிக் கதிர்களில் அந்த மரக்கலத்தின் பாய்மரக் கம்பில் ஆண் சிங்கம் ஒன்று பாய்வதற்குத் தயாராகிக் கொண்டிருப்பதுபோல் ஒரு காட்சி தெரிகிறதே! அல்ல! அல்ல! அது ஒரு கொடி தான். அந்தக் கொடி காற்றில் ஆடி அசையும்போதெல்லாம் அதில் தத்ரூபமாகச் சித்திரிக்கப்பட்டிருக்கும் சிங்கத்தின் உருவம் உயிர் பெற்றுப் பாய்வது

போல் பார்க்கிறவர்களின் கண்களில் ஒரு பிரமையை உண்டாக்கி விடுகிறது. அவ்வளவுதான். அடடா! அந்தத் தீவில் தான் என்ன எழில்; எவ்வளவு இயற்கைக் கவர்ச்சி; தீவுக்கு என்ன பெயர் என்று சொல்லவும் வேண்டுமோ? கரையோரமாக இரத்தக் காடு முளைத்தது போல் படர்ந்து கிடக்கும் செம்பவழக் கொடிகளைப் பார்த்தாலே தெரியவில்லையா? செம்பவழத் தீவு! எத்தனை இனிமையான பெயர்! மேலைக் கடலில் மூலைக்கு மூலை பரவிக் கிடக்கும் பன்னீராயிரம் 'முந்நீர்ப் பழந்தீவு'களில் அதுவும் ஒன்று.

கொத்துக் கொத்தாகக் கடலை நோக்கித் தொங்குவது போல் மேகங்கள், தீவின் பசுமை, கப்பல் செல்லும் அழகு, கடல் மகளுக்குச் செம்பஞ்சுக் குழம்பு பூசியது போல் பவழக் கொடிகள்;—



ஆகிய இவற்றின் அழகில் மயங்கி அந்தக் கப்பலில் பிரயாணம் செய்வோர் யார்? எதற்காகப் பிரயாணம் செய்கின்றனர்? எங்கே பிரயாணம் செய்கின்றனர்? என்பது போன்றவற்றை நாம் கவனிக்காமல் விட்டுவிடக் கூடாதல்லவா?

அதோ கப்பல் செம்பவழத் தீவின் கரையோரமாக நிற்கிறது. பயங்கரமான மீசையோடு காட்சியளிக்கும் ஒரு முரட்டு மீகாமன் (மாலுமி) கீழே குதித்துத் தீவின் கரையோரத்துத் தென்னை மரம் ஒன்றில் நங்கூரம் பாய்ச்சுகிறான். ஏதோ, தேர், திருவிழா அதிசயங்களைப் பார்க்க ஓடி வருகிறவர்களைப் போல் அந்தத் தீவின் ஆண்களும், பெண்களும், கப்பலைப் பார்க்க ஓடி வருகிறார்கள். ஆகா! அந்தத் தீவின் மக்கள்தான் என்னென்ன விநோதமான முறைகளில் உடையணிந்திருக்கிறார்கள்!

முகத்திலும், விழிகளிலும், வியப்பும், புதுமையும், இலங்கக் கப்பல் நின்ற இடத்தைச் சூழ்ந்து கொண்டார்கள் அவர்கள். மீகாமன் அவர்களை வழிவிட்டு ஒதுங்கி நின்று கொள்ளுமாறு அதட்டினான்.

இப்போது அந்தக் கப்பலிலிருந்து செம்பவழத் தீவின் கரையில் இறங்கப் போகிறவர்களைப் பார்க்கலாம்.

உள்ளேயிருப்பவர்கள் கரையில் இறங்குவதற்காகத் தூக்கிக் கட்டியிருந்த மரப்படிக் கட்டைத் தணிவாக இறக்கி வைத்தான் மீகாமன்.

முதலில் குமார பாண்டியன் இராசசிம்மன் சிரித்த முகத்தோடு கீழே இறங்கினான். தாடி மீசையோடு கூடிய பழைய துறவி தோற்றத்துக்கும் இப்போதைய இளமைத் தோற்றத்துக்கும்தான் எவ்வளவு வேற்றுமை? அடுத்து முதல் நாள் அவனைத் தேடி இடையாற்றுமங்கலத்துக்கு வந்திருந்தவர்களும் கப்பலிலிருந்து இறங்கினார்கள்.

"சக்கசேனாபதி! இந்நேரத்துக்குள் செய்தி தென்பாண்டி நாடு முழுவதும் பரவியிருக்கும். அரண்மனையில் கூற்றத் தலைவர் கூட்டத்துக்காகப் போய்த் தங்கியிருக்கும் மகா மண்டலேசுவரருக்கு இடையாற்றுமங்கலத்திலிருந்து கொள்ளைபோன தகவல் கூறி அனுப்பப்பட்டிருக்கும்." தன்னோடு கப்பலிலிருந்து இறங்கியவர்களில் வயது மூத்தவரும், வீர கம்பீரம் துலங்கும் தோற்றத்தை உடையவருமான ஒருவரைப் பார்த்து இராசசிம்மன் நகைத்துக் கொண்டே இவ்வாறு கூறினான்.

"இளவரசே! திருடினவர்கள் திருட்டுக் கொடுத்தவர்களுக்காக அனுதாபப் படுவது உண்டோ?" என்றார் சக்கசேனாபதி.

"சக்கசேனாபதி! இந்த இடத்தில் பயன்படுத்தத் தகுதியற்ற ஒரு வார்த்தையை நீங்கள் பயன்படுத்தி விட்டீர்கள். யார் திருடினவன்? எவர்கள் திருட்டுக் கொடுத்தவர்கள்? என்றோ ஒருநாள் என் தலையில் சூட்டிக் கொள்ளப் போகிற முடியையும், இடையில் அணிபெற வேண்டிய வாளையும் இன்றே பாதுகாப்பான இடத்தில் கொண்டு போய் மறைத்து வைக்கிறேன். பொருளுக்கு உரியவர்கள் பொருளை எடுத்துச் சென்று பத்திரப்படுத்துவதைத் திருட்டு என்று கூறக் கூடாது."

சக்கசேனாபதி சிரித்தார். கம்பீரமான ஆண் சிங்கம் போன்ற அவருடைய முகத் தோற்றத்திலும், பார்வையிலும்,

ஒருவித மிடுக்கு இருந்தது. அவர் முகத்தைப் பார்க்கும்போது பிடரி மயிரோடு கூடிய ஒரு ஆண் சிங்கத்தின் நிமிர்ந்த பார்வை நினைவுக்கு வராமற் போகாது. வீரத்தின் மதர்ப்பும் ஆண்மையும் விளங்கும் பருத்த, உயர்ந்த தோற்றம் இந்தக் கதையின் மேற்பகுதிகளில் இன்றியமையாத சில நிகழ்ச்சிகளுக்கும், மாறுதல்களுக்கும் காரணமாக இருக்கப் போகிறவர் சக்கசேனாபதி.

அவர் ஈழ மண்டலப் பேரரசின் மகா சேனாபதி. குமாரபாண்டியனின் உற்ற நண்பரும் இலங்கைத் தீவின் புகழ் மிக்க வேந்தருமாகிய காசிப மன்னரின் படைத் தலைவர். தந்தை காலஞ் சென்ற நாளிலிருந்து இராசசிம்மனின் இளமைக் காலத்தில் அவனுக்கு எத்தனையோ முறை வடதிசை மன்னர்களுக்குப் பயந்து கடல் கடந்து சென்று ஒளிந்து கொண்டு வாழ வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கிறது. அப்போதெல்லாம் அவனுக்கு ஆதரவளித்து உதவி செய்தது இலங்கைப் பேரரசே. அவன் மனச் சோர்வோடு கடல் கடந்து சென்றபோதெல்லாம் வரவேற்று ஆதரவளித்தவர்கள் சக்க சேனாபதியும், காசிபனும் தான். தென்பாண்டி நாட்டு இளவரசன் தன் அரசியல் வாழ்க்கையின் துன்பம் நிறைந்த நாட்களையெல்லாம் இலங்கைத் தீவின் இன்பம் நிறைந்த சூழலில் கழித்த சந்தர்ப்பங்கள் கணக்கற்றவை.

இப்போதும் ஈழநாட்டின் படைத் தலைவர் இந்த மரக்கலத்தில் அவனை அங்கே தான் அழைத்துக் கொண்டு போகிறார். இடை வழியில் சிறிது தங்கிச் செல்வதற்காக அந்தத் தீவில் இறங்கியிருக்கிறார்கள் அவர்கள்.

சக்க சேனாபதியும், இராசசிம்மனும் கரையில் இறங்கி நின்று பேசிக் கொண்டிருந்த நேரத்துக்குள், அந்தக் கப்பலில் அவர்களோடு வந்திருந்த ஆட்கள் தீவின் கரையில் இரத்தினக் கம்பளங்களையும் சித்திரத் துணிகளையும் கொண்டு தங்குவதற்கு ஒரு அழகான கூடாரம் அமைத்து விட்டார்கள். தென்னை மரக் கூட்டங்களின் இடையே காற்றில் ஆடி அசையும் பசுந் தோகைகளின் கீழே எழும்பி நின்ற அந்தச் சித்திரக் கூடாரம் மண்ணைப் பிளந்து கொண்டு தானே மேல் வந்து தோன்றும் மலர் வீடு போல் காட்சியளித்தது. அன்றைய இரவு முடிய அங்கே பொழுதைக் கழித்து விட்டு மறுநாள் காலை மறுபடியும் கடற் பயணத்தைத் தொடரலாமா என்பது சக்க சேனாபதியின் திட்டம். தங்குவதற்கு அத்தியாவசியமான பொருள்கள் மட்டும் கப்பலிலிருந்து கூடாரத்துக்குள் இறக்கி வைக்கப்பட்டன. நீராடி உணவு முடிந்ததும் அன்று பகல் முழுதும் இராசசிம்மனும், சக்க சேனாபதியும் கூடாரத்தில் ஓய்வு பெற்று நிம்மதியாக உறங்கினர்.

கதிரவன் மலைவாயில் விழுகிற நேரத்துக்குக் குமார பாண்டியனும், சக்க சேனாபதியும் அந்த அழகிய தீவைச் சுற்றிப் பார்த்து விட்டு வரலாம் என்று புறப்பட்டனர்.

விந்தையும் விநோதமும் பொருந்திய கடல் படுபொருள்களான சங்கு, முத்து, சிப்பிகள், சலங்கைகள், பல நிறம் பொருந்திய கடற்பாசிக் கொத்துகள் இவற்றையெல்லாம் குவியல் குவியலாகக் குவித்து விற்கும் தீவின் கடைவீதிக்குள் அவர்கள் நுழைந்தார்கள்.

சக்க சேனாபதியையும் அழைத்துக் கொண்டு அந்தக் கடைகளில் ஒன்றை



நெருங்கினான் தென்பாண்டி நாட்டு இளவரசன் இராசசிம்மன்.

வனப்பும், வாளிப்பும் நிறைந்த உடலோடு சிரிப்பும் மலர்ச்சியும் கொஞ்சும் முகத்தையுடைய இளம் பெண் ஒருத்தி அந்தக் கடையில் அமர்ந்து வியாபாரம் செய்து கொண்டிருந்தாள். முற்றிலும் கடலில் கிடைக்கும் அலங்காரப்பொருள்களாலேயே அவள் தன்னை அலங்கரித்துக் கொண்டிருந்தாள். கழுத்தில் முத்து மாலை, செவிகளில் முத்துக் குண்டலம், நெற்றியில் முத்துச் சுட்டி, கைகளில் சங்கு வளையல், கால்களில் முத்துச் சிலம்பு. அள்ளி முடிந்த அளகபாரத்தில் இரண்டொரு மயில் கண்களைத் தோகையிலிருந்து பிரித்துச் செருகியிருந்தாள்.

அவர்களைக் கண்டதும் தோகையை விரித்துக் கொண்டு எழுந்திருக்கும் இளமயில் போல் பாதங்களில் சிலம்பு ஒலிக்க எழுந்து நின்று வரவேற்றாள். அடாடா!

அப்போது அந்தப் பெண் சிரித்த சிரிப்புக்குத்தான் எவ்வளவு கவர்ச்சியும் ஆற்றலும் இருந்தன.

"சக்கசேனாபதி! இந்தத் தீவின் கடலில் சிப்பிகளில் மட்டும் முத்தும் பவழமும் விளையவில்லை. இங்குள்ள பெண்களின் வாய் இதழ்களிலும், வாய்க்குள்ளும் கூடப் பவழமும், முத்தும் விளைகின்றன போலும்!" என்று மெல்ல அவர் காதருகில் சிரித்துக் கொண்டே சொன்னான் குமாரபாண்டியன். அவர் முகத்திலும் புன்னகை அரும்பியது.

சிறிய செவ்விளநீர் அளவுக்கு வலப் பக்கமாக வளைந்து செந்நிறத்தோடு அழகாக விளங்கிய ஒரு சங்கைக் கையில் எடுத்தான் இளவரசன். பவழத்தில் கைப்பிடியும், முத்துக்களில் விளிம்பும் கட்டி வைத்திருந்த அந்தச் சங்கு அவனுடைய உள்ளத்தைக் கவர்ந்தது.

ஆனால் இதென்ன? அவன் அந்தச் சங்கைக் கையில் எடுத்ததைப் பார்த்ததும், கண்களில கலவரமும், முகத்தில் பதற்றமும் தோன்ற, நின்ற இடத்திலிருந்து ஓடி வந்து அந்தப் பெண் அவனுடைய கைகளை இறுக்கிப் பிடித்துக் கொண்டாள். இளவரசனுக்குச் சிரிப்பு வந்தது. சிறிது சினமும் உண்டாயிற்று. பூவைக் காட்டிலும் மென்மையான அந்தப் பட்டுக் கைகள் தன் மேல் தீண்டியதால் ஏற்பட்ட உணர்வு அவன் உடலில் பாதாதி கேச பரியந்தம் பரவியது. சிரிப்பு, சினம், சிருங்காரம் மூன்று உணர்ச்சிகளும் பதிந்த பார்வையால் அவள் முகத்தை உற்றுப் பார்த்தான் அவன்.

அப்போதுதான் பூத்த கருங்குவளைப் பூக்களைப் போல் நீண்டு குறுகுறுவென்றிருக்கும் அவள் கண்களில் பயத்தையும், பரபரப்பையும் அவன் கண்டான்.

அந்த நிலையில் ஏதோ பெரிய நகைச்சுவைக் காட்சியைக் கண்டு விட்டவர் போல் இரண்டு கைகளாலும் வாயைப் பொத்திக் கொண்டு அடக்க முடியாமல் குலுங்கக் குலுங்கச் சிரித்தார் சக்கசேனாபதி. ஒருகணம் இராசசிம்மன் தயங்கினான். அந்தப் பெண்ணின் கைகளிலிருந்து தன்னை எப்படி விடுவித்துக் கொள்வதென்று நினைத்தான்.

"ஏதேது? இந்தச் செம்பவழத் தீவில் பெண்களெல்லாம் பெரிய வம்புக்காரர்களாக இருப்பார்கள்போலிருக்கிறதே?" அவன் சக்க சேனாபதியைப் பார்த்துக் கூறுகிறவனைப் போல் இதழ்களில் குறும்புநகை நெளிய அவளைப் பேச்சுக்கு இழுத்தான்.

"வருகிறவர்கள் அளவுக்கு மீறித் துணிச்சல் உள்ளவர்களாயிருக்கும் போது நாங்கள் வம்புக்காரர்களாக மாறுவது வியப்பில்லையே?"

"நீ சங்கு விற்கிறவள். நான் வாங்கப் போகிறவன். வாங்கப் போகிறவன் வாங்க இருக்கும் பொருளை எடுத்துப் பார்ப்பதற்குக் கூட உரிமையற்றவனா?"

"சங்கு என்றால் ஒரு பொற்கழஞ்சுக்கு ஐந்தும், ஆறுமாக அள்ளிக் கொடுக்கின்ற சாதாரணச் சங்கு இல்லை இது! வலம்புரிச் சங்கு! இதன் விலை ஆயிரம் பொற்கழஞ்சுகள். இந்தத் தீவின் எல்லையிலேயே இந்தமாதிரி சங்கு இது ஒன்றுதான் இருக்கிறது. இதை விற்க வேண்டுமானால் யாராவது பேரரசர்கள், வாங்க வந்தால்தான் முடியுமென்று என் தந்தை சொல்லியிருக்கிறார்!"

"பெண்ணே! பேரரசர்கள் கிடக்கிறார்கள்! அவர்கள் எல்லாம் பேருக்குத்தான் அரசர்கள். நான் இரண்டாயிரம் பொற்கழஞ்சுகள் தருகிறேன். இந்தச் சங்கை எனக்கு விற்பாயா?"

"இல்லை! பொய் சொல்லுகிறீர்கள் நீங்கள். உங்களைப் பார்த்தால் உங்களிடம் இரண்டு பொற்கழஞ்சுகள் கூட இருக்காது போல் தோன்றுகிறது. நீங்கள் என்னை ஏமாற்றப் பார்க்கிறீர்கள். மரியாதையாகச் சங்கை வைத்து விட்டுப் போகிறீர்களா......? இல்லையானால்......?"

"அடேடே! உன் கோபத்தைப் பார்த்தால் என்னை இப்போதே அடித்துக் கொன்றுவிடுவாய் போலிருக்கிறதே? வேண்டாம்! இதோ வாங்கிக்கொள்..." இப்படிச் சொல்லிக் கொண்டே சக்கசேனாபதியின் பக்கமாகத் திரும்பினான் இராசசிம்மன்.

அவர் இடுப்பிலிருந்து தயாராக எடுத்து வைத்துக் கொண்டிருந்த இரண்டு பட்டுப்பை முடிப்புக்களை அவன் கையில் கொடுத்தார். அவன் அதை வாங்கி அந்தப் பெண்ணின் கையில் கொடுத்தான்.

பைகளை வாங்கிப் பிரித்துப் பார்த்த அந்தப் பெண் ஆச்சரியத்தால் வாய் அடைத்துப் போய் நின்றாள். பை நிறையப் பொற் கழஞ்சுகள் மின்னின. அவர்களிடம் மன்னிப்பு கேட்க வேண்டுமென்று தலைநிமிர்ந்து பார்த்தபோது அவர்களைக் காணவில்லை.

தொலைவில் கடைவீதி திரும்பும் மூலையில் கையில் வலம்புரிச் சங்கோடு அந்த இளைஞனும் அவனோடு வந்த முதியவரும் வேகமாகச் செல்வது தெரிந்தது. அளவொத்து மேலெழும்பித் தணியும் இரு செவ்விளநீர்க் காய்கள் போல் நெஞ்சகங்கள் நிமிர்ந்து தணியக் கடைவீதி மூலையைப் பார்த்துப் பெருமூச்சு விட்டாள் அந்தப் பெண். (தொடரும்)

# நம்பிக்கை

ரா.கி.



உலகத்தில் எப்பொழுதுமே இருவகைப்பட்ட எண்ணங்கள் கொண்ட மனிதர்கள் இருந்து வந்திருக்கிறார்கள்; இருந்தும் வருகிறார்கள். ஒரு வகையினர் தார்மிக நோக்கம் கொண்டவர்கள் என்றால் இன்னொரு வகையினர் அதற்கு நேர் எதிராக அதார்மிக நோக்கம் படைத்தவர்கள். ஆதி காலத்திலே எப்படி அரக்கர்களும் தேவர்களும் இடையறாப் போரில் ஈடுபட்டு வந்தார்களோ, அப்படியே ஆஸ்திகர்களும் நாஸ்திகர்களும் விரோத பாவத்தை வளர்த்து வந்திருக்கிறார்கள். வளர்த்து வரவும் செய்கிறார்கள். இந்நிலை பாரத தேசத்துக்கு மட்டும் என்பதில்லை; எல்லாத் தேசத்துக்குமே பொருந்தும்.

ஒரு காலத்தில் ஒரு நாட்டை நாஸ்திக அரசன் ஒருவன் ஆண்டு வந்தான். நாஸ்திகம் வளரும் இடத்தில்தானே ஆஸ்திகரும் தழைத்தோங்குகிறது? பயிர் பசுமையிடும் இடத்தில்தானே புல் பூண்டுகளும் பூரித்துச் செழிக்கின்றன? இந்த விதிக்கு விலக்கு இல்லாமல், அந்த நாட்டில் ஆண்டவனுக்கு அடிமை செய்யும் ஒரு பக்தனும் வாழ்ந்து வந்தான். அரசனுக்கு அவன் தன் நாட்டில் வாழ்வது பிடிக்கவில்லை. 'ஆண்டவன் இல்லை' என்று சொல்பவர்களுக்கு எதிரே 'ஆண்டவன் உண்டு' என்று ஒருவன் சொன்னால் எதிராளிக்கு ஆத்திரம் வராதா? 'ஆண்டவனது அருமை பெருமைகளைப் பரப்பிப் பிரஜைகளின் மனத்தைக் கெடுக்கிறான் பக்தன்' என்று குற்றம் சாட்டி அரசன் அவனை நாடு கடத்தி விட்டான்.

ஆண்டவனின் அடிமையினிடத்திலே ஒரு விளக்கு இருந்தது. அதன் வெளிச்சத்தில் தான் அவன் இரவு வேளைகளில் தார்மிக நூல்களைப் படித்துப் பயின்று வந்தான். ஒரு கோழி இருந்தது. அதிகாலையில் அது கூவும் குரலைக் கேட்டு எழுந்து தான் ஆண்டவனின் நாமத்தைச் சொல்லி அவன் பக்தி புரிந்து வந்தான். ஒரு கழுதை இருந்தது. அதில் ஏற்றித்தான் அரசன் அவனைத் தொலைதூரத்தில் உள்ள காட்டுக்கு அனுப்பி வைத்தான்; அதில் ஏறித்தான் அவனும் ஆண்டவன் புகழைப் பரப்பத் தெருத் தெருவாக ஊர் ஊராகச் சென்று வந்தான்.

அரசன் செய்த அநீதியைப் பக்தன் ஒரு அவமானமாகக் கருதவும் இல்லை; பொருட்படுத்தவும் இல்லை. அந்தக் கழுதையின் மேலே அமர்ந்து ஊர் ஊராகச் சென்று ஆண்டவனது பெருமைகளைப் பாடி வந்தான்; புகழைப் பரப்பி வந்தான்.

ஒரு நாள் அவன் காட்டிலே சுற்றிக் கொண்டிருந்த பொழுது, பொழுது சாய்ந்து நன்றாக இருட்டி விட்டது. களைத்துச் சோர்ந்து போயிருந்த அவனுக்குக் காட்டிலே திக்கு திசை புரியவில்லை. திராணி தளர்ந்து போன அவனுக்குக் காட்டை விட்டு வெளியேறிக் கிராமத்தை அடையும் வழியும் புலனாகவில்லை. எனவே, இரவை அங்கேயே எங்கேயாவது பத்திரமான இடத்தில் கழித்து விடுவது என்று முடிவு செய்தான். அருகிலேயே சற்றுத் தூரத்தில் 'மினுக், மினுக்' என்று ஏதோ வெளிச்சம் தெரிந்தது. அந்த வெளிச்

சத்தைக் குறி வைத்துக் கொண்டு சென்றால், இரவுப் பொழுதைக் கழிக்க இடம் கிடைத்துவிடும் என்று நம்பினான் அவன். அந்த நம்பிக்கை அவனுக்கு வலு அளிக்கவே, வெளிச்சம் தெரிந்த இடத்தை நோக்கி அவன் நடந்தான்.

அது சின்னஞ் சிறு குக்கிராமம். ஐந்தாறு குடும்பங்கள் சீரும் சிறப்புமாக அங்கே வாழ்ந்து வந்தன.

பக்தன் அந்தக் கிராமத்தார்களைக் கண்டு இரவு தங்கிப் போக அனுமதி கேட்டான். ஆனால் யாருமே அவனுக்கு அங்கே தங்க அனுமதி அளிக்க முன்வரவில்லை. கடைசியில் நம்பிக்கை இழந்து அவன் 'காடே கதி' என்று காட்டுக்குப் போய்விட்டான், இரவைக் கழிப்பதற்கு.

ஒரு பெரிய ஆலமரத்தினடியிலே போய் அமர்ந்த பக்தன், இருட்டி



வெகு நேரமாகிவிட்டதால், தன் விளக்கை ஏற்றி வைத்துக் கொண்டு அதன் ஒளியிலே அற நூல்களைப் படிக்கலானான். அவன் இரண்டொரு வாக்கியங்கள் படித்து முடிப்பதற்குள்ளாகப் பெருங்காற்று ஒன்று வீசியது. விளக்கு குப்பென்று அணைந்து விட்டது. அணைந்தால் கூடப் பரவாயில்லையே! கீழே விழுந்து உடைந்தும் விட்டது. அதைக் கண்ணுற்ற பக்தன், "ஏ, ஆண்டவனே! உன் பெருமையைப் பறைசாற்றும் நூல்களைப் பயிலக்கூட எனக்கு உரிமை யில்லையா?" என்று முறையிட்டான். ஆனால் அதற்காக அவன் ஆண்டவனின் அநியாயத்தை எண்ணித் திட்டவில்லை. "நான் படிக்க முடியாமற் போய் விட்டது. அதற்காகப் பரவாயில்லை! எல்லாம் உன் திருவிளையாடல்! நீ செய்வ



மாமி: வா, மங்களம்! வந்து உட்கார்ந்து ஒரு பாட்டுப் பாடு!
மங்களம்: வேண்டாம், மாமி! நான் பாட்டு பாடுகிறதாகவே வரவில்லை!

---

தெல்லாம் எங்கள் நன்மைக்கே!'' என்று கூறி ஆறுதல் பெற்றான். அப்புறம் தன் நூல்களை ஒரு மூட்டையாகக் கட்டி வைத்து விட்டு, 'அந்த மரத்தினிடையிலேயே சற்றுப் படுத்து உறங்கலாம் என்று தீர்மானித்தான்.

அவன் படுத்து இரண்டு மூன்று நிமிஷங்கள் கூட ஆகியிராது; இதயத்தைப் பிழிந்தெடுக்கும் அலறல் சத்தம் கேட்டது. சட்டென்று எழுந்து உட்கார்ந்து கரிய இருளிலும் அவன் கூர்ந்து நோக்கினான். ஒரு ஓநாய் அவனது கோழியைக் கவ்வி எடுத்துக் கொண்டு ஓடுவது தெரிந்தது. பக்தன் பதறினான். ''ஆண்டவனே! இந்தக் கோழி எனது இணைபிரியாத் தோழனாக இருந்ததே! அதிகாலையில் கூவி எழுப்பி என்னை உன் நாமம் சொல்லிப் பக்தி புரியத் தூண்டி வந்ததே! அதையும் பிடுங்கிக் கொண்டு விட்டாயே!'' என்று முறையிட்டான். ஆனால் அதற்காகவும் அவன் வாயிலிருந்து திட்டும் வசவும் புகுந்து புறப்படவில்லை. ''கோழித்துணை போய் விட்டது. அதற்காகப் பரவாயில்லை. எல்லாம் உன் திருவிளையாடல்! நீ செய்வதெல்லாம் எங்கள் நன்மைக்கே!'' என்று கூறித் தன் மனத்துக்கு ஆறுதலைத் தேடிக் கொண்டான்.

ஆண்டவனை நினைத்தவாறே அவன் மீண்டும் படுத்தான். சிறிது நேரத்துக்கெல்லாம் ஒரு சிங்கம் அவன் கழுதையின் மீது பாய்ந்து அதை இழுத்துச் சென்றுவிட்டது. சோதனைக்குமேல் சோதனையாக வந்தபொழுதிலும் பக்தன் பகவானைத் திட்டவில்லை.

''ஆண்டவனே! நான் இனி என்ன செய்வேன்? என்னிடம் ஒரு விளக்கு இருந்தது. அது பெருங் காற்றில் கீழே விழுந்து உடைந்து விட்டது. அதனால் இரவு நேரங்களில் உன் பெருமையைக் கூறும் நூல்களைப் படிக்கும் பாக்கியம் எனக்கு இல்லாமற் போய் விட்டது. உன்னைத் தியானம் செய்வதற்காக விடியற்காலையில் எழுப்பி விட, உற்ற தோழனாக ஒரு சேவல் இருந்தது. அதையும் ஒரு ஓநாய் தன் இரையாக்கிக் கொண்டு விட்டது. என்னைச் சுமந்து செல்ல ஒரு கழுதை இருந்தது. அதன் மேல் ஏறி ஊர் ஊராகச் சென்று மக்களுக்கு உன் நாமத்தின் பெருமையைப் போதித்து வந்தேன். அதையும் சிங்கம் அடித்துச் சென்று விட்டது. பரவாயில்லை. அதற்காக நான் வருந்துவானேன்? எல்லாம் உன் திருவிளையாடல். நீ செய்வதெல்லாம் எங்கள் நன்மைக்கே!'' என்று கூறிச் சமாதானமடைந்தான்.

இப்படியே கடவுளையும் கடவுளின் திருவிளையாடலையும் எண்ணிப் பக்தன் இரவுப் பொழுதைப் போக்கி விட்டான்.

காலையில் எழுந்து அவன் அருகில் இருந்த, தான் முதல்நாள் இரவு தஞ்சம் புகச் சென்றிருந்த கிராமத்தை அடைந்தான். அங்கே போய்ப் பார்த்தால், முதல் நாளிரவு அந்தக் கிராமத்து மக்கள் அனைவரையும் கொள்ளைக் கூட்டத்தினர் அடித்துக் கொன்று போட்டு விட்டு அவர்களது ஆடுமாடுகளையும், சொத்து சுதந்திரங்களையும் கொள்ளையிட்டுச் சென்றிருப்பது தெரிய வந்தது.

''ஆண்டவனே! என் குறையை உன்னிடம் தெரிவித்துக் கொண்டேனே, அது என் முட்டாள்தனம் தான்! நீ செய்வதெல்லாம் எங்கள் நன்மைக்கே! இதன் உண்மையை இப்பொழுது முற்றிலும் உணருகிறேன். ஆனால் மானிடர்களாகிய நாங்கள் தான் சிறு விபத்து ஏற்பட்டாலும் நடுங்கிச் சாகிறோம்; கதிகலங்கி நிற்கிறோம். ஆண்டவனாகிய உன்னை நாக்கில் நரம்பின்றித் திட்டவும் தொடங்கி விடுகிறோம். யாராவது நேற்று இரவு இந்தக் கிராமத்தில் தங்க எனக்கு அனுமதி அளித்திருந்தால், என் கதி என்னவாகியிருந்திருக்கும்? இந்தக் கிராமத்தவர்களுக்கு ஏற்பட்ட நிலைதானே எனக்கும் ஏற்பட்டிருந்திருக்கும்? விளக்கு அணையா விட்டால், அதன் ஒளி கொள்ளைக்காரர்களுக்கு என் இருப்பிடத்தைக் காட்டிக் கொடுக்க உதவியிருக்கும். என் கோழியை ஓநாய் தூக்கிச் சென்றிராவிட்டால், அதுவும் கூவிக் கொள்ளைக்காரர்களுக்கு என் இருப்பிடத்தைக் காட்டிக் கொடுத்திருக்கும். சிங்கத்துக்கு இரையாக என் கழுதை கிடைத்திரா விட்டால் ஒருவேளை அது என்னையே தின்று ஏப்பம் விட்டிருக்கலாம்! எனவே, ஆண்டவனே! எல்லாம் உன் திருவிளையாடல்! நீ செய்வதெல்லாம் எங்கள் நன்மைக்கே!'' என்று கூறி மீண்டும் ஒரு முறை பகவானிடம் மன்னிப்புக் கோரினான்.

''ஆண்டவனின் நினைவு எப்பொழுதும் எந்த மனத்தில் குடிகொண்டிருக்கிறதோ, அதுதான் தூய மனம்; அவன்தான் உண்மையான உயர்ந்த மனிதன். ஆபத்து நேரும் பொழுது தொடை நடுங்காமல், நிம்மதியிழக்கும்பொழுது ஆண்டவன் நினைவு மறக்காமல் எவன் இருக்கிறானோ, அவன்தான் உண்மைப் பக்தனாக முடியும்!'' என்னும் பேருண்மையை அநுபவபூர்வமாக உணர்ந்து கொண்டான் அவன். ஆண்டவன்மீது மேலும் அபார நம்பிக்கை பூண்டான்.

ஆதாரம்: ஸ்ரீ சோமராஜ் நாயரின் கதை.

# யந்திரங்களின் வெற்றி ஒலி...

1957ல் ப்ஹ்ரீனிலிருந்து ஸ்ரீ பல்பீர்சிங் ஜம்ஷெட்பூர் வந்த போதுதான் ரூ 100 மில்லியன் செலவில் புதிய ப்ளூமிங் மில் நிறுவுவதற்கான இடம், சிறுமலைகளை வெட்டி, காடுகளை அழித்துச் சமதளமாக்கப்பட்டிருந்தது. இது, டாடா ஸ்டீலின் 2 மில்லியன் டன் விரிவான திட்டத்தின் ஓர் முக்கிய அமிசமாகும்.

இன்று இப்புதிய 46" ப்ளூமிங் மில் இந்தியாவிலே மிகப் பெரியது. இது. 2 மில்லியன் டன் உற்பத்தி செய்யும் சக்தி வாய்ந்தது; ப்ளூம்கள், ஸ்லாப்கள் மூலம் தண்டவாளங்கள், ப்ளேட்டுகள், தகடுகள், கட்டிட நிர்மாண எஃகுப் பொருள்கள் ஆகியவற்றையும் இன்னும் பிற பல பொருள்களையும் உற்பத்தி செய்வதற்குத் தயாராக விருக்கிறது.

சூயஸ் தகராறு காரணமாக, வெளியிலிருந்து முக்கிய சப்ளை வருவதில் தாமதம், பிற கஷ்டங்கள் ஆகியவை ஏற்பட்டிருந்தும், சிரத்தை மிகுந்த ஸ்ரீ பல்பீர்சிங் போன்ற பலரின் பெரு முயற்சியால் இப்ப்ளூமிங் மில் துரிதமாகப் பூர்த்தி பெற முடிந்தது. இந்த வகையில் அவரும் நூற்றுக் கணக்கான இந்தியர்களும், அமெரிக்க, ஜெர்மானிய தொழில் நிபுணர்களின் உதவியோடு இம்மகத்தான ப்ராஜெக்ட் மூலம் எஃகுப் பொருள்கள் உற்பத்திக்கும், இந்தியப் பொருளாதாரத்தைப் பலப்படுத்துவதற்கும் இரவு பகலாக உழைத்தார்கள்.

## டாடா ஸ்டீல்

இரு மில்லியன் டன் உற்பத்திக்கு

TN 3172



The Tata Iron and Steel Company Limited

# எவரெஸ்ட் வீரன்



மலையாறு - இரண்டு ஆட்டத்தை இழந்து விடு

பயங்கரப் பனிமூட்டம், 5 மைல் பின்னுக்குப் போ

மலைக்காடு 42 வது மைலுக்குத் திரும்பு

பனிச்சரிவு, 30 வது மைலுக்குத் திரும்பிப் போ

விழுந்தால் தான் முன்னேறலாம்

சத்திரம், 3 ஆட்டத்தை விட்டுக் கொடுத்து இளைப்பாறு

கோயில், 3 ஆட்டத்தை விட்டுக் கொடுத்து வழிபடு

குதிரை, ஆறு மைல் முன்னேறு

நீர்வீழ்ச்சி, 2 விழுந்தால்தான் நகரலாம்

20 வது மைலுக்கு முன்னேறு

நிலச்சரிவு, 3 மைல் பின்னே போ

பனிமழை, 5 மைல் பின்னே போ

மலை ஏற்றம் ஆரம்பம்

புறப்பட்ட இடத்துக்கே திரும்பு

1 2 3 4 5 6 7 8 9 10 11 12 13 14 15 16 17 18 19 20 21 22 23 24 25 26 27 28 29 30 31 32 33 34 35 36 37 38 39 40 41 42 43 44 45 46 47 48 49 50 51 52 53 54 55 56 57 58 59 60 61 62 63 64 65 66

விஜயா—

இந்த விளையாட்டைத் தாயக்கட்டைகளையோ, அல்லது நான்கு சோழிகளையோ உருட்டி விட்டு, விழும் எண்ணிக்கைகளைக் கொண்டு காய்களை நகர்த்தி விளையாட வேண்டும். கட்டங்களில் அங்கங்கே உள்ள குறிப்புகளைக் கவனித்து முன்னேறவும். முதலில் மலையுச்சியை (66-ஐ) அடைபவரே வெற்றி பெற்றவர். விளையாடிப் பாருங்கள்.

—மூர்த்தி




## 11. போலீஸ் விசாரணை

நிலவறைக்குள்ளிருந்து வெளிப்பட்ட உருவம் யார் என்று நினைக்கிறீர்கள்? வீராதிவீரன் மணியேதான்! மணி என்று அறிந்ததும் சேகர் ஓடிப்போய் அவனை அப்படியே அணைத்துக் கொண்டார். "மணி! மணி! நீ ஏதோ பெரிய ஆபத்தில் சிக்கிக் கொண்டாய் என்று நான் மிகவும் கலங்கிப் போனேனடா, கண்ணே!" என்றார். உணர்ச்சியினால் அவர் குரல் கம்மிப் போயிருந்தது.

மணி நிலவறைக்குள்ளிருந்து வெளியேற உதவிய போலீஸ்காரர் சேகரைப் பார்த்து, "சார்! இந்தப் பையனைப் பத்திரமாகக் கவனித்துக் கொள்ளுங்கள். இதோ வந்து விடுகிறேன்" என்று சொல்லி நெருப்பணைக்கும் படையினருக்கு உதவுவதற்காக ஓடினார். சேகரும் மணியும் தனிமையில் விடப்பட்டனர்.

"கார் வெடித்துச் சிதறியபோது நீயும் அதில் சிக்கி மாண்டுவிட்டாயோ என்று நான் எண்ணி விட்டேன், மணி!" என்று கூறினார் சேகர்.

"இப்போது என்னைப்பற்றி இப்படி நினைத்து அதிர்ச்சி அடைகிறீர்களே. நீங்கள் பொய்யாகப் பரப்பிய வதந்தியினால் உங்களை நினைத்தபடியே பாட்டி-உங்கள் அம்மா-எப்படித் துடித்துச் செத்துப் போனாள், தெரியுமா? அவள் இறந்ததற்கு நீங்களே முக்கிய காரணம்."

"நான் காரணமல்ல,மணி! நான்உயிரோடிருப்பது அவளுக்குத் தெரியும். அதனால்தான் அவள் எனக்கு ஈமக்கிரியைகளைச் செய்யக் கூடாது என்று பிடிவாதமாக இருந்தாள். என் பிரிவைத் தாங்காமல் பிரிவாற்றுமையால் அவள்-உன் பாட்டி, என் அம்மா-இறக்கவில்லை அவளைப் பலி கொண்டது புற்றுநோயாக்கும்!"

மணியின் கண்கள் வியப்பினால் விரிந்தன. "என்ன உண்மையாகவா? பாட்டிக்கு நீங்கள் உயிரோடிருப்பது தெரியுமா? அதனால்தானா நாங்களெல்லாம் கண்ணீர் விட்டுக் கதறியழுதபோது கூட அவள் அமைதியாக இருந்தாள்?" சட்டென்று மணியின் முகம் மாறியது. "அப்படி இருந்தாலும் கூடப் பாட்டி படுத்த படுக்கையாக மரணத்தோடு போராடிக் கொண்டிருந்தபோதாவது நீங்கள் வந்து பார்த்திருக்கலாம். அதுதான் நியாயம்" என்றான்.

"நான் அடிக்கடி என் அம்மாவை வந்து சந்தித்துக் கொண்டுதான் இருந்தேன், மணி! அவள் இறப்பதற்கு ஒருமணி நேரத்துக்கு முன்னால் கூட அவள் அருகில் நான் இருந்தேன். ஆனால் என்னை யாராலும் அடையாளம் கண்டு கொள்ள முடியாதபடி மாறு வேடத்தில் இருந்தேன்."

மணிக்குத் தன் மாமாவின் வார்த்தைகளில் நம்பிக்கை ஏற்படவில்லை. "பாட்டி சாகும்போது என்ன புடவை கட்டிக் கொண்டிருந்தாள் என்று உங்களால் சொல்ல முடியுமா?" என்று கேட்டான்.

சேகர் மணியைப் புன்னகையுடன் பார்த்தார். "மணி, என்மீது, என் வார்த்தையில் உனக்கு நம்பிக்கை ஏற்படவில்லை.அப்படித்தானே? தாத்தாவுக்குத் தெரிந்தவர் என்று ஒரு முஸ்லிம் கிழவர் பாட்டியைப் பார்க்க வந்தாரே, நினைவிருக்கிறதா?"

"ஆமாம்...குடுகுடு கிழவராக தூங்கி கட்டிக் கொண்டு குல்லாயணிந்து கோலூன்றி வந்த அவர் பாட்டியின் ஆத்மா சாந்தியடைய நடுக் கூடத்தில் 'நமாஸ்' கூடச் செய்தாரே எனக்கு நன்றாக நினைவிருக்கிறது" என்றான் மணி.

"அந்த முகமதியக் கிழவர் வேறு யாருமல்ல, உன் மாமாவேதான் போதுமா?" என்றார் சேகர். மணிக்கு அப்படியே மூர்ச்சை போடும் போலிருந்தது. அதே சமயம் கண்ணியமாக உடையணிந்திருந்த ஒரு மனிதர் மணியின் தோள்களில் கை வைத்துத் தம் பக்கம் திருப்பினார். "தம்பி! உன்னோடு சில விஷயங்கள் பேசவேண்டும். நான் ரகசிய போலீஸ் இலாகாவைச் சேர்ந்தவன். இந்தக் கட்டடம் தீப்பிடித்துக்கொண்டதற்கும் அந்தக் கார் கவிழ்ந்து வெடித்ததற்கும் காரணம் என்ன என்று உனக்குத் தெரியுமென்று எண்ணுகிறேன். உனக்குத் தெரிந்த விவரங்களைச் சொல்லுகிறாயா?" என்று கேட்டார்.

மணியின் முகம் பீதியினால் வெளிறிப் போயிற்று. "என்னைக் கைது செய்யப் போகிறீர்களா?" என்றான்.

"இப்போதைக்கு அப்படி எதுவும் இல்லை. உன்னிடமிருந்து வாக்குமூலம் மட்டும்தான் இப்போது தேவை."

"நான் எதுவும் சொல்ல மறுத்தால்?"

"மறுத்தால் உன்னை என்னுடன் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துப்போக வேண்டியிருக்கும்" என்றார் ரகசியப் போலீஸ் அதிகாரி. மணியின் துணிவான பதில் அவருக்கு வியப்பை அளித்தது.

"ரொம்ப சரி. போலீஸ் ஸ்டேஷனுக்கு வருவதில் எனக்கு எவ்வித ஆட்சேபனையும் கிடையாது" என்றான் மணி. தன் உத்தரவுப்படிதான் மணி போலீசாரிடம் எதையும் சொல்ல முடியாது என்று மறுக்கிறான் என்பதைப் புரிந்து கொண்ட சேகர், "மணி! நீயோ தவறாக எதுவும் செய்யவில்லை. ஆகவே இந்தத் தீக்கும் வெடி விபத்துக்கும் காரணம்பற்றி உனக்கு ஏதாவது தெரியுமானால் அதை நீ போலீஸாரிடம் தயங்காமல் சொல்லலாம்" என்றார்.

மணி கண்கள் விரியத் தன் மாமாவைப் பார்த்தான். அந்தப் பார்வை 'நிஜமாகவே நடந்தது அவ்வளவையும் சொல்லி விடலாமா?' என்று கேட்பது போலிருந்தது.

அவன் பார்வையின் தவிப்பைப் புரிந்து கொண்ட சேகர், "மணி! உன் பாட்டி இறக்கும்போது உன்னிடம் அவள் என்ன சொன்னாள், நினைவிருக்கிறதா?" என்று கேட்டார்.

"நினைவிருக்கிறது" என்றான் மணி.

"நல்லவனாக இரு. எத்தனை துன்பம் வந்த போதிலும் உன் கடமையைச் செய்யப் பின் வாங்காதே. அப்போது நீ எதற்கும் பயப்பட வேண்டியதில்லை என்று சொன்னாளல்லவா?" என்றார் சேகர்.

மணிக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. சாகும்போது பாட்டி சொன்ன உபதேசம் மாமாவுக்கு எப்படித் தெரிந்தது என்ற வியப்பிலிருந்து விடுபடுவதற்கு முன்பே சேகர் மறுபடியும் பேசினார்: "மணி! இன்னும் உன் சந்தேகம் தீரவில்லை. இல்லையா? உன் பாட்டி கடைசியாக உடுத்திக் கொண்டிருந்தது, உன் அம்மா கொடுத்த மாம்பழக் கலர் பட்டுப் புடவை. போதுமா?" என்றார். மணியின் முகம் மலர்ந்தது. குழப்பத்திலிருந்து விடுபட்டான். மாமாவிடம்நம்பிக்கை கொண்டான். துப்பறியும் போலீஸ் அதிகாரியைப்பார்த்து, "எனக்குத் தெரிந்த விவரங்களை நான் சொல்லுகிறேன், சார்!" என்று தான் கிட்டுவின் அறைக்குப் போய்ப் பார்த்ததிலிருந்து சொல்ல ஆரம்பித்தான். 'டைம் பாம்' விஷயத்தைச் சொன்னதும், "என்ன டைம்பாமா?" என்றார்கள் ஏக காலத்தில் போலீஸ்காரரும் சேகரும்.

"ஆமாம், 'டைம்பாமே'தான்!" என்றான் மணி உறுதியான குரலில். ஆனால் சேகருக்கும் போலீஸ்காரருக்கும் அவன் வார்த்தையில் நம்பிக்கை ஏற்படவில்லை.

பிறகு மணிதான் அந்தப் பயங்கரப் பொருளைத் தூக்கிக் கொண்டு ஓடியதையும் வழியில் போலீஸ்காரர் எதிர்ப்பட்டதையும் விவரித்தான்.

"அந்த விவரம் எனக்குத் தெரியும். ஆனால் இந்தக் காரியத்தைச் செய்யும் பொறுப்பை நீ அந்தப் போலீஸ்காரரிடம் விட்டிருக்கலாமே. அப்படி ஏன் செய்யவில்லை?" என்றார் போலீஸ் அதிகாரி.

"என்னிடமிருந்த பொருள் என்ன என்பதை நான் அவரிடம் ஒளிக்கவில்லையே?"

"ஒளிக்கவில்லை. ஆனால் அந்த உண்மையை அவர் நம்ப வேண்டும் என்று நீ எதிர்பார்க்கவில்லை. அப்படித்தானே?"

"ஆம்... ஆனால் பிறர் நம்பும்படி செய்ய வேண்டும் என்ற ஆவலோ, அவகாசமோ எனக்கு இல்லை."

"நீ சொல்லுவது போல அது 'டைம் பாமா'க இருக்குமானால் அதைக் கையாள வேண்டிய பொறுப்பு எங்களுடையதுதான். உன்னைப்போன்ற சின்னப்பையன் செய்யவேண்டிய காரியமில்லை இது."

"இப்படி யெல்லாம் சிந்திக்கும் திறன் அப்போது எனக்கு இல்லை. அந்தப் பயங்கரப் பொருளைச் சுமந்து கொண்டு ஓடினேன்..." மணி சொல்லிக் கொண்டு போனான். போலீஸ்காரர் சேகரைப் பார்த்தார். சேகர் 'டைம் பாமை'ப் பற்றிய குழப்பத்தில் மூழ்கியிருந்தார்.

"மூச்சைப் பிடித்துக் கொண்டு ஓடிய எனக்குக் கண் இருண்டது. கல் தடுக்கித் தலை குப்புற விழுந்தேன். மூர்ச்சையானேன். நினைவுபெற்று எழுந்தபோதும் அந்தப் பெட்டியிலிருந்து 'டிக் டிக்' ஒலி கேட்டுக் கொண்டிருந்தது. பரபரப்புடன் அதைத் தூக்கிக் கொண்டு மறுபடியும் ஓடினேன். ரஸ்தாவைக் கடக்கும்போது கண்ணைக் குருடாக்கும் ஒரு ஒளி தோன்றியது. அந்த ஒளி ஒரு மோட்டார் 'ஹெட் லைட்' என்பதையும் அது என்னை நோக்கி வருகிறது என்பதையும் உணர்ந்தேன். அந்தக் காரிலிருந்து ஒரு மனிதன் கையில்

சென்ற இதழ் 'கண்டுபிடி' — விடை

1. பவுண்டு நிலையின் உச்சித் தோற்றம். 2. 'ஜன் பாக்'கின் உச்சித்தோற்றம். 3. கோட்டு ஸாட்டும் குச்சியின் பக்கத் தோற்றம். 4. தண்ணீர்க் குழாயின் உச்சித் தோற்றம். 5. 'ஷேவல்' (கனுக்கு பாரை) தலைகீழாக இருக்கும்போது உச்சித் தோற்றம். 6. இக்பேண்ட் டிஞரின் உச்சித் தோற்றம். 7. மடிக்க ஏக்குக் கண்ணுடியின் ஒரு பக்கத் தோற்றம்.

துப்பாக்கியுடன் தலையை வெளியே நீட்டிக் கொண்டிருந்தான்.

"அந்தக் காரில் எத்தனை பேர்கள் இருந்தார்கள் என்று சொல்ல முடியுமா?"

"மூன்று பேர்கள் இருந்திருக்கலாம். நிச்சயமாகச் சொல்ல முடியாது."

"அவர்களில் யாரையாவது உனக்கு முன்னால் தெரியுமா?" என்று கேட்டார் சேகர், சாதாரணமாகக் கேட்பது போல. மணி 'தெரியாது' என்று தலையை அசைத்தான். சேகர் ஆறுதலாக மூச்சு விட்டார்.

"அந்த மனிதன் என்னைச் சுடுவதற்குத்தான் குறி பார்க்கிறான் என்பதை அறிந்ததும் அந்தப் பயங்கரப் பொருளுள்ள பெட்டியை அந்த மோட்டாரின் மீது வீசிவிட்டு, சட்டென்று தரையில் விழுந்து மார்பினால் ஊர்ந்து சென்று அருகிலிருந்த அந்த நிலவறைக்குள் புகுந்து கொண்டேன். நான் அதற்குள் நுழைந்த அதே சமயத்தில் இந்தப் பிராந்தியமே கிடுகிடுக்கும் படியான பெரிய சத்தத்தைக் கேட்டேன். வெளியே தீப்பிடித்து எரியும் அறிகுறியான புகையின் மணத்தை உள்ளிருந்தபடியே உணர்ந்து கொண்டேன்."

போலீஸ்காரர் ஒரு பெருமூச்சுடன், "அதிர்ஷ்டவசமாகப் பெரிய ஆபத்திலிருந்து தப்பிவிட்டாய், தம்பி! உன்னிடம் இன்னும் பல விஷயங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும். ஆனால் இப்போது வேண்டாம். இரவு முழுதும் நீ சரியாகத் தூங்கவில்லை என்று நினைக்கிறேன். ஆகவே இனி எங்கும் போகாமல் நேரே வீட்டுக்குப் போய்த் தூங்க வேண்டும், என்ன?" என்றார்.

"ஆகட்டும், சார்" என்றான் மணி. இச் சமயத்தில் இவர்களின் அருகே நின்று கொண்டிருந்த ரங்கசாமியிடம் மணியை அவன் வீட்டில் கொண்டு விடும்படி சொல்லுவதற்குத் திரும்பினார் ரகசியப் போலீஸ் அதிகாரி.

சட்டென்று மணி சேகரின் அருகில் வந்து ஏதோ சில வார்த்தைகளைப் பரபரப்புடன் முணுமுணுத்தான். பேச்சுக் குரல் கேட்ட போலீஸ் அதிகாரி சட்டென்று திரும்பி, "அவரிடம் என்ன தம்பி சொன்னாய்?" என்று கேட்டார்.

"ஒன்றுமில்லை. இப்போது வீட்டுக்குப் போக எனக்கு விருப்பமில்லை என்றேன்" என்றான் மணி.

ரங்கசாமி உடனே "மணி! அம்மா ரொம்பக் கவலைப்படுவாங்க. நீ உடனே வீட்டுக்குக் கிளம்பு" என்று சொல்லி அவனைக் கொண்டுபோய் காரில் உட்கார வைத்தான்.

மணி சொன்ன வார்த்தைகள் சேகரின் முகத்தில் ஒரு புதிய சோபையை உண்டாக்கின. (தொடரும்)




## 'கூ' மந்திரக்காளி!

★

உங்கள் நண்பனைத் திகைக்க வைக்கும் ஒரு மாஜிக் வேலையை உங்களுக்கு இப்போது சொல்லித்தரப் போகிறேன். உங்கள் நண்பனின் முன்னால் ஒரு கைக்குட்டையை விரியுங்கள். அதன் மத்தியில் ஒரு பத்து நயே பைசே நாணயத்தை வையுங்கள். இனி அதை மூலைக்கு மூலை குறுக்காக இரு தடவைகள் முக்கோணமாக மடியுங்கள் (படம் 1) இனி முக்கோணக் கைக்குட்டையின் மேல் முனையிலிருந்து உருட்டிச் சுருட்டுங்கள். (படம் 1) கைக்குட்டையின் இரு முனைகள் இப்போது வெளியே தெரியும்.

நண்பனிடம், "இப்போது இதற்குள் காசு இருக்கிறதா இல்லையா?" என்று கேளுங்கள். அவன் 'இருக்கிறது' என்றுதான் சொல்லுவான். நீங்கள் உடனே கண்களை மூடிக் கொண்டு ஏதோ மந்திரம் உச்சரிப்பது போல் முணுமுணுத்து விட்டு, "இப்போது அந்தக் காசை மாயமாக மறையச் செய்கிறேன் பார்" என்று சொல்லிச் சுருட்டிய கைக்குட்டையின் இரு முனைகளையும் பிடித்துப் பட்டென்று இழுத்தால் கைக்குட்டையின் சுருள் பிரியும். பிரிந்த கைக்குட்டையிலிருந்து காசு கீழே விழாது. பத்து நயே பைசே பறந்தே போயிருக்கும்!

காசு எங்கே போயிற்று என்று கேட்கிறீர்களா? எங்கேயும் போகவில்லை. கைக்குட்டையின் மடிப்புக்குள்ளேயே தான் இருக்கும். ஆனால் அது கீழே விழுந்து விடாது. செய்து பாரேன், புரியும்.

— மூர்த்தி

# கனவுக் கொடி



மணி

"அதிகாலையில் காப்பி கூடச் சாப்பிடாமல் தோட்டத்திலே போய் நிற்கிறீர்களே? காப்பி ஆறிப் போகிறதே!"

பாகீரதி உள்ளிருந்தபடியே குரல் கொடுத்தாள். வாசுதேவனின் காதில் இந்த வார்த்தைகள் விழுந்ததாகவே தெரியவில்லை. அவர் தம் போக்கிலேயே வேலை செய்து கொண்டிருந்தார். சமையற்கட்டில் ஏதோ சில்லறை வேலைகளைச் செய்து விட்டுச் சற்றுப் பொறுத்துக் கூடத்துக்கு வந்த பாகீரதிக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. ஏனெனில் புகை பறக்க அவள் கொண்டு வந்த காப்பி ஆடை படர்ந்து விட்டிருந்தது. வாசுதேவன் இன்னும் உள்ளே வரவேயில்லை.

"உங்களைத்தானே!" என்றாள் பாகீரதி. திரும்பிக்கூடப் பார்க்கவில்லை வாசுதேவன். பாகீரதி தெடு தெடுவென்று வாசலுக்குப் போனாள். "இந்தாங்கோ. உங்களைத்தான்... காலையில் எட்டு மணிக்கு டாக்டர் வீட்டுக்குப் போகணும் என்றீர்களே?"

வாசுதேவன் அசைந்து கொடுத்தார். "ஹாம்......ஆமாம்......மறந்தே போய்விட்டேனே, எங்கே காப்பி ஆறிவிட்டதா...?"

"ஆமாம். காப்பி ஒரு ஜாமமாகக் காத்துக் கொண்டிருக்கிறது. இருங்கள். சற்றுச் சூடு வைத்துத் தருகிறேன்!"

"வேண்டாம். சீக்கிரம் கொண்டு வா."

வாசுதேவன் கூடத்து ஊஞ்சலில் உட்கார்ந்தார். 'டிபாய்'யில் வைக்கப்பட்டிருந்த காப்பியைக் கையில் எடுத்துக் கொண்டே "வர வர ஏன் இப்படி அசடாகப் போகிறீர்களோ?" என்று மெதுவாகச் சொல்லிக் கொண்டாள் பாகீரதி.

"பாகீரதி! அந்தக் கொடியைப் பார்த்தாயா? அடுத்த பங்களாவிலே வாங்கிக் கொண்டு வந்து வைத்து இன்னும் ஆறு மாதம் கூட ஆகவில்லை. அதற்குள் பெரியதாகப் படர்ந்து கன்னி கட்டி [illegible]டது?"

"யார் பெ[illegible]தாலும் மண் போய்க்காது என்கிற பழமொழி தெரியாதா?"

"மண் கட்டாந்தரையாக இருந்து விட்டால் என்ன செய்கிறது? நல்ல களர் மண்ணாக இருந்து கொடி வைத்தால் செழித்து வளருகிறது. கன்னி கட்டுகிறது. பூக்கிறது!"

"இன்னும் காய்க்கக் கூடக் காய்க்கும்."

"ஆமாம். வாசற்படி வளைவு அலங்காரத்துக்குப் போட்ட பூங்கொடி காய்க்கக் கூடக் காய்க்கும். நினைத்துக் கொண்டிரு."

"தினம் தினம் சுற்றி வந்து நமஸ்காரம் பண்ணினால் பூங்கொடி கூடத் தான் காய்க்கும்......"

"அப்படித் தபஸ் பண்ணியும் கூட நீ..." வாசுதேவன் தமது வார்த்தைகளின் கடுமையை உணர்ந்து உதட்டைக் கடித்துக் கொண்டார். அந்த வார்த்தைகளின் கடுமை தாங்காமல் பாகீரதியின் கண்களிலிருந்து நீர் பெருகியோடியது.

* * *

சமையல் கட்டில் நடந்து கொண்டிருந்தாலும் பாகீரதி தன் இன்னதென்று புரியாத நிலை பற்றி எண்ணிக் கொண்டிருந்தாள். காவிரியின் தென்கரையில் உள்ள பசுமையான கிராமமான திருப்பராய்த்துறை மிராசுதாரின் மகள்தான் பாகீரதி. உள்ளூர் எலிமெண்டரி ஸ்கூலில் ஐந்தாவது வரையில் படித்திருக்கிறாள். எத்தனையோ ஜாதகங்களைச் சலித்து எடுத்ததில் வாசுதேவன் தான் குதிர்ந்தான். பாகீரதியின் தந்தைக்குக் கல்யாணம் ஆகும்போது சாதாரணக் குமாஸ்தாவாக ரயில்வேயில் இருந்தவன், பாகீரதி வீட்டுக்கு வந்த நல்ல வேளையின் காரணமாகவோ, பரீட்சை 'பாஸ்' செய்து விட்டதினாலோ 'ஸ்டேஷன்மாஸ்டராக' ஆனான். வருஷத்துக்கு ஒரு ஸ்டேஷன் என்று மாற்றல். ஒவ்வொரு ஊரிலும் தனி 'குவார்ட்டர்ஸ்'; வேலை செய்ய நாலு போர்ட்டர்கள். இப்படியாக ராஜாங்கமாகக் குடும்பம் நடந்து வந்தது.

பத்து ஊர்களுக்கு மாற்றலாகிவிட்டது. இந்த ஊருக்கு வந்தும் ஒரு வருஷம் ஆகிவிட்டது. இங்கு இரவல் வீட்டின் முன்புறம் வேலி கட்டி அழகுபடுத்தி, அந்தத் தோட்டத்து 'கேட்'டின் மேல் வளைவிலும் அலங்காரப் பூங்கொடியைப் படர விடுவது என்பதெல்லாம் வெட்டி வேலை, வீண் வேலை என்பது பாகீரதியின் எண்ணம். அதோடு, 'கொடி போட்டாலும் போட்டார், தினம் காலையில் அதனடியிலேயே தவம் கிடக்கத் தொடங்கி விட்டாரே!'—இது வேறு அவளுக்குத் தாங்கக் கூடாததாயிருந்தது.

இவ்வளவுக்கும் பின்னே, தான் தன் கணவரிடமிருந்து நகர்ந்து விலகிக் கொண்டிருப்பதாக ஒரு பிரமை. அது அவளைக் கொல்லாமல் கொன்றது. மணமான புதிதில் இப்படித்தான் இந்தப் பச்சைக் கொடி பட்டபாடு பாகீரதி பட்டாள். ஒரு வண்டி வந்து போனவுடன் ஒருமுறை வீட்டுக்கு வந்து பாகீரதியைச் சீண்டாமல் இருக்க மாட்டார் வாசுதேவன். அவள் செய்யும் வேலைகள் அனைத்திலும் கூடக் கூட வந்து விளையாடாமல் இருக்க மாட்டார் வாசுதேவன்.

இப்போது அந்த நிலைக்கு ஒரு உயிரில்லாத பச்சைக் கொடி உயர்ந்துவிட்டதைப் பாகீரதியால் தாங்க முடியவில்லை. எத்தனைக்கெத்தனை வாசுதேவன் கொடியிடம் பாசத்தை வளர்த்து வந்தாரோ அத்தனைக்கத்தனை பாகீரதி வெறுப்பை வளர்த்து வந்தாள். அந்தக் கொடி கன்னி கட்டிவிட்டது என்பதைச் சொல்லித் தன் குறையைக் குத்திக் காட்டும் அளவுக்குத் தன் நிலை மோசமாகி

விட்டதை எண்ணி மருகினாள். தன் கணவன் இந்தக் குறையைக் கண்டு இத்தனை மன உளைச்சல் அடைந்தது அவளுக்கு ஆச்சரியத்தை அளித்தது. அவளையும் இந்தக் குறை இத்தனை நாட்கள் பாதிக்கவில்லையா? அவள் வலி அவருக்குத் தெரியவில்லையா?

"கொடிகூடக் கண்ணி கட்டி விட்டது. தான்......" என்று நேரிடையே தன்னைத் தாக்கும் அளவுக்குத் தன் கணவர் துணிந்து விடுவார் என்று அவள் எண்ணியவளல்ல. தனக்கு ஒரு சக்களத்தி வருவதை விரும்பாத பெண் மனம், தனக்கு ஒரு சக்களத்தி இளையாள் ஸ்தானத்தில் வந்துவிட்டால் என்ன பாடுபடுமோ, அப்படி ஒரு உயிரற்ற பச்சைக் கொடி உயர்ந்து, வளர்ந்து விடவே அவளுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. "எப்படியாவது இந்தக் கொடி இல்லாமல் ஆகிவிட்டால் நல்லது. 'சாமி, தெய்வமே! இந்த ஊரை விட்டாவது சீக்கிரம் மாற்றிவிடேன்!' என்று வேண்டிக் கொண்டாள். அதன் பிறகுதான் வாகதேவனோடு ஓட்டிக் கொண்டு விடலாம் என்ற நப்பாசை. அவளுக்கு அந்த ஊரில் எத்தனையோ சௌகரியங்கள் இருந்தும், அந்த ஊர் வேம்பாகக் கசந்தது.

ஆனால் வாகதேவனுக்கு அந்த ஊர் மிகவும் பிடித்துப் போய் விட்டது. அதனால்தான் தம்முடைய நிரந்தர வாசத்தை எதிர்பார்த்துக் கொடியெல்லாம் போட்டு வளர்த்தார். மாற்றல் ஏதும் வந்துவிடக் கூடாது என்பதற்காகத் தலைமை ஆபீசில் சிபாரிசு பிடித்து வேண்டிக் கொண்டிருக்கிறார். அப்படி இருக்கும்போது கொடியை அழித்து விடுவதுதான் பாரதிக்கு உள்ள ஒரே சிறந்த வழியாகப்பட்டது.

'கொடியை வெட்டி விடுவது கொலைக்குற்றமல்ல. தண்டனை கிடையாது. எந்த எலி, ஓணான் அறுத்து விட்டதோ என்று சொல்லி விடலாம்...' சமையல் ஆகிக் கொண்டிருந்தது. அடுப்பிலிருந்து புகை போனதுபோல, பாரதியின் எண்ணங்கள் மேலே மேலே போய்க் கொண்டிருந்தன. ஏதோ தீர்மானத்துடன், கொதிநீர்ப் பாத்திரத்தை ஒரு இடுக்கியில் எடுத்துக் கொண்டு வெளியே வந்தாள். வாசற்படி தாண்டி, முன் தோட்டத்துக்கு வந்தாள். மண்ணைக் கிண்டி வேரில் விட்டு விடவேண்டியதுதான். அறுத்து விட்டால் கூடச் சந்தேகம் உண்டாகலாம். இது தெரியாது. ஆகவே வேரில் வெந்நீர் விடுவது என்று பாரதி தீர்மானித்தாள்.

ஒரு கணம்தான் பாக்கி. இடுக்கியால் பற்றியிருந்த கொதிநீர்ப் பாத்திரம் நழுவியது. "ஐயோ!" என்று பாரதி அலறிவிட்டாள். இடதுகாலில் கொதிநீர் கொட்டிக் கொப்புளித்துவிட்டது. சத்தம்செய்யாமல் நொண்டிக் கொண்டே உள்ளேபோய்விட்டாள், பாரதி. சக்களத்தியாகத் தோன்றும் இந்தப் பாழும் கொடியாலேயே அவளுக்குத் தொந்தரவு! வேலிக்கு இட்ட முள் காலில் என்பதுபோல, கொடிக்குக் கொதிக்கவைத்த வெந்நீர் காலில்



கொட்டி அவளைப் பழி வாங்கி விட்டது; உயிருள்ள ஒரு இளையாள் பழிவாங்கிவிட்டதைப் போல ஒரு உணர்ச்சி! எப்படியும் இந்தக் கொடியை......அதற்குமேல் பாரதியினால் சிந்திக்க முடியவில்லை. கால் வலிக்கத் தொடங்கிவிட்டது.

சமையல் முடிவதற்குள் வெளியில் சென்ற வாகதேவன் திரும்பி வந்தார். "டாக்டர் பார்த்தார். உன்னையும் பரிட்சை பண்ணி விட்டுத்தான் சொல்லணுமாம்..." என்றார்.

வார்த்தை முடிவதற்குள்ளேயே, "ஒண்ணும் வேண்டாம்.." என்னும் பாரதியின் வார்த்தை வெடிப்பு வாகதேவனைச் சாட்டை வாங்கியது. இன்னமும் கோபத்தின் சூடு ஆறவில்லை என்று எண்ணி மௌனமாக எழுந்து போய் ஸ்நானம் செய்து விட்டு வந்து இலையில் உட்கார்ந்தார். பாரதியும் மௌனமாகவே பரிமாறினாள். "காலில் என்ன?" என்று வாகதேவன் கேட்பதை எதிர்பார்த்து, சற்று வெளியில் தெரியும்படியாகவே நொண்டினாள். வாகதேவன் அவள் நொண்டியதைக் கவனித்தும் கூட, அன்றைய சம்பாஷணையின் விபரீதப் போக்கை எண்ணிப் பேசாமலே இருந்து விட்டார். அவர் 'காலில் என்ன?' என்று கேட்காததைக் கண்ட பாரதி, தான் இன்னும் ஒரு மைல் தூரம் தள்ளி வந்து விட்டதாக எண்ணினாள்.

சாப்பிட்டதாகப் பேர் பண்ணி விட்டு எழுந்தாள். பேசாமல் கூடத்தின் மூலையில் போய்ப் படுத்துக் கொண்டாள். ஏதோ காரணமின்றிக் குமுறிக்கொண்டு வந்தது அழுகை. தொண்டையை அடைத்தது. வயிற்றில் ஒரு புரட்டல், காலில் வலி. இத்தனைக்கும் மேலே மனத்தின் வலி வேறு அழுத்தியது. 'ஜில்'லென்று கட்டாந் தரையில் படுத்துக் கொண்டது சற்று இதமாக இருந்தது. சற்றைக்குள் வயிற்றில் புரட்டல் அதிகமாகவே, எழுந்து கொல்லைப்புறம் போனாள். வாந்தி எடுத்தாள். 'சரியாகச் சாப்பிடக்கூட இல்லையே! இத்தனை புரட்டலும் வாந்தியும் ஏன்?' பாரதி கொல்லை வழியாகவே தன் தோழி சவிதாவின் வீட்டுக்குப் போனாள்.

"ஏண்டி, பாரதி! கால் நொண்டுகிறாய்?" என்று சவிதா கேட்கவும் பாரதி அழுதே விட்டிருப்பாள். சிரமப்பட்டு அடக்கிக் கொண்டாள். 'பாரதி! இனிமேல் பச்சை உடம்பைப் பார்த்துக் கொள்ளணும்! காயம், சூடுபட்டு விடக்கூடாது. இப்படி அசடாக இருப்பாயோ?" என்று சவிதா சொன்னாள். அவள் குறிப்பிட்ட 'பச்சை உடம்பு' என்பதன் அர்த்தம்...?

"பச்சை உடம்பா? என்ன உளறுகிறாய்?" என்றாள் பாரதி.

"நீ சொல்லா விட்டால் எனக்குத் தெரியாதா, என்ன? நானும் நாலு பெற்று விட்டேன். என்னிடம் நீ ஒருநாளும் மறைக்க முடியாது!" என்றாள் சவிதா.

பாகீரதி அதற்குப் பிறகுதான், தன் உடல் நிலைபற்றி எண்ணிக் கணக்கிட்டாள். சவிதா சொன்னதன் கருத்தும், காலையில் தன் கணவர் 'காரியர் மீல்ஸ்' கொண்டு வருகிற நாளாகி விட்டது' என்று சொன்னதன் கருத்தும் சேர்ந்து ஒரு நம்பிக்கை, ஒரு தீர்மானம் உதித்தது. ஓடோடியும் சென்று கணவரிடம் சொல்ல வேண்டும் என்று துடித்துக் கொண்டு ஓடி வந்தாள். கணவரைக் கூடத்தில் காணோம். வாசலில் கொடியின் அடியில் நின்று அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்தார். பாகீரதிக்குப் பற்றிக் கொண்டு வந்தது. இந்த மனிதரிடம் போய்ச் சொல்லிக் கொள்ள வந்தேனே என்ற நினைப்பில் முன்பு படுத்திருந்த இடத்திலேயே போய் மீண்டும் படுத்துக் கொண்டாள்.

**வா**சு வெளியில் போய் விட்டதைக் கண்டு, கையில் ஒரு கத்திரிக்கோலுடன் கொடியின் அடிப் பாகத்தை நறுக்கி விட எண்ணுகிறாள். கத்திரிக் கோலும் பிரிக்கப்பட்டு விடுகிறது. "பாகீரதி!" யாரோ கூப்பிட்ட குரல் கேட்டுப் பாகீரதி சுற்றுமுற்றும் பார்க்கிறாள். யாரும் தென்படவில்லை. "ஏன் பார்க்கிறாய்? நான்தான் பச்சைக் கொடி, எந்த வேரை வெட்ட வந்தாயோ, அந்தப் பச்சைக்கொடிதான் பேசுகிறேன். சற்று நினைத்துப் பார்த்தால் என்னை நீ வெட்ட முற்பட மாட்டாய். யோசித்துப் பார். இத்தனை நாட்கள் நீ பட்ட மரமாக இருந்தாய். உன் வாழ்வின் இடையில் உன் கணவரின் அன்பைத் திருடிக் கொள்ள நான் வந்தேன். உன் கணவரை என்னிடம் பிரியம் செலுத்த நான் வற்புறுத்தவில்லை. ஏதோ மனித மனத்தின் நியதி இது. அன்பு செலுத்துவதற்கு மனைவி, தங்கை, தாய், தந்தை, மகன், மகள் என்று எல்லா வகையான உறவும்தான் தேவைப்படுகிறது. மகன், மகள் என்ற உறவு தானாக உரிய சமயத்தில் ஏற்படாமலிருக்கும் போது, நாயோ, பூனையோ அந்த உறவில் இடம் பெறுவதில்லையா? அது போல, பச்சைக் கொடி தான் இடம் பெற்றேன்.

"என்ன யோசிக்கிறாய்! நான் உன் வீட்டுக்கு வந்து வாழ்ந்து கன்னி கட்டினேன். நீயும் கன்னி கட்டி விட்டாய். உண்மையில் உன் கணவர் என்னிடம் காட்டிய அன்புதான் உன்னிடம் கன்னி கட்டி விட்டிருக்கிறது. ஆகவே உன் வாழ்வுக்காகவே நான் வந்தேன். தாழ்வுக்காக அல்ல." கொடி பேசியது. கொடிதான் பேசியதா?

பாகீரதியின் மனத்துள் படர்ந்திருந்த பொறாமைக் கொடியை வேரறுக்கவே பச்சைக் கொடி கனவுக் கொடியாக வந்து பேசியதோ?

பாகீரதி கனவிலிருந்து விழித்துக் கொண்டாள். வாசுதேவனைத் தேடினாள். அவர் இன்னும் வாசற்புறத்துக் கொடியின் கீழேயே நின்றிருந்தார். மெதுவாக வந்து பின்புறம் நின்றாள். வாசுதேவன் எதை அத்தனை உன்னிப்பாகக் கவனிக்கிறார் என்று தானும் பார்த்தாள். அவள் பார்வை நகர்ந்தது.

"ஐயோ, பாம்பு! இப்படி வந்துவிடுங்கள்!"

படர்ந்திருந்த கொடியில் புதரான ஒரு வளைவில் கொடியுடன் கொடியாக ஒரு மெல்லிய பச்சைப் பாம்பு இருந்து கொண்டு வாயைப் பிளந்து கொண்டிருந்தது.

பின்னர் வாசுதேவன் தன் நிலையடைந்து, கோல் கொண்டு வரும் வரையில் பாம்பு அங்கேயே இருக்குமா? எங்கெங்கோ தேடினார்கள். ஊஹூம்! பாம்பு மறைந்தே போய் விட்டது. பயந்தபடியே கேட்டைத் தாண்டி 'டியூட்டி'க்குப் போனார் வாசுதேவன். திரும்பி வந்த போதும் பயத்துடன் அண்ணாந்து பார்த்துக் கொண்டேதான் உள்ளே வந்தார். அவருடன் கூடவே போர்ட்டர் பொன்னனும் கையில் அரிவாளுடன் வந்து நின்றபோதுதான் பாகீரதிக்குப் புரிந்தது.

"பொன்னன் எதற்கு அரிவாள் கொண்டு வந்திருக்கிறான்?"

"இந்த அழகுப் பூங்கொடியை வெட்டி விடலாம் என்றுதான்."

"ஐயோ, பாவம்! பச்சைக் கொடியை வெட்டக்கூடாது. தோஷம்!"

"தோஷம் பார்த்தால் பாம்பு, பூச்சி வந்து அடைகிறதே!"

"ஏதோ ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொண்டால் போச்சு. கொடியைப் போய் வெட்டாதீர்கள். வேண்டவே வேண்டாம். பச்சைக் கொடி கன்னி கட்டிக் கொத்தும் குலையுமாக நிற்கிறது!"

வாசுதேவனுக்கு ஆச்சரியமாகப் போய் விட்டது. "ஏது, உனக்குக்கூடக் கொடியிடம் பிரியம் வந்துவிட்டதே!"

"பின்னே என்ன? பச்சைக் கொடியைப் போய் வெட்டுவார்களா? பச்சைக் கொடி மாத்திரம் கன்னி கட்டவில்லை......"

"பின்னே..." வாசு இன்னும் நெருங்கி வந்தார்.

"நானும்..." இந்த மூன்று எழுத்துக்களையும் வாசுவின் காதருகில் போய் வெளியிட்ட அவள் மிகவும் வெட்கி விட்டாள். வாசுதேவன் உணர்ச்சி வசப்பட்டு அவளது கரங்களைப் பற்றினார்.

# நல்ல யோசனை

கமலா அன்று சுரத்தே இல்லாமல் ஓய்வுடன் வீட்டில் உட்கார்ந்திருந்தாள். அவள் சிநேகிதி மீனு அப்படி அவளைப் பார்த்ததும் ஆச்சரிய மடைந்தாள்.



"என்ன கமலா! ஏன் ஒருமாதிரி இருக்கிறாய்?" என்று கேட்டாள்.

"ஆமாம்! ஒன்றும் பிடிக்கவில்லை, போ!" என்று அலுப்புடன் சொன்னாள் கமலா.

"ஏன், என்ன நடந்தது? வீட்டில் அவருடன் ஏதாவது......?"

"அதுதான் தெரியுமே! ஏதோ நீயும் வருகிறேன் என்றாயே, தீபாவளிக்கு உன்னுடன் கடைக்குப் போய்ப் புடவை, குழந்தைகளுக்குத் துணி மணி பார்க்கலாம் என்று நினைத்துப் பணம் கேட்டேன். இந்த மாசம் செலவு அதிகம்' என்று நம்ம 'பட்ஜெட்'டில் 'கட்' பண்ணி விட்டார். 'இந்தா! இப்போதைக்கு வைத்துக் கொள்' என்று வேண்டா வெறுப்பாக இருநூறு ரூபாயை விட்டெறிந்து விட்டுப் போனார் ஆபீஸுக்கு. இதிலே ஒரு நல்ல பட்டுப் புடவை கூட வாங்க முடியாதே, மீனு!" என்று வருந்தினாள் கமலா.

"பூ. இவ்வளவுதானா? பிரமாதம் போ! இப்போது கையிலே இருநூறு ரூபாய் இருக்கிறதா, இல்லையா? கிளம்பு பேசாமே! உனக்கு முதல்தரமான பட்டுப் புடவை கதரிலே வாங்கித் தருகிறேன். இந்தத் தீபாவளிக்கு எங்கள் வீட்டில் எல்லோரும் கதர் தான் வாங்கப் போகிறோம். நான் நல்ல கதர் ஸில்க் புடவை நாலைந்து பார்த்து வைத்து விட்டு வந்திருக்கிறேன். அதில் எனக்கு ஒன்று. பத்மாவுக்கு ஒன்று எடுக்கப் போகிறேன்......"

கமலா: கதரா? அது ரொம்பப் பருமனாயிருக்குமே!

மீனு: அடி பைத்தியமே! நீ எந்த யுகத்திலே இருக்கிறாய்? இப்பவெல்லாம் கதரிலே நம்ப முடியாதபடி 'நைலா' எல்லாம் வந்திருக்கிறது. அதுவும் கதர்ப் பட்டு இருக்கிறதே, அது மற்ற எல்லாப் பட்டுகளையும் தோற்கடிக்கிறது. உடை நல்ல உறுதியாக இருக்கிறது; கனமும் இல்லை. வித விதமான இனுக பார்டர். கலரிலே புடவை, ரவிக்கைத் துண்டு எல்லாம் இருக்கிறது கதர்ப்பட்டில்.

கமலா: கதர்ப்பட்டு என்றால் அதற்கும் மற்ற பட்டுக்கும் என்ன வித்தியாசம்?

மீனு: கதர்ப்பட்டு பூராவும் கையாலேயே திரிக்க—மெஷினிலே திரிக்கிறதில்லை — கை நெசவு செய்யறது. அதனாலே உறுதியும் அதிகம். இதுலே விசேஷம் என்னவென்றால், கதர்ப்பட்டு தரம் உயர்ந்ததோடு, விலையும் குறைவு. அதோடு ரூபாய்க்கு மூன்றணா 'ரிபேட்' வேறு கொடுக்கிறார்கள்.

கமலா: ஆனால் நான் காஞ்சீபுரம் பட்டுப் புடவைதான் வாங்கணும் என்றிருக்கிறேன்.

மீனு: கதரிலே காஞ்சீபுரம், கும்பகோணம் புடவை இனுக இனுசா எல்லா ரகங்களிலும் கண்ணைப் பறிக்கிற விதத்திலே சர்க்கார் கதர் இலாகாவிலே போடுகிறார்கள். எந்த மாதிரி பாட்டர்ன் வேணுமானாலும் கிடைக்கிறது. பழைய மோஸ்தர் 'பார்டர்' டிசைன்கள் புதுப் 'பாஷன்' எதுவானாலும் கதரிலே இப்போது கிடைக்கிறது. கதரிலே 'டின்யூ' புடவைகூட கிடைக்கிறது என்றால் பார்த்துக் கொள்ளேன். கதர் 'வாயில்' புடவைகூட வந்திருக்காம். இன்னும் என்ன என்னமோ விதங்கள் சொல்கிறார்கள்.

கமலா: தேவலையே! இதெல்லாம் எனக்குத் தெரியவே தெரியாதே!...குழந்தைகளுக்கு?

மீனு: குழந்தைகளுக்கு விதவிதமான சீட்டிகள் — யானை, குதிரை, சிங்கம் இந்த மாதிரி சித்திரங்கள் அச்சடித்த சீட்டிகள்கூட வந்திருக்கின்றன. நானே பார்த்தேன். 'ரெடிமேட்' சொக்காய்கள் கூட மலிவாகக் குழந்தைகளுக்கு, பெரியவர்களுக்கு எல்லாம் கிடைக்கிறது.

கமலா: ஆமாம்! இதெல்லாம் எங்கே கிடைக்கிறது?

மீனு: இப்போதுதான் சர்க்கார் காதி இலாகாவிலே எங்கே பார்த்தாலும் "சென்னை அரசாங்க காதி விற்பனை நிலையம்" என்று வைத்திருக்கிறார்களே! அவற்றில் நமக்கு வேண்டிய ரகங்கள் எல்லாம் கிடைக்கின்றன. நான் ஒன்று சொல்கிறேன், கேள்! நீ கிளம்பி என்னுடன் வா இப்போது. சர்க்கார் கதர் விற்பனை நிலையத்துக்குப் போய் உனக்குப் பிடித்த பட்டுப் புடவை, குழந்தைகளுக்குச் சொக்காய்கள் எல்லாம் எடுக்கலாம். அத்துடன் உன் புருஷருக்கும் ஒரு நல்ல கதர் வேஷ்டி அங்கவஸ்திரம் வாங்கி வருவோம். அவருக்கு அதை எதிர்பாராத அதிசயப் பரிசாகக் கொடு! எல்லாம் அவர் கொடுத்த பணத்துக்குள் அடக்கி விடலாம்.



கமலா: நிஜமாகவா? இதோ ஒரே நிமிஷத்தில் வருகிறேன்.

— சென்னை அரசாங்க காதி இலாகா

# பொங்கிவரும் பெருநிலவு

கி.ராஜேந்திரன்

## இருபத்தாறும் அத்தியாயம்

## கல் கரைந்தது!

மறுநாள் மாலையில் கதிர்வேலனைக் காண யாரோ வந்திருப்பதாகச் சொன்னாள் நர்ஸ் பவானி. யாராக இருக்கும்? சுகுமாரனும் மல்லிகாவும் கூட இன்னும் உதகையிலிருந்து திரும்பியிருக்க முடியாதே? செய்தியை அறிந்து இன்று கிளம்பினாலும் நாளைக் காலையில்தானே வர முடியும் என்று யோசித்துக் கொண்டே "அழைத்து வாருங்கள்" என்றான் கதிர்வேலன்.

சில நிமிஷங்களில் அறைக் கதவு திறந்து கொண்டு குணநாயகாவைக் கதிர்வேலனுக்குக் காட்டியது.

"மோட்டார் விபத்தில் மாட்டிக் கொண்டு மயிரிழையில் தப்பித்துக் கொண்டாயாமே? கேட்க ரொம்ப வருத்தமாக இருந்தது" என்றான் குணநாயகா கட்டிலில் கதிர்வேலனுக்கு மிக அருகில் உட்கார்ந்து கொண்டே.

"எதைக் கேட்பதற்கு வருத்தமாக இருந்தது? விபத்தில் மாட்டிக் கொண்டதையா? அல்லது உயிர் தப்பிப் பிழைத்து விட்டதையா?"

குணநாயகா முறுவலித்தான். "நீ உயிர் தப்பினாய் என்று அறிந்து கொண்ட பிறகுதான் எனக்கு மன நிம்மதி ஏற்பட்டது, கதிர்வேலு!"

"பயப்படாதே! கொலைக் குற்றம் செய்துவிட வில்லை நீ!"

குணநாயகா ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்தான். அதற்கிடையே "நீ ரொம்பக் கெட்டிக்காரன்தான்" என்று ஒப்புக் கொண்டான். "அதை எப்படிக் கண்டு பிடித்தாய்?" என்று கேட்டான்.

"சற்று முன்னால் கதவைத் திறந்து கொண்டு நீ நின்றவரைக்கும் என்னால் அதை ஊகிக்கக் கூட முடியவில்லை. ஏதோ யதேச்சையாக நடந்து விட்ட விபத்து என்றே நினைத்தேன். அந்தக் காரின் டிரைவர் பயந்து போய்த் திரும்பிப் பாராமல் ஓடி விட்டான் என்று எண்ணினேன். ஆனால் உன்னைப் பார்த்த கணத்தில் எனக்கு எல்லா விஷயங்களும் தெளிவாகி விட்டன."

"இரண்டு நாட்களாக இரவும் பகலும் சுகுமாரன் வீட்டருகே காத்திருந்தேன், கதிர்வேலு! நீ வருவாய் வருவாயென்று எதிர்பார்த்துப் பார்த்து ஏமாற்றம் அடைந்து கொண்டே வந்தேன். வேறு எங்கே உன்னைத் தேடிப் பிடிப்பது என்றும் எனக்குத் தெரியவில்லை. சுகுமாரன் விலாசம் மட்டும் தான் எனக்குத் தெரிந்திருந்தது. அவரும் வீட்டில் இல்லை. வெளியூர் சென்றிருப்பதாக அறிந்தேன். பழிக்குப் பழி வாங்கும் எண்ணத்தோடு வந்த என்னை நீ காக்க வைக்கக் காக்க வைக்க என்னுடைய கோபமும் அதிகரித்துக் கொண்டே போயிற்று. அக்கம்பக்கத்தில் இருந்தவர்கள் கூட நான் ஒரே இடத்தில் காரை நிறுத்திக் கொண்டு உட்கார்ந்திருப்பதைச் சந்தேகக் கண்களோடு பார்த்தார்கள். கடைசியில் எனக்கு அலுத்துப் போன சமயத்தில் நீ வந்தாய். அதுவும் எனக்குச் சௌகரியமான சமயத்தில் இரவு நேரத்தில் வந்தாய். கோபமெல்லாம் திரண்டு வந்தது. அந்தச் சமயத்தில் காரைக் கிளப்பிக் கொண்டு உன் மீது பாய்ந்தேன்."

"அடுத்த முறையாவது நீ வெற்றியடைய அதிர்ஷ்டம் உன் பக்கத்தில் இருக்கட்டும்" என்றான் கதிர்வேலன்.

"அடுத்த முறை என்பது இனிமேல் கிடையாது. என் மனம் மாறிவிட்டது. உனக்கு இப்போது கிடைத்திருக்கும் தண்டனையே போதும் என்ற தீர்மானத்துக்கு வந்து விட்டேன்.

"காரியத்தை முடித்துக் கொண்டு அப்பால் சென்ற பின்னர்தான் என் உடல் ஒரேயடியாக உதறிக் கொண்டி

ருக்கிறது என்பதை உணர்ந்தேன். எப்படியோ காரை ஓட்டிக் கொண்டு வீடு சேர்ந்தபிறகும் இரவு முழுவதும் தூக்கமே வரவில்லை. கண் இமைகள் மூட மறுத்தன. உன்னுடைய முகம் சாவுக் களையுடன் என் எதிரே தோன்றிக் கொண்டேயிருந்தது. மறுநாள் காலையில் பத்திரிகைகளில் உன் உயிருக்கு ஆபத்தில்லை என்பதைத் தெரிந்து கொண்ட பின்னர்தான் நிம்மதி அடைந்தேன். மறுபடியும் அந்த மனவேதனையை என்னால் சமாளிக்க முடியாது!''

''எனக்கு உயிர்ப்பிச்சை அளித்துவிட்டீர்கள். ரொம்ப சந்தோஷம்'' என்றான் கதிர்வேலு, அவனை தொத்துநோய் உள்ளவனைப் போல் வெறுப்புடன் பார்த்துக் கொண்டே.

குணநாயகா எழுந்தான். போகிற போக்கில், ''ஒன்று மட்டும் ஞாபகம் வைத்துக் கொள். நடராஜன் நீ அடிபட்டுக் கிடப்பதைக் கண்ட உடனே போலீஸுக்குத் தகவல் கொடுத்து விட்டான். அவர்கள் வந்து விசாரிப்பார்கள் உன்னை. அப்போது அசட்டுத்தனமாக என்னைப் பற்றி ஏதாவது உளறி வைக்காதே. அப்புறம் உன்னுடைய லீலைகள் எல்லாமே வெளிப்படும். டைரக்டர் சுகுமாரன், ஏன், மல்லிகாவும் கூட மாட்டிக் கொள்ள நேரிடலாம். 'எனக்கு ஒன்றுமே தெரியாது' என்று சொல்லி விடுவதுதான் புத்திசாலித்தனம்!'' என்று கூறிக் குணநாயகா வெளியே சென்றான்.

* * *

கதிர்வேலனுக்கு அடிபட்ட விவரத்தைக் கேள்விப்பட்டதும் சுகுமாரனும் மல்லிகாவும் உதகமண்டலத்திலிருந்து உடனே புறப்பட்டு வந்தார்கள். கல்நெஞ்சம் படைத்த சுகுமாரன் கூடக் கதிர்வேலனுடைய கட்டுப் போட்ட கரங்களைக் கண்டதும் கண்ணீர் விட்டு விட்டார். நடராஜனைத் தனிமையில் பார்த்து, ''டாக்டர்! அந்தக் கைகளைக் காப்பாற்றித் தந்திருக்கக்கூடாதா?'' என்று தீனக் குரலில் கேட்டார்.





தலையை அசைத்தான் நடராஜன். ''கரங்கள் இல்லாத மனிதன் படக்கூடிய அவதி எனக்குத் தெரியாதா? கைகால்கள் இல்லாதவர்களுடைய நிலை எவ்வளவு பரிதாபகரமானது



என்பதை நான் உணரவில்லையா? அவர்களுக்கு வாழ்க்கை எவ்வளவு துயரகரமாக மாறிவிடும்? கைகால் போன்ற அங்கங்களை வெட்டி எடுத்துவிடுவதற்கு முன்னால் எந்த டாக்டரும் ஒருமுறைக்குப் பல முறைகள் யோசிப்பார். அந்த அங்கங்களை முழுமையாகச் சீர்ப்படுத்துவதுதான் டாக்டருடைய முதல் கடமை. நோயாளி அடைந்திருக்கும் காயத்தின் தன்மையைப் பொறுத்தது, டாக்டருடைய முடிவு. சில சமயங்களில் அங்கங்களைக் காக்கமுடியாமல் போகிறது. சிரமசாத்தியமான காரியமாகி விடுகிறது.

''கதிர்வேலனுடைய கரங்களைப் பரிசோதித்ததுமே நான் இந்தக் கைகளைச் சரிப்படுத்த முடியாது என்று தீர்மானித்துவிட்டேன். எலும்புகள் நொறுங்கி விட்டன. இரத்தக் குழாய்களெல்லாம் சேதமடைந்து விட்டன. நரம்புகள் நசுங்கி விட்டன. ஆனாலும் மறுநாள் காலைவரை காத்திருந்தேன், முடிவாகத் தீர்மானிப்பதற்கு முன்னால். பெனிஸிலின் இன்செக்ஷனும் ரத்தமும் அளித்தேன். ஆனால் காலையில் பார்த்தபோது நிலைமை இன்னும் மோசமாக இருந்தது.

'' 'க்ளாஸ்ட்ரிடியா' என்று அழைக்கப்படும் ஒருவகையான கிருமிகள் இத்தகைய காயங்களுக்குள் புகுந்து கொண்டு படாத பாடு படுத்திவிடும். மற்ற ஜீவராசிகளைப் போல் அல்லாமல் இதற்குப்

பிராணவாயுவே தேவைப்படுவதில்லை. பிராண வாயு இல்லாத இறந்து போன தசைகளுடன் கூடிய இதுபோன்ற ஆழ மான காயங்கள் அதற்குச் சொர்க்க லோகம் போன்றது. அங்கிருந்து கொண்டு பல்கிப் பெருகி நாகப் பாம் பின் விஷத்தை விடக் கொடிய நஞ்சை உற்பத்தி செய்கிறது.

''கதிர்வேலன் அடைந்த காயங்களும் இவற்றால் பாதிக்கப்பட்டு விட்டன. அடிபட்ட கரம் துடித்தது. என் கண்களுக்கெதிரேயே வாயு உற்பத்தி யாகி வீங்கிக் கொண்டே போயிற்று. ஒருவித துர்நாற்றமும் உண்டாயிற்று. வலியினால் கதறினான் அவன். இன்னும் தாமதித்தால் அவன் உயிருக்கு நிச்சயம் ஆபத்து என்று தீர்மானித்தேன்.

'' அதற்குப் பிறகும் யாருமே சற்றும் எதிர்பாராத விதமாக ஒரு சம்பவம் நிகழ்ந்து விட்டது.

'' சஸ்திர சிகிச்சை நடக்கும்போது மயக்க மருந்தைச் செலுத்துவதற்காக ஒருவருடைய உதவியைக் கோரியிருந் தேன். அவர் ரொம்ப ரொம்பக் கெட் டிக்காரர்தான். வழக்கமாக எனக்கு இதில் உதவுபவர்தான். ஆனால் நேற்று மனப் பதற்றத்தில் மிகப் பெரிய தவறு இழைத்து விட்டார்.

''ஆப்பரேஷன் நடந்து கொண்டு இருந்தபோது நர்ஸ் பவானி இருதயத் துடிப்பைக் கவனித்துக் கொண்டேயிருந் தாள். திடீரென்று 'டாக்டர்! இருதயத் துடிப்பு குறைகிறது' என்றாள்.

'' நான் தைரியத்தைக் கைவிடாமல் உடனே மயக்க மருந்தைக் குறைத்துப் பிராண வாயுவைச் செலுத்துமாறு உத்தரவிட்டேன். அப்போதுதான் அவர் பயந்து விட்டார். அவனுடைய உயிர் பிரிகிறதோ என்ற பயத்தில் என்ன செய்கிறோம் என்று தெரியாமல் பிராண வாயுவைத் திருப்புவதற்குப் பதில் மயக்க மருந்தை — ஸைக்ளோ ப்ரோ பேன் — திருப்பி விட்டார்.

'' இருதயத் துடிப்பு மேலும் குறை வதைக் கண்ட பவானி உடனே எனக்கு எச்சரிக்கை செய்தாள். இதற்குள் அவ ரும் தம் தவற்றை உணர்ந்து நடுங்கி விட்டார். அவர் கை கால்களெல்லாம் வெலவெலத்து விட்டன. உடல் 'குப்' பென்று வியர்த்து விட்டது. என்ன செய்வது என்றே அவருக்குப் புரிய வில்லை. மூளை பயத்தில் வேலை செய்ய மறுத்தது. நடுங்கிச் செத்துக் கொண் டிருந்த அவருடைய சட்டையின் கழுத் துப் பட்டையைக் கெட்டியாகப் பிடித்து அறைக்கு வெளியே கொண்டு போய்த் தள்ளிவிட்டுத் திரும்பினேன்.

'' டாக்டருக்கு முக்கியமாக இருக்க வேண்டியது மனோதிடமும் சமயோசித புத்தியும். அவை இல்லாவிட்டால் ரொம் பக் கஷ்டம்தான். அவரை வெளியே தள்ளி விட்டுத் திரும்புவதற்குள் நர்ஸ் பவானி நான் சொன்னபடி மயக்க மருந்தை மூடி விட்டு, பிராணவாயுவை முழுக்கத் திறந்து விட்டிருந்தாள். அத் துடன் சிறிது கரியமிலவாயுவையும் சேர்த்து அனுப்பினேன்.

'' நர்ஸ் நிர்மலா நான் கேட்டபடி 'ப்ரோகேன்' ஊசியைத் தயாராக வைத் திருந்தாள். நேரடியாக இருதயத்துக் குள்ளேயே ஊசியைக் குத்தி மருந் தைச் செலுத்தினேன். இருதயத் துடிப்பு உடனே அதிகரித்தது.

''பின்னர் தொடர்ந்து ஆப்பரேஷனைச் செய்து முடித்தேன். ஆனால் நடுவிலே அந்தப் பத்து நிமிஷங்களும் இப்போது நினைத்துப் பார்த்தால்கூடச் சிம்ம சொப்பனமாக இருக்கிறது'' என்று முடித்தான் நடராஜன்.

சாதாரணமாக இவ்வளவு தூரம் சுகு மாரனிடம் பேசியிருக்க மாட்டான். ஆனால் கரங்களை இழந்த கதிர்வேலனைக் கண்டு அவர் மனம் என்ன பாடுபடும் என்று உணர்ந்தான். அந்தத் துயரத்தை நீக்கத் தன்னால் இயன்றதைச் செய்திருக் கிறான் என்ற நம்பிக்கை அவருக்கு ஏற் பட வேண்டும் என்று விரும்பினான். நடந்ததை விவரமாகச் சொன்னான்.

ஒரு நீண்ட பெருமூச்சு விட்டார் சுகுமாரன். '' டாக்டர்! உங்களுக்கு என் னுடைய நன்றியை எப்படித் தெரிவிப் பது என்றே தெரியவில்லை. நான் போய் வருகிறேன்'' என்றார்.

'' கவலைப்படாமல் போய்வாருங்கள். கதிர்வேலனை நான் பத்திரமாகப் பார்த் துக் கொள்கிறேன். நான் கொஞ்சம் அலட்சியமாக இருந்தால்கூட நிர்மலா இருக்கிறாள். கண்களை இமை காப்பது போல் அவனைப் பாதுகாப்பாள்'' என்று விடை கொடுத்து அனுப்பி வைத்தான்.

கதிர்வேலனிடமும் விடைபெற்றுக் கொண்டார் சுகுமாரன்.

'' மாமா ! என் தலைகாணிக்கு அடியில் கையை விட்டு அதிலிருப்பதை எடுங் கள் '' என்றான் அவன்.

சுகுமாரன் அப்படியே செய்தார். அவர் விரல்கள் ஒரு புகைப்படத்தையும் சில கடிதங்களையும் பற்றி இழுத்தன.

அவற்றைப் பார்த்த பிறகு சுகுமார னால் அழுகையைக் கட்டுப்படுத்தவே முடியவில்லை. விம்மலும் அழுகையுமாக உட்கார்ந்து விட்டார்.

'' மாமா ! இது என்ன உங்களைப் போன்ற தைரியசாலி கிடையவே கிடை

---

யாது என்று நினைத்துக் கொண்டிருக்கிறேன். இப்படிக் கண்ணீர் விடுகிறீர்களே?'' என்றான் கதிர்வேலன்.

''இவற்றைப் பார்த்த பிறகும் என்னால் எப்படி அழாமல் இருக்க முடியும்? என்னைப் போல் சுயநலக்காரன் எங்கே யாவது உண்டா? எனக்காகத்தானே இவற்றைத் திருடத் துணிந்தாய். அந்த முயற்சியில்தானே கரங்களை இழந்தாய். நான் பெரிய பாவி, கதிர்வேலு! என்னை மன்னித்து விட்டேன் என்று வாய் திறந்து சொல்லு!'' என்று கெஞ்சியது அந்தக் கல்நெஞ்சம்!

''மாமா! எதற்கு யாரை மன்னிப்பது? நானாகவேதான் உங்களுக்கு உதவ முன்வந்தேன். நீங்கள் எப்படிப் பொறுப்பாளியாக முடியும்? அழாதீர்கள். வீட்டுக்குப் போய் இவற்றை நெருப்பில் போட்டுக் கொளுத்துங்கள்.''

''கொளுத்துகிறேன், கதிர்வேலு! அத்துடன் என்னையும் சேர்த்துக் கொளுத்தினால் நன்றாக இருக்கும். கைகளைப் பலி கொடுத்து இந்தக் காரியத்தில் நீ வெற்றியடைந்தும் பயனில்லை, கதிர்வேலு! அந்த அயோக்கியன் இதையெல்லாம் போட்டோ எடுத்து வைத்திருக்கிறானாம். நீ பலத்த காயங்களுடன் வலியால் துடித்தபோது நான் சுகமாகத் தூங்கினேன்! ஏன் பேச மாட்டேனென்கிறாய்? என்னை மன்னித்தேன் என்று ஏன் சொல்ல மாட்டேனென்கிறாய்? என்னைப் பிடிக்கவில்லையா? வெறுத்துவிட்டாயா? எப்படிப் பிடிக்கும்? கரங்களை வெட்டி வீழ்த்தியவனை வெறுக்காமல் என்ன செய்வது?''

''மாமா! மன்னித்து விட்டேன்'' என்று அலறினான் கதிர்வேலு, அவர் புலம்பலைப் பொறுக்க மாட்டாமல்.

## இருபத்தேழாம் அத்தியாயம்

# இல்லற தீபம்

கதிர்வேலனுக்கு விபத்து நேர்ந்து ஒரு வார காலமாகி விட்டது. இந்த ஒரு வாரமும் நர்ஸிங்ஹோமில் ஒரே ரகளை தான். அதற்கு மூல காரணம் கதிர்வேலன்தான். ஒரேயடியாகக் கூச்சல் போட்டான். யாராவது அருகே போனால், ''என் அருகே நெருங்காதே, போ!'' என்று கத்தினான் தொண்டை கிழிய. டாக்டர் நடராஜனிடம் மட்டும் தான் சற்று அடங்கியிருந்தான்.

அதுவும் நர்ஸ் நிர்மலாவை அந்த அறைப் பக்கமே தலைகாட்ட அவன் விடவில்லை. அவள் முகம் தெரிந்தால் போதும்; கண்டபடி சபித்தான். தன்னைத் தானேயும் திட்டிக் கொண்டான். ''என்னைக் கொன்றுவிட வேண்டுமா? நான் சாவதில் உனக்கு விருப்பமா? அப்படியானால் வா! நான் உயிருடன் இருக்க வேண்டும் என்று நீ விரும்பினால் என் முகத்திலேயே விழிக்காதே!'' என்று கட்டடம் அதிரும்படி இரைந்தான்.

இந்தக் கூத்தெல்லாம் நடராஜனுக்குப் புரியவில்லை. அவர்களுக்கிடையே தளிர் விட்டிருந்த தூய காதலை அவன் நன்கு உணர்ந்திருந்தான். அப்படியிருக்கும் போது கதிர்வேலன் இப்படிக் கத்துவானேன்? நிர்மலாவை ஓயாமல் சபித்து அழ விடுவானேன்? ஏதோ விளையாட்டாகச் சண்டை போட்டுக் கொண்டிருப்பார்கள், இரண்டொரு நாட்களில் சரியாகி விடும் என்று நம்பினான். ஆனால் ஒரு வாரத்துக்கு மேல் ஆகியும் கதிர்வேலன் செய்யும் ரகளை ஓயவில்லை. நிர்மலா அவன் இருந்த பக்கமாகக் கூடப் போக முடியவில்லை.

ஒரு முடிவுக்கு வந்தவனாக நிர்மலாவைக் கேட்டான் நடராஜன்: ''எதற்கு இப்படிக் கத்துகிறான், நிர்மலா! நான் ஏதாவது உதவி புரிய முடியுமா?''

நிர்மலா தன் அகன்ற கண்களை உருட்டி விழித்தாள். ஆழங் காண முடியாத அந்த நயனங்களின் அடித்தளத்திலிருந்து கோபம் தீநாக்குகளாக வெளிப்பட்டு நடராஜனைச் சுட்டது.

''ஆகா! நீங்கள் இதுவரையில் செய்த உதவி போதாதா? இன்னமும் உதவி செய்ய வேண்டாம். நீங்கள் சும்மாயிருந்தாலே போதும்.''

''நிர்மலா! என் மீது ஏன் கோபப்படுகிறாய்? நான் ஒன்றுமே செய்யவில்லையே!'' என்று கூறி மிரள மிரள விழித்தான் நடராஜன்.

''இந்தப் பூனையும் பாலைக் குடிக்குமா என்பது போல் தோற்றமளித்து என் வாழ்வையே பாழாக்கி விட்டீர்கள்.''

''உன் வாழ்வை நான் பாழாக்குவதா? கனவில்கூட அப்படி நினைத்திருக்க மாட்டேன், நிர்மலா!''

''கனவில் நினைப்பீர்களா? நினைவில் தான் சொன்னீர்கள், அவரிடம் நான் விதவை என்பதை.''

நடராஜன் அசந்து போனான், இவ்வளவு பெரிய குற்றச்சாட்டைச் சமாளிக்க முடியாமல். ''கிடையவே கிடையாது! நான் சொல்லவேயில்லை. ஆனால் இதுவரை அதை அவனிடம் சொல்லா



கொல்லங்கோடுக்குச் சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள் விஜயம் செய்தார். தங்கப் பல்லக்கில் ஸ்ரீ சிருங்கேரி சுவாமிகள் ஊர்வலம் வரும் காட்சியையும், அருகில் கொல்லங்கோடு ராஜா ஸ்ரீ பத்மநாப ரவிவர்ம ராஜா பக்தி சிரத்தையுடன் நிற்பதையும் படத்தில் காணலாம்.

---

மலே காதலை வளர்த்திருந்தாயானால் அது மிகப் பெரிய தவறுதான். அதற்காக அவன் கோபப்பட்டால் அது நியாயந்தான். கவலைப்படாதே, நிர்மலா! அவனிடம் நான் பேசிச் சரிக்கட்டுகிறேன். உன்னை மன்னித்து விடும்படி கேட்டுக் கொள்கிறேன்.''

''நிஜமாகவா, டாக்டர்? எனக்கு இந்த உதவியைச் செய்தால் வாழ்நாள் முழுவதும் உங்களுக்கு நன்றிக்கடன் பட்டிருப்பேன், டாக்டர்! எப்படியாவது அவரை நான் நெருங்க விடச் செய்யுங்கள், டாக்டர்! நான் காதலைக் கேட்கவில்லை. அன்பு மொழிகளை எதிர்பார்க்கவில்லை. மனைவியின் ஸ்தானத்தை விரும்பவில்லை. அவருக்குத் தொண்டு புரியத்தான் விரும்புகிறேன். எத்தனையோ நோயாளிகளுக்கு நான் செய்துள்ள சேவையின் புண்ணியம்தான் அவருக்குப் பணிபுரியும் வாய்ப்பு எனக்குக் கிட்டியிருக்கிறது. அதைப் பயன்படுத்திக் கொள்ள அனுமதியளிக்கச் சொல்லுங்கள், போதும். வேறு ஒன்றுமே வேண்டாம். டாக்டர்! கரங்களை இழந்த அவருக்கு உணவு ஊட்டவும் தண்ணீர் கொடுக்கவும் விரும்புகிறேன். கட்டுகளை வலி தெரியாமல் பிரித்தெடுத்து மருந்து போட்டு மறுபடியும் கட்டுப் போட விரும்புகிறேன். அவருடைய கேசத்தை வாரி விடும் உரிமையைக் கேட்கிறேன். தூங்கும்போது உடலைப் போர்த்தி விடவும் ஆசைப்படுகிறேன். இந்தப் பாக்கியங்களெல்லாம் இந்த ஜென்மத்தில் எனக்குக் கிட்டுமா, டாக்டர்!''

''நிச்சயமாகக் கிடைக்கும், நிர்மலா! என் வார்த்தைகளை நம்பு'' என்று திரும்பத் திரும்பச் சொல்லி அவளைச் சமாதானப் படுத்தினான் நடராஜன்.

** ** **

கதிர்வேலன் கொஞ்சம் சாந்தமாக இருந்த சமயத்தில் மெல்லப் பேச்சை ஆரம்பித்தான் நடராஜன்.

''கதிர்வேலு! நிர்மலா உன்னிடம் உண்மையைச் சொல்லாமல் மூடி மறைத்தது தவறுதான். போனால் போகிறது. அவளை மன்னித்துவிடு. பேதைப் பெண் உன் காதலை இழக்க நேரிடுமோ என்ற பயத்தில் சொல்லவில்லை.''

''எதைச் சொல்லவில்லை, டாக்டர்?''

''அவள் விதவை என்பதைத்தான்.''

நடராஜனை நீண்ட நேரம் உற்றுப் பார்த்தான் கதிர்வேலன். ''டாக்டர்! நிஜமாகத்தான் சொல்கிறீர்களா?''

''உண்மைதான், கதிர்வேலு! உனக்குத் தெரியாதா? யாரோ உன்னிடம் சொல்லி விட்டார்கள். அதனால்தான் கோபப்பட்டுக் கத்துகிறாய் என்றல்லவா நினைத்தேன்?'' என்று கேட்டான் நடராஜன் வியப்புடன்.

''விதவை! விதவையானால் என்ன டாக்டர்? என்னைப் பொறுத்த வரையில் அவள் புத்தம் புதிய தாமரை மலர். என் எதிரே இதழ்களைச் சிலிர்த்து விரித்துச் சிரிக்கும் பட்டு ரோஜா. களங்கம் என்பதே இல்லாத முழு மதியம். தெளிந்த பால் நிலவு! டாக்டர்! இப்போது நீங்களே சொல்லுங்கள், விதவையானால் என்ன? அவளுக்கு என்ன குறைந்து விட்டது? என்ன குறை பாட்டை யார் கண்டு விட்டார்கள்? அப்படிக் கண்டவர்களைத் தைரியமிருந்தால் என் எதிரே கொண்டு வந்து நிறுத்துங்கள். கைகள் இல்லை எனக்கு, ஆனால் இரண்டு கால்களாலும் உயர எழும்பிக் குதித்து உதைப்பேன் அவனை!''

''அப்பனே! நீ அப்படிச் செய்தாலும் செய்வாய்! நம்புவதற்கில்லை உன்னை. அவளுக்குக் குறைவு ஒன்றுமே இல்லை என்பதை உன்னைப் போலவே நானும் ஒப்புக் கொள்கிறேன். அப்படியிருக்க அவளை ஏன் நீ வெறுக்கிறாய்? ஏன் உன் அருகிலேயே அவளை நெருங்கவிட மாட்டேன் என்கிறாய்?''

''டாக்டர்! நீங்களா இந்தக் கேள்வியைக் கேட்கிறீர்கள்? உங்கள் மனத்தைக் காது கொடுத்துக் கேளுங்கள். அது சொல்லும்! டாக்டர்!

''ஆப்பரேஷன் செய்தபோது என் உயிருக்கு மிகப் பெரிய ஆபத்து வந்ததாக

# அதிர்ஷ்டத்தையே நம்பி இருக்க வேண்டாம்

நீங்கள் உங்கள் மோட்டாருக்கு விரும்பும் எண்ணெயின் பிராண்டின் பெயரைக் குறிக்காமல் பொதுவாகக் கேட்பது மோட்டார் ஓட்டும் ஆபத்துக்களில் ஒன்று. உங்கள் மோட்டார் இயந்திரத்துக்கு நீங்கள் மதிப்புக் கொடுப்பதாயிருந்தால் இந்த ஆபத்தில் சிக்கிக் கொள்ளவே கூடாது. எப்போதும் காஸ்ட்ராலையே கேட்டு வாங்குங்கள். அப்போதுதான் சென்ற ஐம்பது வருஷங்களுக்கு மேலாக நுண்கலை முன்னேற்றங்கள் ஒவ்வொன்றையும் அடைந்திருக்கும் எண்ணெய் உங்களுக்குக் கிடைக்கிறது என்பது நிச்சயமாகும். உங்களது கார் உற்பத்தியாளர் அங்கீகரிக்கும் எண்ணெய் இதுவே. 'எண்ணெய்களுள் தலை சிறந்தது' என்பதுடன் எந்த வயதுக் கார் எஞ்சினுக்கும் பொருத்தமானது காஸ்ட்ரால்.

# காஸ்ட்ரால்

என்ற பெயரைக் குறிப்பிட்டே
எப்போதும் கேளுங்கள்




எண்ணெய்களுள் தலை சிறந்தது

## ஸி. ஸி. வேக்பீல்டு & கோ., லிமிடெட்

(இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது. அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் வெற்றிகரமாக இயங்க சக்தியை அளித்து வருகிறது

வும்," என்னை உங்களுடைய அபாரத் திறமையினால் காத்ததாகவும் நர்ஸ் பவானி சொன்னாள். அவள் கூறியது உண்மைதானா, டாக்டர்!"

"ஆமாம். நீ பிழைப்பது துர்லபம் என்றுதான் சில நிமிஷங்கள் நினைத்து விட்டேன். மிகுந்த பிரயாசைப்பட்டுக் காப்பாற்றினேன்!"

"ஏன் என்னைக் காப்பாற்றினீர்கள், டாக்டர்! என்னைச் சாகும்படி விட்டிருக்கக் கூடாதா?' என்று அலறினான் கதிர்வேலன். நர்ஸிங் ஹோமின் மூலை முடுக்குகளிலெல்லாம் அவன் அலறல் எட்டி அதிர்ந்தது.

"நோயாளியைக் காக்க வேண்டியது என் கடமை, கதிர்வேலு! மனிதர்கள் கஷ்டப்படும்போது 'செத்துப் போனால் தேவலை' என்று சொல்கிறார்கள் முட்டாள்கள்! கொஞ்சம் யோசித்துப் பார். இறந்துபோவதை விட உயிருடன் இருக்கிறோம் என்ற எண்ணம் இன்பத்தைத் தரவில்லையா? அப்படியே இல்லை என்றாலும் அதற்காக நீ என்னைத்தானே கோபித்துக் கொள்ள வேண்டும். நிர்மலாவிடம் எரிந்து விழுவானேன்?"

"நான் அவளைக் காதலிக்கிறேன் டாக்டர்! ஆமாம், நான் அவளைக் காதலிக்கிறேன், நிஜமாகத்தான் டாக்டர்! சத்தியமாகச் சொல்கிறேன், அவளை நான் மனமாரக் காதலிக்கிறேன்!" நிதானமான குரலில் நடராஜனை நம்ப வைக்க அரும் பாடு பட்டான் கதிர்வேலன்!

நடராஜனுக்கு அழுவதா சிரிப்பதா என்று தெரியவில்லை. ஒரு வேளை அவனுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதோ? கீழே விழுந்த அதிர்ச்சியால் சித்தம் கலங்கி விட்டதோ? இருந்தாலும் இன்னும் கொஞ்சம் பேச்சுக் கொடுத்துப் பார்த்தான். "ரொம்ப நல்லதாகப் போய் விட்டது! ஒருவரை யொருவர் காதலித்தால் கல்யாணம் செய்து கொண்டு சௌக்கியமாக இருக்க வேண்டியதுதானே? எதற்கு இந்த வீண் ரகளை யெல்லாம் செய்கிறாய்?"

"நீர் ஒரு சுத்த மடையன், டாக்டர்!" என்றான் கதிர்வேலன்.

நடராஜனுக்குத் தூக்கிவாரிப்போட்டது. கதிர்வேலு தொடர்ந்தான்:

"ஆமாம்! நீர் ஒரு முழு முட்டாள்! இல்லாவிட்டால் இப்படிப் பேசமாட்டீர்கள். நான் அவளைக் காதலிக்கிறேன். அவளும் என்னைக் காதலிக்கிறாள். தன் அகன்ற நயனங்களின் ஓரத்தில் பெரிய விழிகளைச் செலுத்திக் கடைக் கண்ணால் பார்ப்பாள். அந்தக் கண்களை வேடிக்கையாகப் பொத்தி விளையாட எனக்குக் கைகள் இல்லையே, டாக்டர்!



குமாரி ஜோவின் பரதநாட்டிய அரங்கேற்றம் மியூஸியம் தியேட்டரில் சமீபத்தில் வெகு விமரிசையாக நடந்தேறியது. நடனமாடிய குமாரி ஜோவின் திறமையைப் புரொபசர் சாம்பமூர்த்தி பாராட்டிப் பேசினார். குமாரி ஜோ காலஞ்சென்ற திரு கே. ஸ்ரீ. மேனன் ஐ. ஸி. எஸ். அவர்களின் புதல்வி.

"நல் முத்துக்களைக் கோத்த சரத்தைப் போன்ற பற்கள் தெரியக் கொவ்வைச் செவ்வாயைத் திறந்து கலகலவென்று சிரிப்பாள். அந்த அதரங்களின் மென்மையை ஸ்பரிசிக்க எனக்கு விரல்கள் இல்லையே, டாக்டர்!

"என் அருகே நெருங்க நெருங்க அவளை வெட்கம் சூழ்ந்து விடும். அந்த நாணத்திலே முகம் குப்பென்று சிவந்து விடும். அவளுடைய கன்னங்கள் பட்டு ரோஜாக்களாகத் திகழும். அந்தக் கன்னங்களை ஆசை தீரக் கிள்ளுவதற்கு எனக்கு நகங்கள் இல்லையே, டாக்டர்!

"மயிலாக ஆடி, அன்னமாக நடந்து மானாகத் துள்ளும்போது அவளைக் கட்டிப் பிடிப்பதற்கு எனக்குக் கரங்கள் இல்லையே, டாக்டர்!

"ஊடல் புரிந்து அவள் கோபித்துக் கொள்ளும் போது அவள் கரத்தைப் பற்றி வம்புக்கு இழுக்க எனக்குக் கைகள் இல்லையே, டாக்டர்!

"மோகன நிலவை அனுபவித்துக் கொண்டு அவள் என் மடியில் படுத்திருக்கும் போது அவள் கேசத்தை வருட எனக்கு விரல்கள் இல்லையே, டாக்டர்.

"பூரண சந்திரனைப் போல ஒளிரும் அவள் முகத்தை உள்ளங் கைகளுக்



ஸ்ரீ வி. சுப்பராயர் அவர்களது ஷஷ்டியப்த பூர்த்தியை முன்னிட்டு, அவரது இலக்கிய - சமுதாய - சமய சேவையைப் பாராட்டும் முறையில் பம்பாயில் செப்டம்பர் 21ந் தேதி தமிழர் மன்றத்தாரால் அவரது மணி விழா கொண்டாடப்பட்டது. இந்த விழாவில் பம்பாயில் உள்ள எல்லாக் கலை ஸ்தாபனங்களும் கலந்துகொண்டு ஸ்ரீ சுப்பராயர் தம்பதிகளுக்கு மலர் மாலைகளிட்டு வாழ்த்தினர்.

---

இடையே சிறைப்படுத்த என்னால் முடியாதே, டாக்டர்!

"இரண்டு விரல்களுக்கிடையில் அவளுடைய நீண்ட நாசியைப் பிடித்து ஆட்டி அவளுக்குப் பொய்க் கோபத்தை மூட்ட இயலாதே, டாக்டர்!

"இன்பத்தின் எல்லைக்கு நாங்கள் போய்க் கொண்டிருக்கும் போது என்னிடம் அடைக்கலம் புகும் அவளை ஆதரவாக அணைத்துத் தழுவ எனக்குப் பாழாய்ப் போன இரண்டு கரங்களும் இல்லையே, டாக்டர்! டாக்டர்! ஒவ்வொரு கணமும் இந்தச் சிந்தனைகளால் நான் துன்புறுத்தப்படுகிறேன் டாக்டர்! அவளை எப்படி என் அருகே அனுமதிக்க முடியும், டாக்டர்! உயிரோடு என்னைக் கொல்வதைவிட நீங்கள் என்னைச் சாகும்படியே விட்டிருக்கலாமே, டாக்டர்!"

அலை அலையாகத் தோன்றிய விம்மல்கள், ஆறாகப் பெருக்கெடுத்த கண்ணீர் ஆகியவற்றுக்கிடையே உணர்ச்சிகள் கதறலாக வெளிப்பட்டன.

"கதிர்வேலு! நீ படும் துயரத்தை உணர்ந்து கொண்டேன். தவிர்க்க முடியாத துன்பந்தான். அந்தத் துன்பத்தை உன்னால் தனியாகத் தாங்க முடியாது. நிர்மலாவையும் உன்னுடன் சேர்த்துக் கொள். துன்பத்தை உன்னுடன் பகிர்ந்து கொள்வாள். உனக்குத் தொண்டு புரிவதிலே ஆனந்த மடைவாள். நாளடைவில் இருவருமே மன அமைதி பெறுவீர்கள். பிரிந்திருப்பதால் இப்போதுள்ள துன்பம் அதிகமாகுமே தவிர, குறையாது" என்று புத்திமதி சொன்னான் நடராஜன், கண்களிலிருந்து கண்ணீரைத் துடைத்தபடியே.

எழுந்து சென்று நிர்மலாவை அழைத்து வந்தான். "கதிர்வேலுவின் கட்டை மாற்ற வேண்டும், நிர்மலா!" என்று கூறினான்.

சின்னஞ் சிறு குழந்தை பொம்மையை வைத்துக் கொண்டு தலைவாரி, சொக்காய் போட்டு, அலங்கரித்து, உணவு ஊட்டித் தொட்டிலில் இட்டுத் தூங்கப் பண்ணுவதுபோல் ஒவ்வொரு காரியமாகக் கவனிக்க ஆரம்பித்தாள் நிர்மலா. கதிர்வேலு பொம்மையைப் போலவே சொன்னபடி கேட்டான்!

** ** **

ஒரு மாதத்துக்குப் பிறகு திருநீர்மலையில் அவர்களுடைய விவாகம் நடந்தேறியது. கெட்டிமேளம் முழங்க, சந்நிதியில் முகூர்த்தம் சிறிய அளவிலே நிறைந்த மனத்துடன் நடந்தது. காதலர்கள் தோளோடு தோள் இணைய நின்றார்கள். நிர்மலா தானாகவே திருமாங்கல்யத்தை மார்பில் அணிந்து கொண்டு கண்களில் ஒற்றிக் கொண்டாள். அர்ச்சகர் கொண்டு வந்த தீபாராதனையைத் தானும் ஒற்றிக் கொண்டு கணவனுக்கும் ஒற்றி விட்டாள்.

ஆனந்தக் கண்ணீர் துளிக்க நின்ற சுகுமாரனும், மல்லிகாவும், நடராஜனும், விமலாவும், மணியும், நிர்மலாவின் தாயார் நாகம்மாளும் அவர்களுடைய இல்லறம் சந்நிதியில் எரிந்த தீபங்களைப் போலவே சுடர் விட்டுப் பிரகாசிக்கப் பிரார்த்தித்தார்கள்.

* ** **

மலையடிவாரத்தில் கதிர்வேலனுக்காகப் போலீஸார் காத்திருந்தார்கள்.

"கதிர்வேலனுடைய டாக்டர் என்ற முறையில் இத்தனை நாட்களாக இவர்களைத் தடுத்து நிறுத்தியிருந்தேன், நிர்மலா! கதிர்வேலன் குணமடைந்து விட்டான். இனி என்னால் ஆகக் கூடியது ஒன்றுமில்லை" என்றான் நடராஜன்.

இன்ஸ்பெக்டர் விலங்கை எடுத்தார்.

"வேண்டாம்; இன்ஸ்பெக்டர் ஸார்! வேண்டாம்! விலங்குவேண்டாம். தோள்களில் அணைத்து ஆதரவாக அழைத்துச் செல்லுங்கள். ஆட்டுக்குட்டி போல் அடக்கமாக வருவார். தொந்தரவு கொடுக்கமாட்டார்" என்றாள் நிர்மலா.

"சீக்கிரமாக உன்னிடம் திரும்பி வந்து விடுவேன், நிர்மலா! வருத்தப் படாதே" என்றான் கதிர்வேலன்.

சோகப் புன்னகையுடன் விடை கொடுத்து அனுப்பினாள் நிர்மலா. 'தொண்டின் சிகரம் அவள்' என்ற எண்ணம் சுற்றியிருந்த அனைவரது மனத்திலும் மேலோங்கி இருந்தது.

---

**இரண்டாம் பாகம் 'தொண்டின் சிகரம்' முற்றிற்று.**

---



# கல்கத்தா தமிழ் எழுத்தாளர் மாநாடு

கல்கத்தா தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் முதலாவது ஆண்டு விழாவும், அகில இந்திய தமிழ் எழுத்தாளர் மாநாடும் கடந்த 2-10-58 முதல் 5-10-58 முடிய நான்கு தினங்கள் கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத் திறந்த வெளியில் அமைக்கப்பட்ட அலங்காரப் பந்தலில் மிகச் சிறப்பாக நடந்தன.

இரண்டாம் தேதி மாலை வரவேற்புக் குழுத் தலைவர் ஸ்ரீ டி. எஸ். சேனாபதி அனைவரையும் வரவேற்க, கல்கத்தா சர்வகலாசாலை துணை வேந்தர் டாக்டர் நிர்மல்குமார் சித்தாந்தா மாநாட்டைத் துவக்கி வைத்தார். தமிழ் எழுத்தாளர் திரு ந. சிதம்பர சுப்பிரமணியம் மாநாட்டிற்குத் தலைமை தாங்கினர். சென்னை தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவர் திரு வெ. சாமிநாத சர்மா மாநாட்டில் அறிவுரை நிகழ்த்தினர்.

தமிழுக்குச் சிறந்த முறையில் சேவை செய்து வரும் வங்க முதுபெரும் எழுத்தாளர் டாக்டர் சுனிதிகுமார் சாட்டர்ஜி [நன்னெறிய முருகன்] அவர்களுக்கு மதுரை கருமுத்து தியாகராச செட்டியார் வழங்கிய வெள்ளிக் கேடயமும், சரத்சந்திர சாட்டர்ஜியின் தாய்மாமனை திரு உபேந்திரநாத காங்குலி, ஸ்ரீமதி ராதாராணி தேவி ஆகியோர்களுக்கு வெள்ளிக் குத்து விளக்குகளும், திரு ஜோதிஷ் சந்திரகோஷ் அவர்களுக்குச் சால்வையும் அன்பளிப்பாகத் திரு எஸ். டி. ஸ்ரீநிவாஸன் அளித்தார். பின்னர் கல்கத்தா நகர ஷெரீப் ஸ்ரீ எஸ். வி. ராய் மாநாட்டுத் தலைவர் திரு ந. சிதம்பர சுப்பிரமணியம், தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவர் திரு வெ. சாமிநாத சர்மா ஆகியோருக்குச் சால்வை போர்த்திக் கௌரவித்தார்.

மூன்றாம் தேதி நிகழ்ச்சியில் ''சமுதாய முன்னேற்றத்தில் எழுத்தாளன் பங்கு'' என்னும் உரைக்கோவையில் இருவாளர்கள் கி. ரா. நீலமேகம், மாயாவி, நா. பார்த்தசாரதி, பாரதீயன், அ. வெ. ர. கிருஷ்ணசாமி ரெட்டியார், கே. எஸ். ஜம்புநாதன், சம்பு குமாரன், நா. ஞானசம்பந்தன் ஆகியோர் பேசினர்.

''தற்கால இலக்கியம்'' என்ற உரைக் கோவையைத் திரு சௌமேந்திரநாத் தாகூர் நான்காம் தேதி துவக்கி வைத்தார். இந்த நிகழ்ச்சியில் தற்கால வங்க இலக்கியம் பற்றிப் பேராசிரியர் நரேஷ் குஹா அவர்களும், தற்காலக் குஜராத்தி இலக்கியம் பற்றிப் பிரபல எழுத்தாளர் சிவகுமார் ஜோஷி அவர்களும் பேசினர்கள். தற்காலத் தமிழ் இலக்கியம் பற்றித் திரு க. நா. சுப்பிரமணியம் அவர்களின் பேச்சு படிக்கப்பட்டது.

அன்றைய நிகழ்ச்சிகளில் டெல்லி பாராளுமன்ற சபாநாயகர் திரு அனந்தசயனம் அய்யங்கார் அவர்கள் கலந்து கொண்டு அறிவுரை நிகழ்த்தினர். பின்னர் திருவாரூர் துரைசாமி பாகவதர் கோஷ்டியாரின் இன்னிசை நிகழ்ச்சி நடைபெற்றது.

ஐந்தாம் தேதி நிகழ்ச்சிகளில், அகில இந்திய தமிழ் எழுத்தாளர் சம்மேளனத்தை இவ்வாண்டு இறுதிக்குள் அமைத்து செயல்பட ஆவன செய்யும்படி சென்னை தமிழ் எழுத்தாளர் சங்கத்தை வேண்டிக்கொண்டு ஓர் தீர்மானமும், பண்டைக்கு ஒவ்வாத ஆபாசப் படங்களையும் ஆபாச எழுத்துக்களையும் கொண்டு மறுமலர்ச்சி இலக்கியத்தின் கண்ணியத்தைக் குலைக்க முயல்வதை அனைவரும் தடுக்கவும், கண்டிக்கவும் முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டுமென்ற ஒரு தீர்மானமும் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டன. பின்னர் சாண்டோ டி. எஸ். எஸ். மணி அவர்களுடைய உடற்பயிற்சியும் களம்பூர் ராமஸ்வாமியின் 'பிராயச்சித்தமா' நாடகமும் நடைபெற்றன. முடிவில் பொதுச் செயலாளர் திரு ப. ந. தியாகராஜன் நன்றி கூற மாநாடு முடிந்தது. மாநாடு மூலம் வங்கத்துக்கும் தமிழகத்துக்கும் உள்ள தொடர்பு உறுதிப்பட்டது.

# கருடதரிசனம்!







**எஸ். வைத்தியநாதன்**

"ஏய், கோதை!" என்றார் மணவாளன் கடுமையான தொனியுடன்.

"என்ன சமாசாரம்! விச்வரூபம் எடுத்திருக்கிறாற்போலிருக்கே!" என்றாள் கோதை.

"ஆமாம், விச்வரூபந்தான். நானும் எவ்வளவோ பொறுமையாக இருந்து விட்டேன். சாந்தத்தைக் கடைப்பிடித்தால் காரியம் நடக்காது. ஆமாம்! உன் அருமைத் திருக்குமாரனிடம் கண்டித்துச் சொல்லி விடு!"

"சரி, அப்படியே!" என்று உள்ளே திரும்பினாள் கோதை.

"ஏய்! 'சரி' என்று உள்ளே போகிறாயே! விஷயம் என்னவென்று தெரிந்து கொண்டாயா?" என்று கேட்டார் மணவாளன்.

"தெரியாமல் என்ன! நீங்கள் சாந்தத்தைக் கடைப்பிடித்தால் காரியம் நடக்காது என்று உணர்ந்து கொண்டு விச்வரூபம் எடுத்திருக்கிறீர்கள். அதை ரங்குவிடம் சொல்ல வேண்டும். விச்வரூப தரிசனத்தைக் காண அவனை அழைக்க வேண்டும்!" என்றாள் கோதை.

"போதும், சமர்த்து வழிகிறது! ரங்குவின் கல்யாண விஷயமாக நான் சொன்னால் நீ ஒன்றும் புரிந்து கொள்ளாமல் வாயில் வந்தபடி என்ன என்னவோ உளறுகிறாயே!"

"கல்யாண விஷயமா! அவன்தான் அந்தப் பேச்சை எடுத்தாலே காதைப் பொத்திக் கொள்கிறானே!"

"அதற்குத்தான் நான் கண்டிப்பாக இருக்கப் போவதாகச் சொன்னேன். எத்தனை நாட்கள் தான் அவன் பிரும்மச்சாரியாக நிற்பது? வயசாகவில்லையா? இந்த வருஷம் எப்படியும் அவனுக்குக் கல்யாணம் செய்து விடவேண்டும் என்று தீர்மானித்து விட்டேன். மன்னார்குடியிலிருந்து வக்கீல் பெண் ஒருத்தியின் ஜாதகம் வந்திருக்கிறது. ரங்குவின் ஜாதகத்தோடு நன்றாகப் பொருந்துகிறது அது. அது நல்ல இடம் என்றும் தெரிகிறது. அதை முடித்து விடலாம் என்று பார்க்கிறேன். ரங்குவிடம் விஷயத்தைச் சொல்லிப் பெண் பார்க்கப் போகணும் என்று சொல்லு!" என்று கூறி விட்டு மணவாளன் வெளியே போய்விட்டார்.

அவர் சொன்னபடியே அவள் ரங்குவிடம் கல்யாணப் பேச்சை எடுத்தாள்.

ரங்கு வழக்கமான 'இப்போது கல்யாணத்துக்கு அவசரமில்லே' என்ற பல்லவியைத் தான் பாடினான். கோதை கல்லும் கரையும் வண்ணம் அவனை வேண்டிக் கொண்டும் அவன் அசைந்து கொடுக்கவில்லை. அப்பா உன் விஷயத்தில் ரொம்பக் கோபமாக இருக்கிறார் என்று பயமுறுத்தியும் பலனளிக்கவில்லை.

கோதைக்குக் கண்ணீர் வந்து விட்டது. "குழந்தை! விபரீதத்துக்கு வழிகோலாதேடா! இத்தனை நாட்களாக நீ சொன்னதுக்கு நாங்கள் ஆட்சேபித்தோமா! எத்தனை நாட்களுக்குத்தான் நீ கல்யாணம் பண்ணிக் கொள்ளாமல் இருப்பது? உனக்கு வயசாகவில்லையா? எத்தனை நாட்களுக்குத் தான் நான் இந்தக் குடும்பத்துக்கு ஓடாக உழைப்பது?



மருமகள் வந்தால் அவளிடம் பொறுப்பை ஒப்படைத்து விட்டுக் கொஞ்சம் ஓய்வெடுத்துக் கொள்ளலாம் என்று எனக்கு ஆசை. அதை நிறைவேற்ற மாட்டாயாடா நீ? உங்கப்பா வேறு உனக்கு இந்த வருஷம் கல்யாணம் பண்ணியே ஆக வேண்டும் என்று உறுதியாயிருக்கிறார். இந்தத் தடவையும் நீ சால்ஜாப்பு சொன்னால் அவர் துர்வாஸராகி விடுவார்.'' படிப் படியாகக் கண்ணீரைக் கொட்டி, மூக்கைச் சிந்திப் போட்டுக் கேவி, விக்கி, விம்மி ஒரே ரகளை செய்து விட்டாள்!

ரங்கு அவளைப் பெரும் பிரயத்தனப்பட்டுச் சமாதானப்படுத்தினான். ''அம்மா! இதற்காக ஏன் இவ்வளவு வருத்தப் படுகிறாய்? நான் கல்யாணம் பண்ணிக் கொள்கிறேன், உன் இஷ்டப்படியே! ஆனால் ஒரு நிபந்தனை!''

கோதை களிக் கூத்தாடினாள். ''அப்பா, குழந்தை! என் வயிற்றில் பாலை வார்த்தாயே! 'கல்யாணம் பண்ணிக் கொள்கிறேன்' என்று உன் வாயிலிருந்து வந்ததே! அதுவே போதும்! நீ எது சொன்னாலும் கேட்கத் தயார் நான்!''

''அம்மா! வெளிப்படையாகச் சொல்லி விடுகிறேன். கமலா நகர் எக்ஸ்டென்ஷனில் முதல் வீட்டில் வேங்கடலட்சுமி என்று ஒரு அம்மாள் இருக்கிறாள். அவளுக்கு மனோகரி என்று ஒரு பெண் இருக்கிறாள். அவளை எனக்குக் கல்யாணம் செய்து வைப்பதானால் இன்றைக்கே வேணுமானாலும் செய்து கொள்ளத் தயார்!'' என்றான் ரங்கு.

''ஓகோ! காதல் விவகாரமா! நீ கல்யாணத்தைத் தட்டிக் கழித்த மர்மம் இது தானா!'' என்று தனக்குள் கூறிக் கொண்டே கோதை ''அவர்கள் எப்படிப்பட்டவர்களோ? முன்பின் தெரியாதவர்களிடம்...?'' என்றாள்.

''அவர்களைப்பற்றி அப்புறம் சொல்ல முடியாது. நிறைய சொத்து இருக்கிறது. அந்தப் பெண்ணின் அப்பா டெபுடி கலெக்டராக இருந்தவர். இரண்டு வருஷங்களுக்கு முன்தான் காலமானார். அந்த இடம் நமக்குக் கிடைக்கிறதே என்று நீங்கள் சந்தோஷப் பட வேண்டும்!

''அப்படியானால் சரி; உன் அப்பாவிடம் சொல்கிறேன்!'' என்றாள் கோதை.

★

அவ்வூர் பிரபல 'பாங்க்' ஒன்றில் வேலையாயிருந்தான் ரங்கு. அந்தப் பெண் மனோகரி, பணம் போடவும், வாங்கவும் சில முறைகள் 'பாங்'குக்கு வந்திருக்கிறாள். அப்போதெல்லாம் ரங்கு அவளுக்கு மிகவும் ஒத்தாசை செய்திருக்கிறான். காக்க வைக்காமல் அவள் காரியத்தை முதலில் கவனித்து அனுப்பியிருக்கிறான். அந்தப் பெண்மணிக்கு அவனுடைய இனிய பேச்சையும், பண்புமிக்க நடத்தையையும் கண்டு அவன் மேல் ஒரு அலாதி மதிப்பு ஏற்பட்டது.

ஒருநாள் மாலை அவன் ஆபீஸிலிருந்து திரும்புகையில் மனோகரி இருந்த தெரு வழியாக வர நேர்ந்தது. மனோகரி தன் வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்தாள். அவளைக் கண்ட ரங்கு ''இதுதான் உங்களுடைய வீடா?'' என்று கேட்டான்.

''ஆமாம்! வாருங்களேன்!'' என்று அழைத்தாள் அவள். தன் தாயாருக்கு அவனை அறிமுகம் செய்து வைத்து அவனுடைய குண மேன்மைகளைப் பற்றி அவளிடம் ஒரு அத்தியாயம் புகழ்ந்தாள். வேங்கடலட்சுமி அம்மாளும் சில நிமிஷங்களிலேயே அவனை எடை போட்டு விட்டாள். தன் புத்திரி கூறியது மிகை இல்லை என்று உணர்ந்து கொண்டாள்.

அன்றிலிருந்து அவ்வீட்டுக்கு அடிக்கடி விஜயம் செய்யலானான் ரங்கு. மனோகரி 'பாங்'கிற்கு வரும் சிரமம்கூட இல்லாமல் அவர்கள் காரியத்தைத்தானே கவனித்து வேண்டுவனவற்றைச் செய்யலானான். பணம் கட்டுவதோ, வாங்குவதோ எல்லாம் அவன் மூலமாகவே நடந்தன. வாரத்துக்கு இரு முறைகள் அவர்கள் வீட்டுக்குப் போய் என்ன



ஒத்தாசை தேவை என்று விசாரித்துத் தலைப் பொறுப்பாக அவற்றைச் செய்து வந்தான்.

மனோகரியும் ரங்குவும் பரஸ்பரம் மையல் கொண்டிருக்கிறார்கள் என்பதையும் வேங்கடலக்ஷ்மி உணர்ந்தாள். அவளுக்கும் அவ்விஷயத்தில் மகிழ்ச்சியே.

★

தன் காதல் விவகாரத்தைக் கேட்டுத் தகப்பனார் ஆட்சேபிப்பார், குதியாய்க் குதிப்பார் என்று எண்ணிக் கொண்டிருந்த ரங்குவுக்கு ஒரே ஆனந்தத் திகைப்பு! ''ஏண்டா பயலே! பெரிய பீஷ்மன் மாதிரி 'கல்யாணம் வேண்டாம்' என்று எதற்காகப் புளுகிக் கொண்டிருந்தாய்! 'என் மனத்தைக் கவர்ந்த மனோகரியைப் பண்ணி வையுங்கள்!' என்று முன்னேயே சொல்வதற்கு என்னடா!

போடா! போய் அவர்களிடம் அந்தப் பெண்ணின் ஜாதகத்தைக் கொடுத்தனுப்பச் சொல்லு!'' என்று தடை ஏதும் சொல்லாமல் மணவாளன் கூறிவிட்டார்!

அவன் அன்று மாலையே வேங்கடலக்ஷ்மி அம்மாள் வீட்டுக்குச் சென்று நாளுக்காக மனோகரியின் மூலம் அவள் தாயாருக்கு விஷயத்தை அஞ்சல் செய்தான்.

"மனோகரிக்கு ஜாதகமே கணிக்கவில்லை நாங்கள்! இப்போது கணிக்கலாமென்றாலும் அவள் பிறந்த தேதி ஞாபகமில்லை....ஜாதகமில்லாவிட்டால் என்ன? என்னைப் பொறுத்த வரையில் ஜாதகம் பார்க்க வேண்டிய அவசியமில்லை. மனப் பொருத்தம் பூர்ணமாக இருக்கும்போது இந்த அநாவசியச் சம்பிரதாயங்களெல்லாம் எதற்கு?'' என்று கேட்டாள் வேங்கடலக்ஷ்மி.

விஷயத்தைத் தகப்பனாரிடம் தெரிவித்தான் ரங்கு. "ஜாதகம் கிடையாதா? அப்படியானால் அந்தப் பெண் நமக்கு வேண்டாம்!'' என்றார் மணவாளன்.

திடுக்கிட்டு ரங்கு "மனப் பொருத்தம் போதுமென்கிறாள் அந்த அம்மாள்!'' என்றான்.

"ஜாதகப் பொருத்தம் பார்க்காமல் கல்யாணம் செய்வதா? ஒருநாளும் அந்தப் பாதகத்தை நான் செய்ய மாட்டேன்! அந்தப் பெண்ணின் ஜாதகத்தில் ஏதாவது கடுமையான தோஷம் இருக்கும்! அவளைக் கல்யாணம் செய்துகொள்ளுகிறவனுக்கு ஆபத்தை விளைவிக்கக் கூடிய தோஷமாக இருக்கும் அது! அதனால்தான் ஜாதகத்தை மறைத்து, 'இல்லை' என்று புளுகி நம் கழுத்தில் கட்டப் பார்க்கிறார்கள். வேண்டாம், வேண்டவே வேண்டாம்!'' என்றார் மணவாளன்.

அதைக் கேட்ட ரங்குவுக்கு அழுகை வந்து விடும் போல் இருந்தது.

"அன்றொரு நாள் ரேகை ஜோஸ்யன் ஒருவன் என் கையைப் பார்த்து விட்டு ஜாதகம் இல்லாத பெண் ஒருத்திதான் என் மனைவியாக வருவாள் என்று சொல்லியிருக்கிறான், அப்பா!'' என்று சமயோசிதமான புளுகு ஒன்றைக் கூறிப் பார்த்தான்!

"எந்த ரேகை சாஸ்திரி அப்படிக் கூறினான்? அந்த முட்டாளை இங்கே அழைத்து வா! சரியான மண்டகப்படி நடத்துகிறேன். ரேகையிலிருந்து உனக்கு வரும் பெண்ணுக்கு ஜாதகம் இருக்காது என்பதைக் கண்டுபிடித்து விட்டானாமோ அந்த மேதாவி! அந்தப் பெண்ணுடைய ஜாதகத்தைப் பார்த்து விட்டு அவனுக்கு ஜாதகம் இருக்காது என்று கூறினாலும் நம்பலாம்!''

"அவளுக்கு ஜாதகம் இல்லாதபோது ஜாதகத்தை எப்படியப்பா பார்க்க முடியும்?''

"ஏய்! வீண் தர்க்கமெல்லாம் பண்ணாதே!''

"ஜாதகம் இல்லாத பெண் என் மருமகளாக வர முடியாது! இது தான் அது விஷயமாக என் கடைசி வார்த்தை!'' என்று முற்றுப்புள்ளி வைத்து விட்டார் தந்தை.

ரங்குவுக்கு உலகமே சுழன்று விட்டது.

**ம**றுநாள் வியாழக்கிழமை. மாலை ஐந்தரை மணி சுமாருக்கு மணவாளன் கைத்

தடி சகிதம் கருட தரிசனத்துக்காகப் புறப்பட்டார். வியாழக்கிழமை பிறக்காதிருக்கலாம். அந்தக் கிழமையின் மாலையும் வராதிருக்கலாம். ஆனால் மணவாளன் வியாழன் மாலை கருட தரிசனம் செய்யாமலிருந்தார் என்பது மட்டும் கிடையவே கிடையாது!

அவ்வூர் ஆற்றுப் பாலத்தின் அருகில் தான் கருடன் அவருக்குச் சேவை சாதிப்பது வழக்கம். அன்றும் அவர் வழக்கம்போல் பாலத்தை நோக்கிச் சென்றார். கருட பகவான் எங்கிருக்கிறார் என்று தலையை நிமிர்த்தி ஆராய்ந்து கொண்டே சென்ற மணவாளனது கண்களில் பாலத்தின் மத்தியில் இருந்த மின்சாரக் கம்பம் ஒன்றின் மீது அமர்ந்தபடி கருடாழ்வார் காட்சியளித்தார். பாலத்தின் வெளிப்புறத்தில் ஜனங்கள் நடப்பதற்காகக் கட்டப்பட்டிருந்த நடைபாதையில் அந்த மின்சாரக் கம்பத்தின் அருகில் போய் நின்றவாறு, கருடன் அந்தக் கம்பத்தை விட்டுக் கிளம்புவதை மணவாளன் எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தார். கருடன் உட்கார்ந்திருக்கும்போது தரிசித்தால் பலன் கிடையாதல்லவா? அது பறக்கும்போது தரிசித்தால் தானே புண்ணியம்?

கருடாழ்வார் அன்று மணவாளனின் பொறுமையை வெகுவாகச் சோதித்து விட்டார். கோந்து வைத்து ஒட்டினாற்போல் மின்சாரக் கம்பத்தில் உட்கார்ந்துகொண்டு இம்மி கூட அசைய மறுத்து விட்டார். அரை மணி ஆயிற்று. முக்கால் மணி ஆயிற்று; மணவாளனின் கால்களும் கடுக்கத் தொடங்கியது. கருடன் மனம் இரங்கவில்லை.

என்ன செய்வதென்று அவருக்குப் புரியவில்லை. சிந்தனையில் ஆழ்ந்தார். கருடனைப் பலவந்தமாகப் பறக்கச் செய்வது என்ற தீர்மானத்துக்கு வந்தார். கருடன் தானாகப் பறந்தால் அல்லவா தரிசன பலன் கிட்டும் என்ற எண்ணமும் அவருள் எழாமல் இல்லை. என்றாலும் நெருக்கடியான நிலைமையில் என்ன செய்வது? ஆபத்துக்குத் தோஷமில்லை. தரிசனம் கிடைக்காமலே போவதைவிட, அரைப்பலனோ, கால்பலனோ, ஏதோ கிடைப்பது மேல் என்று முடிவு செய்து விட்டார் மணவாளன்.

முடிவைச் செயலாக்கும் முயற்சியில் 'ஓஸ்' என்று சப்தமிட்டபடி அவர் தமது 'வாக்கிங் ஸ்டிக்'கைச் சுழற்றி உயர்த்தினார். கருடாழ்வாரை விரட்டுவதற்காக மேலே கிளம்பிய அந்தத் தடி அவர் பிடியிலிருந்து நழுவிப் பாலத்தின் வழியே ரிக்ஷாவில் போய்க் கொண்டிருந்த ஒரு அம்மாளின்மேல் போய்ப் பொத்தென்று விழுந்தது!

ரிக்ஷா நின்றது! மணவாளன் வெலவெலத்து நின்றார்! அவர் உடல் நடுங்கியது. வாய் குழறியது. பற்கள் தந்தியடித்தன.

அந்த அம்மாள் அவரை நோக்கி "உமக்குப் பைத்தியமா, ஐயா! எதற்காகக் கழியை என்மேல் விட்டெறிந்தீர்?" என்று கேட்பது போல் விழித்துப் பார்த்தாள்.

ரிக்ஷாக்காரன் வேறு "இந்த அம்மாவின் மேல் உனக்கு என்ன ஐயா ஆத்திரம்! எதற்காகத் தடியால் அடிச்சே!" என்றான்.

"ஒன்றுமில்லே...சும்மா மிரட்டறத்துக்காக!" என்று உளறிக் கொட்டினார் மணவாளன்! 'கருடனை மிரட்டறத்துக்காக' என்று சொல்ல வரவில்லே அவருக்கு.

"மிரட்டறத்துக்காகவா? நான் என்ன அவருக்குத் தீங்கு பண்ணினேன்? அவர் யார் என்பதே எனக்குத் தெரியாதே!" என்று எண்ணமிட்ட வேங்கடலக்ஷ்மி அம்மாள் — ஆம், ரிக்ஷாவில் இருந்தது அவள்தான் — அவரைப் பைத்தியமென்று முடிவு செய்து கொண்டாள். அவரை ஒரு முறை கடுமையாக நோக்கி விட்டு "விடுடா வண்டியை!" என்று ரிக்ஷாக்காரனுக்கு உத்தர விட்டாள். ரிக்ஷா கிளம்பிவிட்டது.

இந்தக் காட்சி நடந்து கொண்டிருந்த அதே சமயத்தில் எதிர்ப்புற நடைபாதையில் போய்க்கொண்டிருந்த ரங்கு சற்றுத் தள்ளி நின்றவாறு எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டான். அவன் மூளையில் பளிச்சென்று ஒரு அபூர்வமான யோசனை தோன்றியது. உவகை பொங்கும் உள்ளத்துடன் ராஜநடை போட்டுக் கொண்டு அங்கிருந்து கிளம்பிப் போய் விட்டான்.

திக்பிரமையுடன் அவ்விடத்திலேயே வெகு நேரம் நின்ற மணவாளன் கடைசியில் ஒருவாறு சமாளித்துக் கொண்டு வீட்டுக்குக் கிளம்பினார். நடந்த கலாட்டாவில் கருடன் பறந்து போய்விட்டதைக் கூட அவர் கவனிக்கவில்லே. அதற்காக அவர் ஆயாசப்படவுமில்லே; வருத்தப்படவுமில்லே.

வீட்டுக்குள் போய்ச் சாய்வு நாற்காலியில் சாய்ந்தவாறு அன்றைய மாலே நடந்த துரதிர்ஷ்டவசமான சம்பவத்தைப் பற்றியே சிந்தித்தவராய் மனத்துன்பம் அனுபவித்துக் கொண்டிருந்தார். ரங்குவின் "அப்பா!" என்ற குரல் அவர் சிந்தனையைக் கலேத்தது.

"என்னடா?" என்றார்.

"என்ன அப்பா, இப்படிப்பட்ட காரியம் பண்ணி விட்டீர்களே! அந்த அம்மாள் மாஜிஸ்திரேட் கோர்ட்டில் பிராது பண்ணப் போகிறேன் என்று குதிக்கிறுளே!"

"யாருடா! எதற்காக?" என்று குழறினார் மணவாளன்.

"அந்த வேங்கடலக்ஷ்மி அம்மாள்தான் அப்பா! நீங்கள் அவளேத் தடியால் அடித்து விட்டீர்களாமே!"

"அவன் தான் வேங்கடலக்ஷ்மியா!...... அவளே நான் எதற்குடா அடிக்கிறேன்? மின்சாரக் கம்பத்தில் உட்கார்ந்திருந்த கருடனை விரட்டுகிறதற்காகக் கம்பை ஓங்கினேன். அது கையிலிருந்து நழுவி ரிக்ஷாவில் போய்க் கொண்டிருந்த அவள்மேல் போய் விழுந்து விட்டது! இதற்காக அவள் வழக்கு தொடுக்கிறேன் என்கிறுளா?" என்று பதறினார் மணவாளன்.

'கருடனை விரட்டுகிறதற்காக நீங்கள் அப்படிச் செய்தீர்கள் என்பதை அவள் ஒத்துக் கொள்ள மாட்டாள் அப்பா! 'உன்னே மிரட்டறதுக்காகத்தான் கழியை எறிந்தேன்' என்று வேறு சொன்னீர்களாமே! ஏற்கெனவே அவள் பெண்ணைக் கல்யாணம் செய்துகொள்ள மறுத்துவிட்டதற்காக அவளுக்கு ரொம்பக் கோபம்; நம்பவைத்து ஏமாற்றி விட்டோம் என்று வருத்தம். இப்போ நீங்கள் செய்த காரியம் வேறு அவள் கோபத்துக்குத் தூபம் போட்டுவிட்டது. உங்களே மீறி அந்த மனோகரிக்கும் எனக்கும் கல்யாணம் நடந்துவிடப் போகிறதே என்று கருதி நீங்கள் இந்தமாதிரி அந்த அம்மாளே மிரட்டினீர்களாம். நான் கூட 'என் அப்பா அப்படியெல்லாம் செய்ய மாட்டார்! வேறு யாராவது இருக்கும்' என்று சொன்னேன். உங்களே அவள் பார்த்திருக்கிறுளாம். நீங்கள்தான் என்று உறுதியாகக் கூறுகிறுள். ரிக்ஷாக்காரனே வேறு சாட்சியாகப் போடப் போகிறுளாம்..."

மணவாளனுக்கு அஸ்தியில் ஜுரம் கண்டு விட்டது. பேசக்கூடச் சக்தியில்லே அவருக்கு. பிள்ளேயைப் பார்த்துப் பரிதாபமாக விழித்தார்!

அவன் கூறினுன்:—'அவள் நடவடிக்கை ஒன்றும் எடுக்காமலிருக்கும்படி செய்ய ஒரே ஒரு வழி இருக்கிறது! ஆனுல் அதற்கு நீங்கள் சம்மதிக்க வேண்டுமே!"

மணவாளன் "என்னடா அது!" என்றார் பரபரப்புடன்.

"அந்த மனோகரியை உங்கள் மருமகளாக ஏற்றுக் கொள்ளச் சம்மதிக்க வேண்டும். ஜாதகம் வேண்டுமென்று வற்புறுத்தக் கூடாது!" என்றுன்.

'ஜாதகமாவது, ஜோஸ்யமாவது! மானம் கப்பலேறுமல் இருந்தால் போதும்' என்றல்லவா அவர் தவித்துத் தத்தளித்துக் கொண்டிருந்தார். எனவே, 'இப்பொழுதே போய் அப் பெண்ணே உனக்குத் திருமணம் செய்து கொள்ள ஆட்சேபணை இல்லே என்று சொல்லி விட்டு வந்து விடுகிறேன்!" என்று எழுந்தார்.

"நீங்கள் போகவேண்டாம் அப்பா! நானே போய் அவளிடம் நாசூக்காகக் கூறிச் சமாதானம் பண்ணுகிறேன். பின்னுல் உங்களே அந்த அம்மாள் சந்திக்க நேரும்போது கூட அதைப் பற்றி ஒன்றுமே காட்டிக் கொள்ளாமல் இருக்கும்படி செய்கிறேன். நீங்களும் அதைப் பற்றி ஒன்றும் அவளிடம் பிரஸ்தாபிக்க வேண்டாம்!" என்று அவரைத் தடுத்து விட்டு ரங்கு உத்சாகத்துடன் வேங்கடலக்ஷ்மி அம்மாளின் வீட்டுக்குக் கிளம்பினுன்!

ரங்கு போய்க் கூறும்வரையில் அவன் தகப்பனுர்தான் அவர் என்பது வேங்கடலட்சுமிக்குத் தெரியாது! அவன் அந்தக் கம்புவீச்சுச் சம்பவத்தைப் பற்றிக் கூறிய விளக்கத்தைக் கேட்டு அவள் ரசித்துச் சிரித்தாள்! தகப்பனுர் முதலில் ஆட்சேபித்ததைப் பற்றி ஒன்றும் கூருமல் மனோகரியை ஜாதகம் இல்லாமலே மருமகளாக ஏற்கச் சம்மதித்து விட்டார் என்பதை மாத்திரம் கூறினுன் ரங்கு.

"அடுத்த மாசம் முதல் வாரத்திலேயே முகூர்த்தம் வைத்து விடலாம்" என்றுள் வேங்கடலட்சுமி.

"அந்தக் கருட தரிசன சம்பவத்தைப் பற்றி அப்பா ரொம்ப வெட்கப் படுகிறார். நீங்கள் அதைப்பற்றி அவரிடம் ஆறுதலுக்காகக்கூட எதுவும் சொல்ல வேண்டாம்!" என்று முன்கூட்டியே அவளேக் கேட்டுக் கொள்வதற்குத் தவறவில்லே ரங்கு!

ஸ்ரீ சக்தி மில்ஸ்

ஸ்ரீ மற்றும் ஸ்ரீமதி........ நகரவாசியை.........



# சக்தி சில்குகளை உபயோகித்து விசேஷ தினங்களை கொண்டாடுங்கள்

# சக்தி சில்குகள்

முதலிய ரகங்கள் கிடைக்கும்.

ஸ்ரீ சக்தி மில்ஸ் லிமிடெட், பம்பாய்

# ராஜவல்லி

வை. சுப்பிரமணியம்

பரந்து பரவியிருந்த அந்த ஆலமரத்தின் கிளைகளிலிருந்தும் பல நூறு விழுதுகள் இறங்கியிருந்தன. அவற்றில் பல விண்ணையும் மண்ணையும் தொட்டுக் கொண்டு, ஒரு சத்திய நிலை கைவரப் பெற்றது போல் உறுதியாக நின்றன; பல விழுதுகள், அழகுக் குமரிகளின் நீண்ட பின்னல்கள் அவர்களது அசைந்த நடைக்குத் தக்கபடி ஆடுவதுபோல் இளங் காற்றில் அசைந்தாடின.

ஆனால், இரண்டு விழுதுகள் மட்டும் வாயு வேகம் மனோவேகமாய் முன்னும் பின்னுமாகத் திசைமாறிப் பறந்து கொண்டிருந்தன.

ஆம்; ராஜவல்லிதான் அப்படி ஆலம் விழுதுகளை ஊஞ்சலாகப் பிணைத்து ஆடி ஆனந்தக் கடலுள் மூழ்கியிருந்தாள்.

ஆலம் விழுதுகளூடே அவள் பார்வை இயற்கையாகச் சென்றது. கணந்தோறும் பார்க்கும் அந்தக் காட்சியை நாள்தோறும் பார்க்கக் கூட அவள் அலுக்க மாட்டாள். கங்கை கொண்ட சோழபுரத்தின் பேரதிசயமான கோயில் கோபுரமும், சோழ மாமன்னனின் அரண்மனைத் தோற்றமும், நந்த வனத்துக் கப்பால் வானளாவும் நெடு மரங்களும் கூடிய ஒரு சேர்க்கைக் காட்சி அவள் ஆழ்ந்து அநுபவிக்கும் ஒரு ஓவியக் காட்சியாய் அவளது மனத்தில் பதிந்து விட்டது.

ராஜவல்லி இன்று இன்னொரு புதிய காட்சியைக் கண்டாள். தான் காண்பதைத் தனக்கே நிச்சயப்படுத்திக் கொள்ளக் கண்ணிமைகளைச் சில 'விநாடிகள் படபடக்கச் செய்து விட்டுக் கூர்ந்து பார்த்தாள்; கண்களைக் கசக்கிக் கொண்டும் பார்த்தாள். ஒரு யானைக் குட்டி தன் துதிக்கையில் ஒரு பெரும் பாறாங் கல்லைக் கவ்விக் கொண்டு முன்னே செல்ல, அதை நடத்தியபடி ஒரு பாகனும், நாலடி தள்ளினாற்போல் ஒரு இளை



ஞனும் வந்து கொண்டிருப்பதைக் கண்டாள் கட்டழகி ராஜவல்லி.

சாலையை விட்டுச் சிறிது ஒதுங்கினாற் போலிருந்தது அவள் விழுது பிடித்து ஆடிய அந்தப் பரந்த ஆலமரம். சாலையில் நடப்பவர்களுக்கு அவள் இருப்பது மேற்போக்கான பார்வையில் தெரியாது. ஊன்றிக் கவனித்தால்தான் தெரியும்.

சாலையில் சென்று கொண்டிருந்த அந்த யானையையும் மனிதர்களையும் கண்டதும் ராஜவல்லி ஆட்டத்தின் வேகத்தைச் சிறிது சிறிதாகக் குறைத்தாள். தரையில் கால்களை அவள் ஊன்றி ஊன்றி வேகத்தைக் குறைத்த அழகு இலக்கிய நயம் பொருந்திய ஒரு பேரழகு; அதை இரண்டு கண்கள் கண்டு அநுபவித்துக் கொண்டேயிருந்தன. சாலையில் யானைக்குப் பின்னால் வந்து கொண்டிருந்த இளைஞனின் கூரிய கண்கள்தாம் அவை இரண்டும். ஆம்; ஆலம் விழுதுகளூடே அவன் பார்வை கூர்ந்து சென்றிருக்க வேண்டும்.

அவன் மரத்தினடியை நெருங்கிவிட்டான்; கால்கள் முன்பிருந்த நிலையில் எட்டி நடை போட மறுத்தன. சுமை தூக்கிச் சென்ற யானையின் நடை வேகம் குறையவில்லை. வெகு தூரம் சென்றபின், பாகன் நிறுத்திய பிறகுதான் யானை நின்றது.

அதே சமயம் அந்த இளைஞன் சாலையினின்றும் இறங்கி ஆலமரத்தின் எல்லைப் பரப்பில் நின்றுவிட்டான். ராஜவல்லியும் விழுதூஞ்சலினின்றும் குதித்துத் தலைகுனிந்து நின்றாள். அவளை ஒரு பார்வையால் முற்றும் ஆராய்ந்து விட்டான் அந்த இளைஞன்.

அவள் முகம் சிவந்தது. அவள் நின்று கொண்டிருந்த இடத்தில் அவளைச் சுற்றிலும் கீழே ஆலம் பழங்கள் சிதறிக் கிடந்தன. அவளது கன்னங்களையும் அந்தப் பழங்களின் செம்மையையும் மாறி மாறிப் பார்த்தான் அவன்.

மறுகணம் அவள் தலைநிமிர்ந்தாள்.

"சாலை அந்தப் பக்கமாகச் செல்கிறது! போகலாம்!" என்று கடுமையாகக் கூறினாள்:

இளைஞனின் பார்வையிலும், புன்னகையிலும் ஒரு கம்பீரம் நிலைகுத்தி நின்றது. "அது தெரியும்" என்று சுருக்கமாகக் கூறினான்.

"தெரிந்தும் இங்கே ஏன் வரவேண்டும்?"

"இந்த ஆலமரத்தடி பொதுவான இடம் என்பதும் தெரியும்."

"தனியாக இருக்கும் ஒரு பெண்ணிடம் வந்து இதென்ன பார்வையும் பேச்சும்?"

"ஆலம் விழுதுகளூடே சாலைக் காட்சியைக் கூர்ந்து நோக்கினால் அதைத் தெரிந்து கொண்டிருக்க மாட்டேன் என்ற எண்ணத்தில் நீங்கள் பேசுகிறாற் போலிருக்கிறது. உண்மையில் 'என்ன பார்க்கிறீர்கள்' என்று உங்களைக் கேட்கத்தான் இங்கே வந்தேன், அம்மணி!"






"இந்தக் கேலிப் பேச்செல்லாம் என்னிடம் வேண்டாம். உங்களை எனக்குத் தெரியாது என்று நினைத்துவிட வேண்டாம். சிற்பி தேவநாதரே! வழியைப் பார்த்துக் கொண்டு போகலாம்!"

'என்னைத் தெரிந்து கொண்டிருக்கிறீர்களா? மகிழ்ச்சி! நான் வழியோடு போனவன்தான். ஏதோ விந்தைப் பொருளை நோக்குவதைப் போல் அந்த விழிகளிடையே உங்களது இரு கண்களும் வேல் நுனிகளைப் போல் நோக்கின. என்னவென்று கேட்டுப் போகத்தான் வந்தேன். சொல்லாவிடில் போகாமல் இங்கேயே தங்கி விடப் போகிறேனு, என்ன?"

"ஒன்றுமில்லை; யானையைக் கொண்டு பெருங் கல்லைத் தூக்கிச் செல்கிறீர்களே, இது நான் சாதாரணமாகக் கண்டிராத ஒரு புதிய காட்சி. ஆலயம் நிர்மாணமாகும் போதும், ஆலயத்தில் திருப்பணிகள் நடைபெறும் போதும்தான் யானைகள் மீதும் எருதுகள் மீதும் கற்கள் ஏற்றிச் செல்வார்கள் என்று பெரியவர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன்...ஆலயம் ஏதாவது எழுப்பப் போகிறீர்களா?..." என்று கேட்டாள் ராஜவல்லி.

"பார்த்தீர்களா? அழகாகப் பேசுகிறீர்கள்; ஆனால், குறும்பாகவும் பேசுகிறீர்கள்! என்னைத் தெரிந்து கொண்டிருப்பதாகக் கூறி, என் பெயரையும் சொல்லி அழைத்த தாங்கள் என்னை இயல்பாகப் பதில் சொல்ல விடவில்லை. போகட்டும்...நான் ஒரு ஆலயம்தான் நிர்மாணிக்கப் போகிறேன்; இது பற்றிய விவரங்களை நாளை இதே இடத்தில் சந்தித்தீர்களானால் கூறுவேன். தங்களுக்கு அக்கறையிருந்தால் நாளை இங்கே சந்திப்போம். நான் வருகிறேன்" என்று தேவநாதன் சாலையை நோக்கிக் காலடி வைத்தான். அவனைக் கண் இமைக்காது பார்த்துக் கொண்டேயிருந்தாள் ராஜவல்லி.

**ம**றுநாள் குறித்த நேரத்தில் ராஜவல்லி அந்த இடத்துக்கு வந்திருந்தாள். அவள் வழக்கமாக நினைத்த பொழுதில் வந்து புழங்கும் பிரதேசம் தான் அது. ஆனால், இன்று அங்கே ஏதோ ஒரு புதுமை பூத்தாற் போலத் தோன்றியது அவளுக்கு.

அந்தப் புதுமையின் பிரதிபிம்பமாகச் சிற்பி தேவநாதனே அதோ வந்து விட்டான்! "அம்மணி!"

"என் பெயர் அதில்லை; இன்னொரு முறை அப்படி என்னை அழைக்காதீர்கள்."

"சரி; கூப்பிடாமலேயே பேசிவிடுகிறேன். என்னைத் தெரியுமென்றீர்களே! உங்களுக்கு எப்படித் தெரியும்? இந்தப் புதிர் என்னை நேற்றிரவு முழுதும் தூங்கவிடாமல் சிந்திக்க வைத்து விட்டது!" என்றான்.

"சொல்லி விட்டால் 'இவ்வளவுதானு' என்றாகிவிடும். சொல்லி விடுகிறேன். கங்கை கொண்ட சோழபுரத்து ஆலய நிர்மாணத்துக்காக மன்னர் சிற்பிகளைச் சிறப்பிக்கவும், பரிசுகள் வழங்கவும் ஒரு விழாவுக்கு ஏற்பாடு செய்திருந்தாரே, அப்போது உங்களை உங்கள் தந்தையுடன் கண்டேன். என்னுடைய தகப்பனுர் உங்கள் தந்தையையும் உங்களையும் பற்றிக் கூறினர்..."

"அது நடைபெற்று இரண்டு ஆண்டுகளுக்கு மேலாகிறதே!"

"ஆமாம்" என்றாள் ராஜவல்லி.

"விழா நிகழ்ச்சி ஒருவர் மனதில் ஆழப் பதிவது சாதாரணமான விஷயம்; தனி மனிதன் நினைவு கூட உங்கள் மனத்தில் தங்கி யிருப்பது ஆச்சரியம்! சரி; நான் இன்று இங்கே கூறுவதாக நேற்று வாக்களித்தேனே. அது: நமது மன்னர் இவ்வூர் ஆலயத்தில் சில புதிய திருப்பணிகள் செய்வதாகத் தீர்மானித் திருக்கிறார். அதற்காக நகரில் இப்போது சிற்பிகள் தேர்வு நடைபெற்றுக் கொண்டிருக் கிறது. நானும் தேர்வில் கலந்துகொள்ள ஒரு சோதனையில் ஈடுபடப் போகிறேன்!" என்றான் தேவநாதன்.

"அப்படியா?...என்ன சோதனை?" என்று கவலைக் குறியுடன் கேட்டாள் ராஜவல்லி.

"சிற்பிகள் தேர்வில் ஒரு சோதனை! ஆலய நிர்மாணத்தில் பங்கு கொண்ட பல ஊர்ச் சிற்பிகளும், தங்களது பல்லாண்டு உழைப்புக் குப் பரிகாரமாக ஓய்வு பெற்றுக் கொள்ள வெளியூர்களுக்குச் சென்று விட்டனர். இந் தத் திருப்பணிகளுக்கு அரசர் இளம் சிற்பி களுக்குச் சந்தர்ப்பம் அளிக்கும்படி அரண் மனை ஸ்தபதியாரிடம் கட்டளை யிட்டிருக் கிறாராம். இளம் சிற்பிகள் திருப்பணி வேலை களுக்குத் தகுதி யுடையவர்களா என்பதை அவர்களே முன்வந்து நிரூபித்துக் காட்ட வேண்டும். அதற்காகச் சிற்ப வல்லுநர்க் குழு ஒன்றைக் கூட்டியிருக்கிறார்கள். கடுமை யான பிரதிக்ஞை எடுத்துக் கொள்ள முன் வருகிற சிற்பிகளையே சோதனைக்கு அந்தக் குழுவினர் எடுத்துக்கொள்ளப் போகின்றனர். நான் ஒரு சிற்பம் வடித்துத் தருவதாகவும், அவர்கள் அங்கீகாரத்துக்கு அந்தச் சிற்பத்தை முன் வைப்பதாகவும் வாக்களித்திருக்கிறேன். அங்கீகாரத்துக்கு என் சிற்பம் ஏற்றதாயிருந் தால் எனக்கு ஆலயத்திருப்பணி வேலைகளில் இடமுண்டு; என் சிற்பம் அங்கீகாரத்துக்குத் தகுதியற்றதாகப் போய்விட்டால் என்..." அதற்குமேல் முடிக்காமல் நிறுத்தினான் தேவநாதன்.

"என்ன? என்ன பிரதிக்ஞை செய்திருக் கிறீர்கள்?" என்று கேட்டாள்.

"இல்லை; அதை நான் இப்போது கூறத் தயாராயில்லை; அதுவும் உங்களிடம்..."

"'உங்கள்,' 'நீங்கள்' என்ன வேண்டிக் கிடக்கிறது? உங்களை விட ஐந்தாறு வயது சிறியவளாயிருப்பேன் நான். உன்னை என் றாலோ நீ என்றாலோ நான் தேய்ந்து போய் விட மாட்டேன்; நானும் என்ன, நீங்கள் செதுக்கும் கல் என்று பார்த்தீர்களா?... உங்கள் சோதனையில் இறங்கிவிட்டீர்களா?"

"இறங்கியாயிற்றென்றே கூறலாம். நேற் றுத்தான் உங்கள் முன்னால் எனது சிற்பத்துக் கான கல்லைத் தேர்ந்தெடுத்துச் சென்றேன். கற்களைச் சுமந்து செல்லும் விஷயத்தில் சிற்பி களுக்கு அரசாங்கம் யானைகள் அனுப்பி உதவு கிறது...நேற்று நீங்கள் கூர்ந்து நோக்கியது யானை கல் சுமந்துசென்ற காட்சியைத்தானு?"

"ஆம்."

"அம்மணி..."

"ச்! வாயை மூடுங்கள்! என்ன அம்மணி வேண்டியிருக்கிறது? என் பெயர் ராஜவல்லி!"

"நீதான் ராஜவல்லியா? நினைத்தேன்! நேற்று நான் உன்னைப் பாதாதிகேசம் பித்துக் கொண்டவனைப்போல் ஆராய்ந்தேனே, என் சிற்பக் கண்கள் இதுகாறும் தேடிக் கொண் டிருந்த ராஜவல்லியின் உருவம் இதுதானோ என்றுதான் அப்படி ஆராய்ந்தேன்!"

"என்னை உங்களுக்குத் தெரியுமா?"

"ராஜவல்லி! உன் அழகைப் பற்றி இந்த ஊரே வியந்து கூறுகிறது. உன்னை முன்பின் பாராத நிலையிலும் உன் உருவைச் சிலையாக வடித்துச் சோதனைக்கு அனுப்புவது என்று தீர்மானித்து, அந்தக் கருத்துடனே கல்லும் பொறுக்கி யெடுத்துச் சென்றபோதுதான், ராஜவல்லி, கும்பிடப்போன தெய்வம்போல் நேற்று உன்னை நான் கண்டேன்!"

"நான் இனி உங்கள் நிழல். எங்கே, எப்போது, எந்த இடத்தில் சந்திக்கச் சொன் னாலும் சித்தமா யிருக்கிறேன்."

மறுநாள் முதல் தேவநாதனின் சிற்பச் சாலையில் சிற்றுளி லயம் பிசகாத இசை இசைத்துக் கொண்டிருந்தது. சிற்றுளி குதித்து விளையாடிய பாறைக்கல் தன் பிறப்பு நிலையி லின்றும் அணு அணுவாய் விடுபட்டு வேறு பிறப்பு எடுத்துக் கொண்டிருந்தது.

ராஜவல்லி அந்தச் சிற்பச் சாலையில் நடு வானத்தின் முழு நிலவுபோல் ஆடாமல் அசையாமல், ஒரு ஆசனத்தின் மீது அமர்ந் திருந்தாள். தேவநாதன் அவள் வடிவத்தின் மென்மை முதல் தலைக்கேசத்தின் சுருண்ட இழைகள் வரை, கவனமாகத் தத்ரூபமாகச் சிலையில் வடித்துக் கொண்டிருந்தான்.

அன்று ராஜவல்லி வழக்கம்போல் சிற்பச் சாலைக்குச் சென்றபோது தேவநாதன் சிலை வடிப்பதில் ஈடுபட்டிருக்கவில்லை.

"சிற்பத்தை முடிக்க வில்லையா?"

"முடிந்தாகி விட்டது."

"நேற்றுவரையில் கண் திறக்காது இருந் ததே சிலை?"

"ராஜவல்லி! உன்னை முதன் முதலில் ஒரு முறை கண்டேனே, அந்த நினைவை வைத்துக் கொண்டே உன் சிலையை என்னால் வடித்து விட முடியும். ஆனாலும் அணுக்கணக்கில் தத்ரூபமாக அமைந்தால் வெற்றி பரிசின் அருகில் போகலாம் என்ற நம்பிக்கையால் உன்னைப் பக்கத்தில் வைத்துக் கொண்டே சிற்பத்தை வடித்தேன். உன் கண்கள் என் கண்களின் உள்ளேயே இருக்கின்றனவே, ராஜவல்லி. சிலையின் கண் திறக்க நான் சிரமப்பட்டிருப்பேனு?"

"சிலையை நான் பார்க்கலாமா?"

"உன்னை நீ பார்த்துக் கொள்வதைத் தடை செய்ய எனக்கு உரிமை ஏது, ராஜவல்லி?"

இருவரும் சிற்பச் சாலைக்குச் சென்றனர். சிலையைக் கண்டாள் ராஜவல்லி. "கண்ணாடி யில் என் பிம்பத்தைப் பார்ப்பது போலிருக் கிறது, தேவநாதரே!"

"தவறு, ராஜவல்லி! அப்படி என் சிலை அமைந்திருந்தால் என்னுடைய பிரதிக்ஞை என்னைக் கொன்று விடும்!"

"ஏன்! என்ன தவறு?"

"கண்ணாடியில் வலப்புறம் இடப்புறமாயும், இடப்புறம் வலப்புறமாயும் தெரியுமே!"

"உண்மைதான், சிற்பப் பெருமானே! தத்ரூபமா யிருக்கிறது சிலை...சரி; இனிமேல் நாளை முதல் எனக்கு இங்கே வேலை இல்லை. சிற்பியாரின் அரும் நேரத்தை..."

''முடியேன், ராஜவல்லி!''

''எப்படி முடிப்பதென்று தெரிய வில்லையே...'' அவள் ஆசைக் கனவு துள்ளிய முகத்துடன் நிமிர்ந்தாள்.

''என் நேரத்தை இன்னொருவருக்குப் பங்கு போட்டுக் கொடுக்கமாட்டாள் என் மனைவி!''

''என்ன! உங்கள் மனைவியா?''

''ஆம்; ஊருக்குச் சென்றிருந்தவள் நாளை வருகிறாள். சிற்ப வேலைகள் பூர்த்தியடையும் வரை ஊருக்குச் சென்று தங்கி வரட்டும் என்று நான்தான் அனுப்பி வைத்தேன்.''

ராஜவல்லியின் இதயம் துடித்தது.

''அட, துரோகி! நம்பிக்கைத் துரோகம் பண்ணிவிட்டாயே! சுயநலம் காரணமாகச் சிற்பம் வடிக்கும் வேலைக்கு என்னைப் பயன்படுத்திக் கொண்டாய்! நீ. வெற்றியடைவதை நான் பார்த்து விடுகிறேன்!'' என்று சீறிக் கொண்டு சென்று விட்டாள் ராஜவல்லி.

குறிப்பிட்ட தினத்தில் சிற்ப வல்லுநர்க் குழுவினர் சிற்பச் சோதனையில் கலந்து கொண்ட இளைஞர்களின் சிற்பச் சாலைகளுக்கும் அங்கங்கே நேரில் சென்று பரிசீலனை செய்து கொண்டு வந்தனர்.

தேவநாதனின் சிற்பச்சாலைக்கு அவர்கள் வந்ததும், தேவநாதன். பணிவுடன் அவர்களைச் சிற்பச்சாலைக்கு அழைத்துச் சென்றான்.

சிலையை மூடியிருந்த திரையை விலக்கினான் தேவநாதன். என்ன விந்தை! சிலை மூளியாகிக் காட்சி தந்தது. அந்தச் சிலைக் கன்னியின் தலை வகிட்டில் மேல் நெற்றியில் இருந்த அணியின் முத்துக்களில் சில உடைந்து கீழே விழுந்திருந்தன. அதையும் விட விந்தை, அந்த இடத்தில் குருதி பெருகியிருந்தது!

தேவநாதன் வாயடைத்து நின்றான்.

''உன் சிற்பம் உயிருள்ள சிற்பம், தேவநாதா! உனக்கு வெற்றி நிச்சயம்!'' என்றார் ஒரு முதுமைச் சிற்பி.

''என்னைச் சொல்லால் குத்தாதீர்கள். பெரியோர்களே! நான் என் உயிரைப் பணயமாக வைத்துப் பணி புரிந்தது உண்மைதான்; ஆனாலும், ஏதோ தவறு நேர்ந்திருக்கிறது! என் தோல்வியை ஒப்புக்கொண்டு என் பிரதிக்ஞைப்படி அரசவைக்கு முன் நானே எனக்குத் தண்டனை செலுத்திக் கொள்கிறேன்.''

''இல்லை, சிற்பியாரே! சிற்பத்தின் பூரணத்துவத்தை உணரமுடிகிறது. பின்னம் ஏற்பட்டிருப்பது உங்கள் திறமைக் குறைவினால் அல்ல என்றும் தெரிகிறது. எனவே, அரசவையில் தண்டனைக்குப் பதில் விருது பெற உரியவர் நீர்!'' என்றார் மற்றொரு வல்லுநர்.

அங்கே அச்சமயம் ஒரு இடி குரல் கேட்டது.

''வெற்றியா அது! மூளியான சிலை செய்தவருக்குச் சன்மானமா? என்னை வஞ்சித்து, இந்தச் சிலையைச் செய்து வெற்றியடையலாம் என்று கருதிய இவரை நானும் வஞ்சிக்க எண்ணினேன். எந்தச் சிலை உருப்பெற என் மதி மயங்கியிருந்தேனோ, அந்தச் சிலை குலையவும் என் மதி கலங்கவும் இந்தச் சிலையின் மீதே முட்டி, சிலையையும் பின்னமடையச் செய்து எனக்கும் தெளிவுவர வழி செய்தேன். நீங்கள் எல்லாம் கூடி இவருக்கு வெற்றி விருது வழங்குகிறீர்கள்!''

திரும்பிய சிற்பக் கலைஞர்கள் திகைத்தனர்.

''இந்த ராஜவல்லி என் லட்சியக் கன்னியாக விளங்கினாள். அவளைச் சந்திக்க வெகு நாட்கள் தவங்கிடந்த பிறகு ஒரு நாள் சந்தித்தேன். அந்தச் சந்திப்பில் இரண்டு லட்சியங்கள் என்னுள் எழுந்து போராடின. சிற்பச் சோதனைக்கு இவள் உருவத்தையே சிலையாகச் செதுக்குவது என்பது ஒன்று; வாழ்க்கையில் இவளை என் உள்ளத்தில் சிற்பமாய் வடித்து விடுவது என்பது மற்றொன்று. ஆனால் என் முதல் லட்சியத்தின் வெற்றியைப் பொறுத்திருக்கிறது இரண்டாவது லட்சியம். ஆகவே, அவளிடம் என் பிரதிக்ஞை பற்றிக் கூடக் கூறவில்லை. இதோ, என் தோல்விக்காக என் பிரதிக்ஞைப்படி எனது வலது கரத்தைத் துண்டித்துக் கொண்டுவிடப் போகிறேன். சிற்பம் வெற்றிகரமாக அமைந்து விட்டது என்று என் உள்ளத்திலும் ராஜவல்லியின் உள்ளத்திலும் மகிழ்ச்சிதான். ஆனாலும், சிற்பக் குழுவின் தீர்ப்பு பட்டவர்த்தனமாகி நவரை வெற்றியை எப்படி எதிர்பார்க்க முடியும்? ''இந்தப் பேரழகியின் வாழ்வு ஒரு கரம் இழந்த துரதிருஷ்டசாலியின் வாழ்வுடன் இணையக் கூடாது என்ற நல்ல எண்ணத்தினால்தான் 'நான் மணமானவன்' என்று அவளிடம் ஒரு பொய்யைக் கூறினேன். சிற்பம் பூர்த்தியடையுமட்டும் இப்படிச் சொல்லாதது ஒரு விதத்தில் சுயநலம்தான் காரணம்; ஆனாலும், அவளுடைய சுயநலம் காரணமாகவே, தோல்வியையும் எதிர்பார்க்கும் மனப்பான்மையில் இப்படிப் பொய் கூறினேன். அவள் நெஞ்சைப் புண்ணாக்கியது பற்றி அவளிடம் உங்கள் முன்னிலையில் மன்னிப்புக் கோருகிறேன்!'' என்றான் தேவநாதன்.

''தேவநாதா! உன் இரண்டு இலட்சியங்களும் நிறைவேறி விட்டன. நீ ராஜவல்லியின் துணை கொண்டு சிற்பம் மட்டும் செதுக்கினாய்! ஆனால், அவளோ தன் உயிரைச் சிற்பத்துக்கு ஊட்டி விட்டாள். அப்பனே! அந்தக் குருதி வழியும் நெற்றிகள் இரண்டையும் பார்! அந்த இடங்களிலே கூட என்ன ஒற்றுமை, பார்! சினத்தோடு சிலையின்மீது முட்டிக் கொண்டாலும், தேவநாதனுக்குத் தோல்வி ஏற்பட மனம் துடித்து மோதிக் கொண்டாலும் ராஜவல்லி தன்னையறியாமல் அந்தச் சிற்பத்துக்கு உயிர் ஊட்டி விட்டாள். சிற்பம் வடித்து முடித்தபின் நீ திருஷ்டிப் பரிகாரத்துக்காக இட வேண்டிய ஒரு சிறு கீறலை அவள் இட்டுவிட்டாள்! உங்கள் இருவருக்கும் மங்களம் ஏற்பட எங்கள் ஆசிகள்! உன் வெற்றிக்கு விருதையும், திருமணத்துக்கு அரச சமூகத்தின் கடாட்சத்தையும் பெற்றுச் செல்ல நாளையே நீ அரசவைக்கு வா!'' என்று கூறினார் அந்த முதுமைச் சிற்பி.

தேவநாதன் ஒரு புன்னகையுடன் சற்றே திரும்பி ராஜவல்லியைப் பார்த்தான். பொய் சொன்னவனின் மீது கோபம் கொண்டிருந்தாள் அவள்; ஆனால், அதுவும் பொய்க் கோபந்தான். அவள் நெற்றியில் துலங்கிய குங்குமச் சிவப்பும், குருதியின் சிவப்பும், கன்னத்திலே ஒளிவிட்ட நாணத்தின் சிவப்பும் அன்று கண்ட ஆலம் பழத்தை நினைவூட்டின சிறந்த சிற்பியான தேவநாதனுக்கு.

# மேலும் மலிவானது!

குடும்பம்
முழுவதற்கும்
ஒரே டால்க்








## ப்ரோடெக்ஸ்

சர்வ பிரயோக டாய்லட் பவுடர்

ஜயன்ட்ஸைஸ் அழகிய
பட்டுடன் கிடைக்கும்!

---

# ராலேயை விட நல்லதை நீங்கள் வாங்க முடியாது



## ராலே



உலகமெங்கும்
பிரசித்தி
பெற்ற
ஸைக்கிள்






## 77. புல்நடுக்கி!

"தூச்சிக்காலும் தூச்சிக்கையும்
கூன்முதுகும் தேசப்பர்லும்
தான[ய்] வளர்ந்ததோ உன்னைத்
தர்சன் பண்ணினுனே!..."

இப்படி ஒரு பாட்டைப் பாடிக் கொண்டே எதிர்வீட்டு ராயர் தம் வீட்டின் முன் வராந்தாவில் குறுக்கும் நெடுக்குமாக நடைபோடுவார். என்னைப் பார்த்துக் கேலி செய்வதற்காகத்தான் இவர் இந்தப் பாட்டைப் பாடுகிறுர் என்று என் வீட்டில் உள்ள எல்லோரும் ஒருமுகமாக அபிப்பிராயப்பட்டனர்.

'ஐயோ பாவம்! இவர்களுக்கு ஏன் இந்த வீண் கவலை! ஒல்லியாயிருக்கும் என்னைப் பார்த்து உள்ளதைச் சொல் வதில் கோபப்பட என்ன நியாயம் இருக் கிறது? இந்த ஜடங்களுக்குச் சொன்னல் சமாதானம் ஏற்பட்டால் தானே!'

எத்தனை நாட்களுக்குத்தான் இவர் களது அந்த மனக் குறையைச் சகிப்பது? எனக்கே ஒரு கனிவு பிறந்தது. பேரன் தொங்கரங்குவை அழைத்து ஒரு பாட் டைப் பாடச் சொல்லிக் கொடுத்தேன்.

"காறரடைத்த பனுனுக்குக்
காறுங்கையும் வைத்துபோல்
ஊவச்சதைபோட நீயும்
உண்பது எனன?"

வீட்டின் கேட்டினருகிலேயே நின்று கொண்டு ராயர் தலையைக் காணும்போ தெல்லாம் தொங்கரங்கு அந்தப் பாட் டைப் பாடுகிறுன். பலன் போகப் போகத்தான் தெரியவேணும்.

அருவருப்பான காட்சியைக் காண்பது கண்ணுக்கு அளிக்கப்படும் ஒரு தண்டனை தான். கம்பங்கொல்லைப் பொம்மை போல இருக்கும் ஒரு மனிதனை யாருக் குத்தான் பார்க்கச் சகிக்கும்?

உண்மை. பார்க்கச் சகிக்காதுதான்.

யுக்தமான அளவு வளர்ச்சியும் புஷ்டி யும் உள்ளவனுக்கு டைபாய்டு போன்ற வியாதியின் விளைவாகச் சரீரம் மெலிந் திருந்தால் அதைக் கவனிக்க வேண்டி யது அவசியந்தான்.

பிறந்த நாள் முதல் ஒல்லியான சரீர மாகவே இருப்பது சிலருக்கு இயல்பு; உடம்புவாசி. இவ்வித உடல் மெலி வைப் போக்கிப் புஷ்டியை அளிக்க முடியுமா? இயற்கையாக அமைந்த தைத் திருத்த முடியுமா? ஆயினும் இதிலும் ஒரு ரகசியம் இருக்கிறது.

ஒரு செடியை வைத்துப் பயிராக்கு கிறோம். செடி நேராக நிமிர்ந்து வளர ஒரு கொழுகொம்பை நட்டு, அத் துடன் செடியைக் கட்டி வைக்கி றோம். தக்க சமயத்தில் அச்செடியின் பக்கக் கிளைகளைக் கத்திரித்து விட்டுச் செடி நேராகப் பக்கவாட்டில் பரவாமல் உயரத்தில் வளர வாய்ப்பளிக்கிறோம். அச்செடி கோணல் மாணலாக வள ராமல் நிலைத்து நிமிர்ந்து ஒழுங்காக வளரத்தானே கொழுகொம்பு? அதே போல் வளரும் பிராயத்திலிருப்பவனுக் குச் சில சிறிய உதவிகளைச் செய்வோ மாகில் சரீரம் புஷ்டியாக வளரக்கூடிய வாய்ப்பு ஏற்படும்.

இதற்கு அனுகுணமான உபாயம் எண்ணெய்க்குளி. சாதாரணமாகக் குழந்தைகளுக்குத் தினசரி எண்ணெய்க் குளி செய்விக்கும் பழக்கத்தை அந்தக் காலத்தில் கொண்டிருந்தனர். இப் பழக்கம் இன்று கூடச் சில இடங்களில் இருக்கிறது.

'இது என்ன ஸார் ஒரு மூடப் பழக் கம்?' என்போர் சிலர். 'என்ன ஐயா! நீங்கள் குழந்தையாயிருந்தபோது உங்க ளுக்குத் தினந்தினம் எண்ணெய்க்குளி செய்வித்தனரே! அதென்ன மூடத் தனமா?' என்று கேட்டாலோ...? அதெல்லாம் வேறு விஷயம்! 'இப்போது இது இக்குழந்தைக்குக் கூடாது. வேணு மானல் முட்டையின் வெண் கருவை உடம்புக்குத் தேய்த்துக் குளிப்பாட் டுங்கள்' என்று கூறுவார்கள்.

கை கால்கள் சூம்பி, எலும்புகளெல் லாம் 'எண்ணிக் கொள்! எண்ணிக் கொள்!' என்று பார்ப்பவர் கண்ணில் உறுத்தும் நிலை. உடம்பில் எலும்புக்கு மேலிருப்பது சருமந்தான். இதுவும், உட லுக்கு மேலணிந்த பட்டுச் சட்டை; அதி லும் அண்ணுவின் சட்டையைத் தம்பி அணிந்த திருக்கோலத்தில், தொள தொள வென்று. அவ்விதம் சரும மும் தொள தொள வென்று மடிப்புக ளுடன் தொங்கலாடிக் கொண்டிருக்கும் நிலை. குழந்தையின் முகத்திலோ முற்றிப் போன களை; முந்திரிப்பழத்தின் சாயல். வாய் கொள்ளாமல் பற்கள். குழந்தை உட்காரவும் சக்தியற்றதாய்—தவளை யின் இனத்தைச் சேர்ந்த தேரை என் பதைப்போல்—படுத்தபடிதான் இருக்

கும். வயசு மூன்று. இந்நிலையில் வயிறு மட்டும் கல்லுப்போல் இருக்கும். அல்லது வயிற்றின் மேற்புறத்திலும் மடிப்புகள் விழுந்த சருமம், இவ்வகை குழந்தைகளுக்கு மீன் எண்ணெயை மேலே பூசி— சிறிது நேரம் இளம் வெய்யிலில் கிடத்தி வைத்துப் பிறகு குளிப்பாட்டும்படி ஆலோசனை யளிப்பர். இதன் விளைவு...? வீட்டைச் சுற்றி ஒரு பர்லாங்கு, இல்லே, இல்லே 200 கிலோ மீட்டர் வட்டத்தில் மூக்கைத் துளைக்கும் அளவு மீன் எண்ணெயின் நாற்றம். மேஜை நாற்காலி, பாய் படுக்கை, பாத்திரம் பண்டம்— எதைத் தொட்டாலும் மீன் நாற்றம். எப்படியோ வீட்டிலுள்ளவர் எல்லாரையும்-துணிமணி உடைகள் உட்பட-இந்த நாற்றம் கப்பிக் கொள்ளும். ரொம்ப அழகாகத்தான் 'டிப் டாப்பாக' உடுத்திக்கொண்டு காரியாலயத்துக்குச் செல்வார் அந்த வீட்டின்வாசி. ஆனால் அவரை அடுத்து வேலே பார்ப்பவரெல்லாம் முகத்தைச் சுளித்துக் கொள்வர். இது மீன் எண்ணெயின் பிரபாவம். இதைப் போற்றிப் புகழ்ந்து பிறருக்குச் சிபாரிசு செய்யும் பெரியோர், கைக் குழந்தைப் பருவத்தில் தினசரி எண்ணெய்க் குளி செய்விக்கும் பழக்கத்தைக் குறைகூறிப் பழிக்கச் சிறிதும் தயங்க மாட்டார். ஏனெனில் அவரது அப்பாவும் தாத்தாவும் ஒன்றுமறியாத 'அப்பாவிகள்' அல்லவா? அவருக்கு நான் சொல்ல விரும்பும் விஷயம் ஒன்றுதான்.

இயற்கையளித்த வளருஞ்சக்தி உச்ச நிலையிலிருக்கும் பிராயத்தில் எண்ணெய்க் குளி உடல் வளர்ச்சிக்கு மிகவும் நல்லது. அதன் பிறகு...? கிடைத்த வளர்ச்சியும், புஷ்டியும், பலமும், சகிப்புச் சக்தியும் தேய்வுற்றுக் குறையாமல் இருக்க எண்ணெய்க் குளியைத் தொடர்ந்து செய்து வருவதுதான் முறை. தேகக்கட்டு பலம் - சகிப்புச் சக்தி ஆகியவை இயற்கையாகவே தேய்வுறும் முதுமைப் பிராயத்திலோ? இவற்றைக் காப்பாற்றிக் கொள்வதற்காக எண்ணெய்க் குளிப்பழக்கத்தைத்தொடர்ந்து வைத்துக் கொள்ள வேண்டும்.

ஆகவே, இயல்பாகவே மெலிந்த சரீரம் பெற்றவருக்கானாலும் சரி! இடைக் காலத்தில் வந்த உடல் இளைப்பானாலும் சரி! முதற் காரியமாக எண்ணெய்க் குளிப்பழக்கத்தை ஏற்பதுதான் இதற்குச் செய்யக் கூடிய சிறந்த பரிகாரம். இதற்குத் துணை புரியும் வகையில் ஏதாவது மருந்துகளும் — ஆகாரங்களும் உபயோகிக்கலாம்.

மருந்துகளைச் சொல்வதாயின்,... 'ஜனிஞைபைல்' என்ற விஷயத்தைப் பற்றி எழுதிய கட்டுரையின் கீழ் தெரிவித்த அசுவகந்தா லேஹியம் — கூஷ்மாண்ட ரஸாயனம் ஆகியவை நல்லது. அகேநமாக இவற்றுக்கு நிகர் என்று கூறக் கூடியது சியவனப்பிராச ரஸாயனம் என்ற மருந்துதான்.

அமுக்கிராங் கிழங்கில் நாட்டு அமுக்கிராங் கிழங்கு, சீமை அமுக்கிராங் கிழங்கு என்று இரண்டு வகை யுண்டு. இதில் சீமை அமுக்கிராங் கிழங்கு ஏற்கத் தக்கது. தேர்ந்த அமுக்கிராங் கிழங்கைச் சுத்தமாகக் கழுவி வெய்யிலில் உலர்த்திப் பாலில் வேகவிட வேண்டும். சிறு துண்டுகளாக நறுக்கிப் பாலும் ஜலமும் கலந்து தீயில் இட்டுக் கொதிக்க வைத்து வேக விடுவது நல்லது. மெல்லிய துணியில் இத்துண்டுகளை மூட்டையாகக் கட்டி, பாலில் இட்டுக் கொதிப்பித்து வேக விடவும் செய்யலாம். பிறகு இதை வெய்யிலில் உலர்த்தி மிகமிக நுண்ணிய பொடியாக இடித்து வைத்துக் கொண்டு வயதுக்குத் தக்கபடி ஒரு சிட்டிகை முதல் ஒரு டீஸ்பூன் அளவு வரையில் நெய்யுடன் குழைத்தோ— ஒரு சொட்டு எள்ளெண்ணெயுடன் உருட்டியோ — வெந்நீருடனே — பாலுடனே கலக்கியோ சேவித்தல் மிகவும் சிறந்தது.

இளம் பயிருக்கு மழை எப்படியோ அப்படி இவ்விதம் சாப்பிடும் அமுக்கிராங் கிழங்கு மெலிந்த சரீரத்துக்குப் புஷ்டியைக் கொடுக்கும் என்கிறது சாஸ்திரம்.

இந்த அமுக்கிராங் கிழங்கு சூரணத்துடன் சமன் எடை மூங்கிலுப்பு என்பதின் சூரணத்தையும் பேருக்குச் சிறிது சுக்கையும் கூட்டிய சூரணத்தைப் பாலில் கலக்கிக் குடிப்பது 10-12 வயதுக்கு மேற்பட்டவருக்கு நல்ல பலனை யளிப்பது. 'அந்தச் சுக்கு மட்டும்தான் சிறிது வித்தியாசத்தைத் தருகிறது. மற்றப்படி இது 'ஓவல்'தான்' என்னும் பொருள்பட ஒரு நேயர் தெரிவித்துள்ளதை இங்கு நினைவூட்டுகிறேன்.

மேற்சொன்ன விதம் தயாரித்த அமுக்கிராங் கிழங்கு ஒரு பலம், தனியா, சோம்பு இவை வகைக்குக் கால் பலம், சுக்கு ஏலரிசியின் சூரணம் வகைக்கு அரைக்கால் பலம் என்ற அளவில் தயாரித்த ஒரு சூர்ணம். இதில் அரை, ஒரு டீஸ்பூன் அளவை எடுத்துப் பாலிலிட்டுக் கரைத்துத் தேவைக்குத் தக்கபடி சர்க்கரையும் சேர்த்துக் கலக்கித் தினம் ஒன்று இரண்டு வேளை குடித்து வருபவருக்கு உடல் புஷ்டியும் கலகலப்பாகத் தனக்குள் இலேசாக உள்ள தோற்றமும் உண்டாகும். (தொடரும்)

# கால்கேட் குளோரோபில்* ஈறுகளை பலப்படுத்துகிறது

## வைத்திய சோதனை நிரூபிக்கிறது!



**ஈறுகளைப் பலப்படுத்து கிறது!**

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை வழக்கமாகத் தேய்ப்பதால், குளோரோபில் மூலம் அது ஈறுகளைப்பலப்படுத்துகிறது.

**வாய் நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது!**

வேறு சாதாரண பற்பசையை விட மிக மிகத்தீவிரமாக வாய்நாற்றத்தை கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் ஒழிக்கிறது என்பது ருசுவான உண்மை.

**சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது!**

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை ஒவ்வொரு முறையும் சாப்பிட்டவுடன் தேய்ப்பதால் பல் எனாமலை அரிக்கும் நாச அமிலங்களும், அவற்றை விளைவிக்கும் கிருமிகளும் குறைகின்றன!

**வேறு எந்த பற் பசையிலும் இதை விட அதிக வீரிய குளோரோபில் இல்லை!**




* நீரில் கரையும் குளோரோ-பிலின்ஸ் சேர்ந்தது.

**இதோ!** பெரிய எக்கானமி அளவில் கிடைக்கிறது

விசாலம்

# விசால மனம்!

ஒரு விதமாகப் பெற்றுப் பிழைத்து எழுந்தாயிற்று. குழந்தை அவனது அப்பாவின் அச்சு தத்ரூபம்! பாட்டி சொல்வாளே, "பிரும்மா அந்த அச்சையும் மண்ணையும் எங்குதான் வைத்திருக்கிறுனே?" என்று. அதன் அர்த்தம் இப்போதுதான் புரிகிறது. பிறந்த குழந்தைகள் எல்லாம் ஒரே மாதிரி இருக்கும் என்று நான் இத்தனை நாட்கள் நினைத்துக் கொண்டிருந்தது எவ்வளவு தப்பு! எல்லாக் குழந்தைகளும் என் ரகுவுக்கு ஈடாகுமா?




குழந்தை பிறந்து ஒரு மாதமாகிவிட்டது. பச்சை உடம்பில் புது ரத்தம் ஊறி விட்ட தெம்பில் இன்று இருக்கிறேன். அவருடைய நினைவும், ரகுவின் முகமும் இன்று கிளுகிளுப்பை ஏற்படுத்துகின்றன. ஆனால் ஒரு மாதத்துக்கு முன்பு நான் இப்படியா இருந்தேன்? உலகத்தில் நான் சபிக்காதவர்கள் பாக்கியிடையாது. அவரைக் கூட — அவரைக்கூட என்ன, — முக்கியமாய் அவரைத்தான் நான் வாய் திறந்து சபித்துக் கொண்டிருந்தேன். "சீ! வாயை மூடு! உலகத்தில் யாரும் படாத நோவை நீ மாத்திரம் பட்டு விட்டதைப் போல் ஆகாத்தியம் செய்யாதே!" என்று அம்மா கோபமாக என்னை விழித்துப் பார்த்தது இன்னும் நினைவில் இருக்கிறது.

பாவம்! அவர் கடிதத்துக்குமேல் கடிதம் போட்டு ஆறுதல்கள் கூறி வந்தார். திருச்சியிலுள்ள சிந்தாமணிக்கும், பம்பாயிலுள்ள மாதுங்காவுக்கும் இடையில் எத்தனை கடிதப் போக்குவரவுகள்! இன்று நினைத்தாலும் வெட்கமாக இருக்கிறது!

என்னுடைய கஷ்டங்களையும் பெருமையையுமே சொல்லிக் கொண்டிருக்கிறேனே. பாவம்! அப்பாவும் அம்மாவும் எவ்வளவு சிரமப்பட்டுவிட்டார்கள், சென்ற சில மாதங்களில்? அம்மாவுக்குச் சரீரத்தாலும் மனத்தாலும் எவ்வளவு வேலை? அப்பாவுக்குத்தான் எத்தனை பணச் செலவு? பெண்ணைப் பெற்று வளர்த்துப் படிக்க வைத்துப் பிறகு கல்யாணமும் செய்து வைத்து, அதன் பிறகும் பிரசவச் செலவுகளையும் கவனிக்க வேண்டுமா? கூடாது. இதைப் பற்றி அவருக்கு எழுத வேண்டும்.

விஜயராகவன்

இந்த வருஷம் பம்பாயில் மழை என்ன இப்படிப் பெய்கிறது? திருச்சியில் இருந்தால் வருஷத்துக்கு வருஷம் வெய்யில் அதிகம் என்போம். தில்லியில் உள்ளவர்கள் குளிர் அதிகமாகிக் கொண்டு வருகிறது என்பார்கள். போகட்டும். என் கவலையெல்லாம் இந்த இரவு விமானம் மழையில் மாட்டிக்கொண்டு சேதப்படாமல் வந்து சேரவேண்டுமென்பதுதான்! விசாலத்தின் கடிதங்கள் இன்று வரை ஒன்று கூடத் தவறியதில்லை. கடிதங்களைத்தான் அவள் எவ்வளவு தத்ரூபமாகப் படம் பிடித்ததுபோல் எழுதுகிறாள்? குழந்தை ரகுவைப் புகைப்படம் எடுத்து அனுப்பு என்று எழுதி இருந்தேன். அவள் அவனை வர்ணித்து எழுதி இருந்ததைப் படித்தவுடன் குழந்தையை நேரே பார்ப்பது போலவே இருந்ததே!

விசாலம் நல்ல பெண். அவளுடைய பெயருக்கேற்றபடி பெரிய கண்கள்; அதைவிட அவளுடைய மனம் விசாலமானது. பிரசவத்தின்போது எத்தனை கஷ்டப்பட்டாளோ? அதைப் பற்றி ஒரு வரிகூட எழுதவில்லையே அவள்! ஒவ்வொரு கடிதத்திலும், 'ஓட்டல் சாப்பாடு உடம்புக்கு ஒத்துக் கொள்கிறதா?' 'மழையில் நனையாதீர்கள்', மின்சார ரயிலில் கதவுக்கருகில் நின்று பிரயாணம் செய்யாதீர்கள்', 'வெள்ளிக்கிழமை தவறாமல் மகாலக்ஷ்மி கோவிலுக்குப் போய்த் தரிசனம் செய்துவிட்டு வாருங்கள்' என்று எனக்குப் புத்திமதி சொல்லிக் கொண்டே இருக்கிறாள்.

விசாலத்தின் தகப்பனார் தமது சக்திக்கு மீறித்தான் செலவு செய்திருக்க வேண்டும், இந்தப் பிரசவத்துக்கு. என் மாமனார் ஒரு சங்கோசி. என் மாமியாருடைய சாமர்த்தியம் அவருக்கு வராது. தலைக்கு மேலே கடனைச் சுமந்திக்கொண்டு சிரமப்படுவார். இந்த மாதம் நல்லவேளையாக ஆபீஸில் போனஸ் கொடுத்தார்கள். இன்றே நானூறு ரூபாய் அனுப்பி விடுகிறேன்.

★

சிந்தாமணி
1—6—58

அருமை வசந்தாவுக்கு,

ஆசி பல. உன்னுடைய உருக்கமான கடிதத்தை ஒரு முறைக்குப் பலமுறை படித்தேன். அதைத் தவிர வேறு நான் என்ன செய்ய முடியும்? இந்த வீட்டில், எனக்கு நீ ஆதரவு, உனக்கு நான் ஆதரவு என்ற நிலையில்தான் வசித்து வந்தோம். அப்பாவுக்கும் அம்மாவுக்கும் ஏன்தான் இவ்வளவு பராமுகம் என்பது சரியாக விளங்காத ஒரு புதிர். "கல்யாணம் செய்துகொள்வதென்றால் வசந்தாவைத்தான் செய்து கொள்வேன்; இல்லாவிட்டால் நான் நைஷ்டிக பிரும்மச்சாரிதான்!" என்று பீஷ்மப் பிரதிக்ஞை செய்ததை என் பெற்றோர்கள் விரும்பவில்லை என்பது உண்மைதான். என்னுடைய தாயாருக்கு அவளுடைய தமையன் பெண்ணை என் காலில் கட்ட வேண்டுமென்று ஆசை. என் நண்பருக்கு அவர் பெண்ணின் கையை நான் பிடிக்க வேண்டுமென்ற அவா. இவர்களை மீறி நான் என்னுடைய கல்லூரி நண்பனுடைய தங்கையாகிய உன்மீது ஆசை வைத்தது அவர்களுக்கு ஓரளவு ஏமாற்றமாகத்தான் இருக்குமென்று நினைத்தேன். பழி வாங்கும் எண்ணம் அவர்களுக்கு உண்டாகி விட்டதோ என்று நாம் சந்தேகப்படும் அளவுக்கு அவர்கள் இப்போது நடந்துகொள்வது ஆச்சரியத்திலும் ஆச்சரியம்!



வாழ்க்கையில் கஷ்டப்படுகிறவர்களுக்குத்தான் தங்களைப் போன்ற பிறர்படும் துயரத்தின் சிரமம் தெரியுமென்பார்கள். அந்த உண்மைகூட இங்கு பொய்யாகிப் போனது நமது துரதிர்ஷ்டம்தான். அப்பாவின் போதும் போதாததுமான வருமானத்தில், ஒன்றும் பிரமாதமாகச் சாதிக்க முடியாவிட்டாலும் அவசரத்துக்கு இருநூறு அல்லது முந்நூறு ரூபாய் புரட்ட முடியாத கேவல நிலை இல்லை.

ராஜ்ய சர்க்கார் ஊழியரான உன்னுடைய தகப்பனார் ஐந்து பெண்களுக்குக் கல்யாணம் செய்து கொடுத்ததே ஒரு அதிசய சாதனை. அதற்குமேல், பிரசவத்துக்கு வரும் பெண்களுக்கு வேண்டிய சகலத்தையும் செய்து அந்தச் செலவையும் ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று எதிர்பார்ப்பது அநாகரிகம். பிரசவத்தின் போது பெண் தாய் வீடு போக வேண்டியதுதான். அங்கு பல சௌகரியங்கள் உண்டு. ஆனால் அதற்கு ஆகும் முக்கிய செலவுகளைப் புருஷன் வீட்டார் தருவதுதான் பண்பு என்பது என் கொள்கை.

என் கொள்கை என்று சொன்னேன்? என்னுடையது மாத்திரம் அல்ல. விசாலத்தின் கணவன், மாப்பிள்ளை விஜயராகவன் கூட அதே கருத்துக் கொண்டவன் என்று நேற்று அறிந்தேன். விசாலம் எழுதிக் கேட்டாளோ, அல்லது அவனே சிந்தித்துப் பார்த்தானோ, எனக்குத் தெரியாது. நேற்று அப்பாவின் பேருக்கு நானூறு ரூபாய் தந்தி மணியார்டர் பம்பாயிலிருந்து வந்தது. அப்போது நினைத்துக் கொண்டேன். எனக்கும் உத்தியோகம் ஒன்றிருந்து மாதம் இருநூறு அல்லது முந்நூறு சம்பளம் இருந்தால் நான் எப்படிச் சுயேச்சையாக நடந்து கொள்ளுவேன் என்று. கல்லூரியிலேயே காதலித்து, உத்தியோகம் கிடைக்குமுன்பே தகப்பனாகி விட்டால் இப்படித்தான் சிரமப்பட வேண்டும் போலும்! வரும் வாரம் சென்னையில் உள்ள மத்திய சர்க்கார் காரியாலயம் ஒன்றிலிருந்து உத்தியோகப் பேட்டி ஒன்றை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். அத்துடன் சிறு கதைப் போட்டி ஒன்றுக்கு நான் கதை அனுப்பியுள்ளேன். அதன் முடிவும் அடுத்த வாரம் வெளியாகும். பேட்டியும் போட்டியும் எனக்குச் சாதகமானால் பிறகு நமக்கு நாமே ராஜாதான்.

நம்முடைய பெண்ணரசியைப் பற்றியோ அல்லது உன்னுடைய உடல் நிலையைப் பற்றியோ அன்பாக ஒரு வார்த்தை கூடக் கடிதத்தில் எழுதவில்லையே என்று நீ கோபிக்க மாட்டாய் என்று நம்புகிறேன். வரும் வாரம் நேரில் வந்து என் மனத்தைத்

திறந்து காட்டுவேன். கதைகளில் எழுதுவது போலக் கற்பனைகளை உன்விஷயத்தில் எழுத முடியுமா? உண்மை அன்பை உள்ளங்கள் தானே அறிந்து கொள்ள வேண்டும்?

விசாலத்தின் பையன் பெரிய போக்கிரியாகஇருப்பான்போல் இருக்கிறது! ஏக ரகளை செய்கிறான். விசாலம் ஒருத்திதான் எப்போதாவது தன் மன்னியை நினைத்துக் கொள்ளுகிறாள்.

மற்றவை நேரில்

உன் அன்புள்ள,
சாமிநாதன்

★



யாழ்ப்பாணம் நாவலன் வாழ்ந்த நல்லூரிலே மங்கையர்க்கரசி வித்தியாலயத்தில் பாரதி விழா வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. இவ்விழாவுக்கு யாழ்ப்பாணத் தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவர் திரு க. தி. சம்பந்தன் அவர்கள் தலைமை வகித்தார்.

''யாரது? தர்மு மாமியா? ஏது இந்தப் பக்கம்? அத்தி...''

''அத்தியும் பூக்கவில்லை. ஆகாசத் தாமரையும் மலரவில்லை. இந்தப் பக்கம் வர வேண்டுமென்று நான் இரண்டு மாசமாகப் பார்க்கிறேன். ஓய்வு ஏற்பட்டால்தானே?''

''சொந்த வீடு கட்டிக்கொண்டு விட்டீர்கள்! இனிமேல் எங்களைப் போன்ற குடித்தனக்காரர்களிடம் முன்னைப் போலப் பழகுவீர்களா?''

''மீனாட்சி மாமி! கேலி செய்கிறீர்களா? செய்யுங்கள்! பதிலுக்கு நான் சொல்ல மாட்டேனா? ஒரே பெண்ணை நல்ல இடத்தில் கொடுத்து விட்டீர்கள். மாப்பிள்ளை பம்பாயில் இரண்டு கைகளாலும் சம்பாதிக்கிறான். பையனுக்கும் லக்ஷணமான பெண் வந்து வாய்த்திருக்கிறாள். பெண் வயிற்றில் பேரனும், பிள்ளை வயிற்றில் பேத்தியும் பிறந்தாயிற்று. உங்களைவிட ஐந்து வயது பெரியவளான நான் இன்னமும் மாப்பிள்ளைகளைத் தேடிக் கொண்டிருக்கிறேன்!''

''பிராப்தம் போலத்தானே நடக்கும்? நான் கல்யாணம் பண்ணிப் பார்த்து விட்டேன். நீங்கள் வீட்டைக் கட்டிப் பார்த்து விட்டீர்கள்.''

''அப்படி வாருங்கள் வழிக்கு! நமக்குள் வித்தியாசமில்லை என்று நீங்களே ஒப்புக் கொண்டு விட்டீர்கள்! அது சரி! விசாலத்தை எங்கே காணோம்? பட்டணத்திலிருக்கும் மருமகளும் பேத்தியும் சௌக்கியமா? கடிதம் போடுகிறார்களா?''

''விசாலம் என்னமோ பிறந்த குழந்தையோடு போட்டி போட்டுக் கொண்டு மணிக்கணக்காகத் தூங்குகிறாள். அவளை எழுப்பட்டுமா?''

''வேண்டாம். அவர்களே எழுந்திருக்கட்டும். வசந்தாவை எப்போது கொண்டு விடப் போகிறார்களாம்?''

''யார் கண்டா? இந்த மாதம் அனுப்பி வைத்தால் கூட நல்லதுதான். நான் கைக் குழந்தையையும் கைக்குழந்தைக் காரியையும் வைத்துக் கொண்டு திண்டாடுகிறேன். அவள் வந்தால் எனக்கு ஒத்தாசையாக இருக்கும்.''

''மீனாட்சி மாமி! மறந்துபோய் விடுகிறீர்களே! வருகிறவளும் கைக்குழந்தைக் காரிதானே!''

''நான் எங்கே தப்பாகப் பேசுகிறேன் என்று கண்குத்திப் பாம்பு போலக் கவனித்து மட்டம் தட்டி விடுகிறீர்களே!''

''இப்போது நீங்கள் சொன்ன கண்குத்திப் பாம்பு உபமானம் கூடச் சரியில்லை! போனால் போகட்டும். விசாலம் வந்து பிரசவித்ததில் உங்களுக்கு அதிகச் செலவு என்று கேள்விப்பட்டோம்.''

''என்ன செய்கிறது, தர்மு மாமி! நீங்கள் சொந்த வீடு கட்டி முடித்ததும் 'இனிமேல் செலவே இல்லை' என்று நினைத்தீர்களா? நினைக்க முடியுமா?''

''சரியான உபமானம் சொல்லி விட்டீர்கள். சொந்த வீட்டில் வாடகைப் பணம் மிச்சமாவதில்லை. அந்தப் பணம் எப்படியோ செலவாகிக் கொண்டுதான் இருக்கிறது.''

''அதேமாதிரிதான் பெண்ணை ஒருவன் கையில் பிடித்துக் கொடுத்தவுடன் எல்லாக் கவலைகளும் ஓய்ந்து விடுவதில்லை. சம்சார சாகரத்தில் கவலைகள் என்னும் அலையைத் தவிர வேறு என்ன இருக்கிறது?''

''பேஷ்! உபமானங்களை அள்ளி வீசுகிறீர்களே! இந்தப்பிரசவத்துக்குச் சுமார் எவ்வளவு செலவாகி இருக்கும்? எப்படிச் சமாளித்தீர்கள்?''

''கிட்டத்தட்ட ஐந்நூறு ரூபாய் ஆகி இருக்கிறது'' என்றார் அவர். சமா

ளிப்பது என்ன பிரமாதம்? நம்முடைய குழந்தைக்கு நாம் செய்வதில் சிக்கனம் பார்க்க முடியுமா? ஆபத்து என்றால் நாம் கையைக் கட்டிக் கொண்டு சும்மா யிருக்க முடியுமா?''

''ஐந்நூறு என்றால் கொஞ்சம் அதி கம்தான். மாப்பிள்ளை பம்பாயில் பெரிய கம்பெனியில் வேலையாய் இருக்கிறாரே. ஏதாவது ஒத்தாசை செய்தாரா?''

''அவரைப் போய் நாம் கேட்க முடியுமா, மாமி?''

''கேட்டால் நன்றாக இருக்குமா? அவரே தான் தெரிந்து அனுப்ப வேண்டும். இந்தக் காலத்துப் பிள்ளைகளுக்கு ஜம்பம் அதிகமாயிற்றே!''

''தர்மு! நீங்க சொன்னது நூற்றுக்கு நூறு உண்மை. எங்கள்சாமிநாதன் இந்த நிமிஷம் பட்டணத்துக்குஇருநூறுரூபாய் அனுப்பவேண்டும், வசந்தாவின் அப்பாவும் அம்மாவும் செலவுக்கு என்ன செய்வார்கள் என்று பரிந்து கொண்டு வந்தான். இவருடைய இரக்க சுபாவம்தான் உங்களுக்குத் தெரியுமே! மறுபேச்சு பேசாமல் இருநூறு ரூபாய் மணியார்டர் அனுப்பி விட்டார்.''

''இரக்க சுபாவம் உங்களுக்கு மாத்திரம் இல்லையா? நீங்கள் கஷ்டப்படக் கூடாது என்று உங்கள் மாப்பிள்ளை நினைத்தது போல் வஸந்தாவின் பிறந்தகத்து மனிதர்கள் கஷ்டப்படக் கூடாது என்று சாமிநாதன் நினைத்தது நியாயம்தானே...குழந்தையின் குரல் கேட்கிறதே. விசாலமும் விழித்துக் கொண்டு விட்டாளா, பாருங்கள்.''

★

**மாத்ருபூதம்**

நான் தூங்குவதாக நினைத்துக் கொண்டு இரண்டு சிநேகிதிகளும் வம்பளந்தார்கள். தர்மு அம்மாள் தர்ம நியாயமாகத்தான் பேசினாள். இவள் நாக்கிலே நரம்பில்லாமல் வாய் கூசாமல் எப்படிப் பேசினாள்? பொய் பேசுவது கௌரவம் என்று நினைத்து விட்டாளோ? இவள் இப்படிப் பேசியிருக்கா விட்டால், தர்மு மாமி பெண், மருமகள் இரண்டு பேருக்குமுள்ள ஒற்றுமையை அப்படி எடுத்துக் காட்டி இருக்க முடியாது. சாமிநாதன் கெஞ்சினபோது நானும் கல்நெஞ்சனாகத்தானே இருந்தேன்! மீனாட்சி பெருமைக்காகச் சொன்ன பொய்யை இப்போதே நிஜமாக்குகிறேன். பட்டணத்துக்கு இருநூறு ரூபாய் அனுப்பி விடுகிறேன்.

# தமிழ் கூறும் நல்லுலகம்

அக்டோபர் இரண்டாந் தேதி மாலை கரக்பூர். இளைஞர் மன்றத்தின் சார்பில் தேச பிதா மகாத்மா காந்திஜியின் பிறந்த தின விழா திரு எம். வி. ராவ் தலைமையில் நிகழ்ந்தது. மன்றத் தலைவர் திரு சுந்தரராமன் அனைவரையும் வரவேற்றார். காந்திஜியின் வாழ்க்கை வரலாறு பற்றியும், குணநலன்கள் பற்றியும் திரு எம். ஜி. சாரியார், திரு ராம மூர்த்தி, திரு பரமசிவம், திரு ஆறுமுகம், திரு ஹரிஹரன், திரு சீனிவாசன், திரு சிவராஜன் முதலியோர் ஆங்கிலத்திலும், தமிழிலும் சொற்பொழிவாற்றினார்கள். திரு இலக்குமணன் இன்னிசை வழங்கினார். இளஞ் சிறார்களுக்குத் தின்பண்டங்கள் வழங்கப் பட்டன. மன்றக் காரியதரிசி திரு கே. வி. செல்லம் நன்றியுரை கூற, நாட்டுப் பாடலுடன் விழா இனிது முடிவுற்றது.

★

ஆசியாவிலேயே மிகப் பெரிய உரத் தொழிற்சாலை அமைந்துள்ள சிந்திரியில், இவ்வாண்டு மிகச் சிறப்பாகப் பாரதிவிழா பாரதி மன்றத்தின் சார்பில் கொண்டாடப் பட்டது. அழகாக அலங்கரிக்கப்பட்ட பாரதியார் படத்தின் முன்பு பேச்சு, நாடகம் நாட்டியம் முதலிய நிகழ்ச்சிகள் நடைபெற்றன. பாரதியாரைப்பற்றி ஆங்கிலம், தமிழ், இந்தி முதலிய மொழிகளில் முறையே திரு வானர் தாத்தம், திரு தேனப்பன், திருமதி ஜெயராமன் ஆகியோர் சிறப்பாகப் பேசினார்கள். திருமதி சேஷாத்திரி அவர்கள் பாரதியாரின் கண்ணன் பாட்டை அடிப்படையாக வைத்து, சிறுமிகளைக் கொண்டு நாட்டிய நாடகமொன்றை நடத்தினார். திருமதி ஜானகி சுப்பிரமணியம் அவர்கள் பாரதியாரின் ''பாஞ்சாலி சபத''த்தை அடிப்படையாகக்கொண்டு எழுதிய நாடகமும் நடிக்கப்பட்டது. சபையில் கூடியிருந்த அனைவரும் இரு நாடகங்களையும் ரசித்துப் பாராட்டினர்.

★

கடந்த 2-10-58 அன்று பம்பாய் தமிழர் மன்றத்தின் சார்பில் திரு ரா. முருகேசன் தலைமையில் காந்திஜயந்தி மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. தலைவர் தமது உரையில் வள்ளுவன் வகுத்த வாய்மொழிக்கு எடுத்துக் காட்டாக விளங்கியவர் காந்தியடிகள் என்றார்.

திரு அ. முருகையா, திரு கோ. ராஜன், திரு ரெ. முருகையா முதலியவர்கள் காந்தியின் பெருமையை எடுத்துரைத்தனர்.

Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam.

# புதுமைப் பொலிவையும் வனப்பையும் உங்களுக்களிப்பது ஹிமாலயா புக்கே




[illegible]

**ஹிமாலயா புக்கே ஸ்நோ**




[illegible]

**ஹிமாலயா புக்கே டாய்லெட் பவுடர்**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon